


# மின்தமிழ்மேடை

தமிழரின் தொல்லியல் தடயங்களை மீட்போம்!

27



தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு

வெளியிடும் காலாண்டிதழ் காட்சி: 27 அக்டோபர் -2021

https://www.tamilheritage.org/

பொறுப்பாசிரியர்: முனைவர் தேமொழி

## தலையங்கம்: தமிழரின் தொல்லியல் தடயங்களை மீட்போம்

• • • முனைவர் க.சுபாஷிணி

வணக்கம்.



அனைவரையும் தமிழ் மரபு அறக்கட்டளையின் ஆய்வுக் காலாண்டிதழின் ஊடாகச் சந்திப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

கடந்த 3 மாதங்களில் குறிப்பிடத்தக்க சாதனைகளை நிகழ்த்தியிருக்கின்றது தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு. அவைபற்றிய செய்திகளை உங்களுடன் பகிர்ந்து கொள்வதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

தமிழக வரலாற்றுக்குச் சிறப்பு சேர்க்கும் மைசூர் ஆவணப்பாதுகாப்பகத்தில் வைக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்களை மீட்டுக் கொணரும் நோக்கத்தோடு தொடரப்பட்ட வழக்கு மதுரை உயர்நீதிமன்றக் கிளையில் விசாரிக்கப்பட்டு தமிழக வரலாற்று ஆய்வாளர்களுக்கு மகிழ்ச்சி அளிக்கும் வகையில் தீர்ப்பு வழங்கப்பட்ட நிகழ்வு 19.8.2021 அன்று நிகழ்ந்தது. தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு இந்த வழக்கினை நடத்த வேண்டும் என்ற சிந்தனையை 2017ம் ஆண்டு முதல் திட்டமிட்டு, 2018ம் ஆண்டு திரு. கௌதம சன்னா அவர்களது உதவியுடன், திரு.காந்தி அவர்களது ஆலோசனையின் படி மூத்த வழக்கறிஞர் நாடாளுமன்ற உறுப்பினர் திரு.என்.ஆர்.இளங்கோ அவர்களது உதவியுடன் இந்த வழக்கைத் தொடங்கினோம். இவ்வழக்கிற்குச் சாதகமான தீர்ப்பு வழங்கப்பட்டது என்பதோடு உண்மையில் எத்தனை கல்வெட்டுகள் இருக்கின்றன, என்ற கேள்விக்கு விடையாகக் கல்வெட்டுக்களின் எண்ணிக்கையும் இந்தத் தீர்ப்பு அறிக்கையில் வெளியிடப்பட்டிருப்பது முக்கியத்துவம் பெறுகிறது. இது இதுகாறும் நிலவி வந்த பல கேள்விகளுக்குச் சட்டப்பூர்வமான பதிலாகவும் அமைகிறது. கடுமையான முயற்சியை மேற்கொண்டு இவ்வழக்கு வெற்றியடைய உழைத்த நாடாளுமன்ற உறுப்பினர் மூத்த வழக்கறிஞர் திரு.என்.ஆர்.இளங்கோ அவர்களுக்கும், சாதகமான தீர்ப்பினை வழங்கிய நீதியரசர்கள் கிருபாகரன், துரைசாமி ஆகியோருக்கும் நன்றி கூற நாம் அனைவருமே கடமைப்பட்டுள்ளோம்.

கடந்த சில ஆண்டுகளாக ஒவ்வொரு ஆண்டும் ஆகஸ்ட் மாதம் 22ம் தேதி மெட்ராஸ் தின விழாவினை நாம் கொண்டாடுகின்றோம். இவ்வாண்டும் ஆகஸ்டு மாதத்தில்

வரலாற்று சொற்பொழிவுகள், கானா பாடல்கள், மெட்ராஸ் நகருக்குச் சிறப்பு சேர்க்கும் விளையாட்டுகள் பற்றிய செய்திகள் என்பனவற்றோடு மெட்ராஸ் பற்றிய ஆய்வு நூலான `மெட்ராஸ் 1726` என்ற தலைப்பிலான ஓர் ஆய்வு நூல் வெளியீடும், மெட்ராஸ் வரலாற்றில் தொழிற்சங்கத்தின் வளர்ச்சி மற்றும் மெட்ராஸில் அரசியல் தலைவர்கள் என்ற பல்வேறு தலைப்புகளில், ஆகஸ்ட் மாதம் 21,22 ஆகிய இரு நாட்கள் பல்வேறு நிகழ்ச்சிகளை நாம் ஏற்பாடு செய்து கொண்டாடினோம். இந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் இணையத்தில் நிகழ்த்தப்பட்டு அவை யூடியூப் பதிவுகளாக தமிழ் மரபு அறக்கட்டளையின் யூடியூப் சேனல் பக்கத்தில் இணைக்கப்பட்டுள்ளன. அன்றாட அலுவல்களுக்கு இடையே சென்னை பெருநகரில் ஒவ்வொரு நாளும் பயணித்தாலும் கூட, சென்னையில் இருக்கின்ற வரலாற்றுச் சின்னங்களை அடையாளம் கண்டு அறிந்து கொள்ளாதவர்கள் ஏராளம் பேர். அத்தகையோருக்குச் சென்னையின் வரலாற்றுச் சிறப்புக்களை அறிமுகப்படுத்தும் வகையிலும் இந்த நிகழ்ச்சி அமைந்திருந்தது.

ஆகஸ்ட் மாதம் 27ம் தேதி தமிழ் மரபு அறக்கட்டளையின் 20 ஆண்டுக்காலப் பயணம் நிறைவடைந்து 21ஆம் ஆண்டில் தடம் பதிக்கும் நிகழ்வினை உலகம் முழுவதிலுமிருந்து தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் உறுப்பினர்களும் ஆர்வலர்களும் இணைந்து சிறப்பித்தார்கள். 21 ஆண்டுகாலப் பயணத்தில் நமது அமைப்பு ஏற்படுத்தியுள்ள உலகளாவிய வரலாற்று விழிப்புணர்வு சார்ந்த நடவடிக்கைகளை நினைவு கூறவும் இந்த நிகழ்வு வாய்ப்பாக அமைந்தது.

மாமன்னர் ராஜேந்திர சோழன் பிறந்த நாளை அரசு விழாவாக தமிழ்நாடு அரசு இவ்வாண்டு அறிவித்தது. இது வரலாற்று ஆர்வலர்களுக்கு ஒரு மகிழ்ச்சி தரும் செய்தியாக அமைகின்றது.

உலகத் தமிழர்களைப் பொறுத்த வரையில் செப்டம்பர் மாதம் சமூகநீதிக்கான சிந்தனைகளைக் கிளர்ந்தெழச் செய்யும் மாதமாக அமைந்தது. இதற்கு முக்கிய காரணம், கடந்த நூற்றாண்டில் தமிழகத்தில் சமூக நீதிக்காகப் போராடிய, தங்கள் வாழ்நாளை அர்ப்பணித்த பெருந்தலைவர்கள் பிறந்த நாட்களும் நினைவு நாட்களும் இந்த மாதத்தை அலங்கரித்தன என்பதுதான்.

செப்டம்பர் 5ஆம் தேதி வ.உ.சிதம்பரனார் பிறந்த நாள்; செப்டம்பர் 5ஆம் தேதி அன்னை தெரசா நினைவு நாள்; செப்டம்பர் 11 மகாகவி பாரதியார் நினைவு நாள்; செப்டம்பர் 15ஆம் தேதி அறிஞர் அண்ணா அவர்களது பிறந்த நாள்; செப்டம்பர் 17ஆம் தேதி பெரியார் ஈ.வே ராமசாமி அவர்களது பிறந்தநாள்; செப்டம்பர் 17 ஆம் தேதி திரு.வி. கலியாண சுந்தரனார் அவர்களது நினைவு நாள், செப்டம்பர் 18ஆம் தேதி மூதறிஞர் ரட்டமலை சீனிவாசன் அவர்களின் நினைவு நாள் என முக்கிய தலைவர்களின் நினைவுகளை எழுப்பும் மாதமாக அமைந்தது.

தமிழ்நாடு அரசு செப்டம்பர் 17ஆம் தேதியை சமூக நீதி நாள் என இவ்வாண்டு அறிவிப்பை வெளியிட்டிருந்தது என்பதும் குறிப்பிடத்தக்கது.

இதனை மையமாகக் கொண்டு தமிழ் மரபு அறக்கட்டளையின் நிகழ்ச்சிகளும் வடிவமைக்கப்பட்டிருந்தன. இவையனைத்தும் தமிழ் மரபு அறக்கட்டளையின் செய்தி வலைப்பக்கத்தில் இணைக்கப்பட்டுள்ளன.



இவை தவிர தமிழக அரசு செப்டம்பர் மாதத்தில் நெதர்லாந்தில் பாதுகாக்கப்படுகின்ற சோழர் காலச் செப்பேடுகளை மீட்டுக் கொண்டுவர வேண்டும் என்ற செய்தியை செப்டம்பர் மாதம் அறிவித்திருந்தார்கள் என்பதைப் பலரும் அறிந்திருப்பீர்கள். இதற்குத் தொடர்புடைய வகையில் கடந்த ஆகஸ்ட் மாதம் நெதர்லாந்து லெய்டன் நூலகத்திற்கு நேரடியாகச் சென்றிருந்தபோது சேகரித்த தகவல்களை மையமாகக் கொண்டு நெதர்லாந்தில் உள்ள சோழர் காலச் செப்பேடுகள் என்ற தலைப்பிலான காணொளிப் பதிவு ஒன்றினையும் இம்மாதம் வெளியிட்டது தமிழ் மரபு அறக்கட்டளை.



மேலும் அக்டோபர் மாதம் 5ம் தேதி தமிழகத்தின் சென்னை அருங்காட்சியகத்தில் இந்த நெதர்லாந்து சோழர் காலச் செப்பேடுகள் பற்றிய ஒரு விழிப்புணர்வு கலந்துரையாடலையும் கல்லூரி மாணவர்களுக்கும் அருங்காட்சியக ஆணையர், அதிகாரிகள், பொதுமக்களுக்கு வழங்கினேன். இதன் தொடர்ச்சியாக அச்செப்பேடுகளை முறையாக நெதர்லாந்து அரசை அணுகிப் பெறுவதற்கான சாத்தியக் கூறுகளைத் திட்டமிடவும் கலந்துரையாடப்பட்டது.

மலேசியத் தமிழர்கள் வரலாறு பற்றிய ஓர் ஆவணப்பதிவாக்க முயற்சிக்கான கலந்துரையாடல் நிகழ்வும் இம்மாதம் நிகழ்ந்தது. அதன் தொடர்ச்சியாகத் தமிழ் மரபு அறக்கட்டளையின் மலேசியக் கிளைக்கான புதிய வலைப்பக்கம் (https://malaysia.tamilheritage.org/) செப்டம்பர் மாதத்தில் உருவாக்கப்பட்டது வெளியிடப்பட்டது.

இம்மாத இறுதியில் தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின் வெளியீடுகளாக ஐந்து நூல்கள் வெளிவர உள்ளன. இந்த ஆய்வு நூல்களை வாங்கி உங்கள் ஆதரவை வெளிப்படுத்துங்கள்.

தமிழால் இணைவோம்!

அன்புடன்
முனைவர்.க.சுபாஷிணி




*Attribution-NonCommercial-ShareAlike 4.0 International (CC BY-NC-SA 4.0)*

**மின்தமிழ்மேடை இதழ்கள் தொகுப்பு:**
**http://mintamilmedai.tamilheritage.org/wp/**

'மின்தமிழ்மேடை' இதழுக்கு தங்கள் படைப்புக்களை அனுப்ப விரும்புபவர்

mailto:editorthfjournal@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பலாம்

---



THE TEXT IN THIS ISSUE BY Tamil Heritage Foundation IS LICENSED UNDER A CREATIVE COMMONS ATTRIBUTION-SHAREALIKE 4.0 INTERNATIONAL LICENSE.

---

**குறிப்பு:**

தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் பதிப்பகப் பிரிவின் வெளியீடு இது. இந்த நூல் தமிழ் ஆய்வுப்புலத்தின் தேவை கருதி அனைவருக்கும் இலவசமாக வழங்கப்படுகிறது. இந்நூலை மறுபதிப்பு செய்ய விரும்புவோர் அல்லது ஏதாவது ஒரு வகையில் தங்கள் படைப்புகளில் பயன்படுத்த விரும்புவோர் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பினைத் தொடர்பு கொண்டு அனுமதி பெற்று உசாத்துணைகளை வழங்கி மீள்பதிப்பு செய்யலாம்.

- தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் பதிப்பகப் பிரிவு

~*~*~*~*~*~*

**கூகுள் புக்ஸ் தளத்தில் மின்தமிழ்மேடை இதழ்கள்**

https://tinyurl.com/mintamiledai

~*~*~*~*~*~*

இந்த இதழில் ...

**மின்தமிழ்மேடை - காட்சி: 27; அக்டோபர் – 2021**

# “தமிழரின் தொல்லியல் தடயங்களை மீட்போம்!”

(மின்தமிழில் ஜூலை 16 – அக்டோபர் 15, 2021 வரை பதிவான படைப்புகளின் தொகுப்பு)

*மின்தமிழ்மேடை: காட்சி-27 [அக்டோபர் - 2021]*
*இந்த இதழில் ....*

## 1• மீட்கப்பட்டத் தமிழ்க் கல்வெட்டுகளின் வரலாறு

• • • கௌதம சன்னா, மா. மாரிராஜன்

### தமிழகத்திற்கு மீளவிருக்கும் மைசூருவில் சிறைப்பட்டுள்ள தமிழ்க் கல்வெட்டுக்கள்-- கௌதம சன்னா

மைசூருவில் சிறைப்பட்டுள்ள தமிழ் கல்வெட்டுக்கள் முழுமையாக மீட்கப்படுமா..? மைசூருவில் அரை நூற்றாண்டுகளுக்கு மேலாக சிறைப்பட்டுள்ள தமிழ்க் கல்வெட்டுப் படிகளை மீட்க வேண்டும் என்று தொடரப்பட்ட வழக்கின் தீர்ப்பின் படி தற்போது கிடைத்தது. வழக்கில் வெற்றி என்றாலும் ஆவணங்கள் முழுமையாக மீட்கப்படும் என்கிற நம்பிக்கை சிதைந்திருக்கிறது என்பதை வெளிப்படையாக சொல்லித்தான் ஆக வேண்டும்.

மாண்புமிகு நீதியரசர்கள் சிறப்பான தீர்ப்பினை வழங்கியுள்ளார்கள் என்பது மகிழ்ச்சிக்குரியதாக இருந்தாலும் தீர்ப்பில் அவர்கள் சுட்டிக்காட்டியுள்ள செய்திகள் அதிர்ச்சியளிக்கும் விதத்தில் அமைந்திருக்கிறது. இந்த தகவலை வழக்கறிஞர் என்.ஆர்.இளங்கோ அவர்கள் தமது வாதத்தில் முன்வைத்தார். அதை நீதி மன்றம் வலியுறுத்தியுள்ளது.

அதன்படி 21.02.2018 அன்று தமிழ் கல்வெட்டுப்படிகள் 38,000 ம் என்று சுட்டிக்காட்டிய இந்தியத் தொல்லியல் துறை 21.12.2020 அன்று அதன் எண்ணிக்கை 28,276 என்றும் 14.02.2021 அன்று 28,860 என்றும் குறைத்துக் காட்டியுள்ளது. அதே காலக்கட்டத்தில் சமஸ்கிருதக் கல்வெட்டுப்படிகளை முதலில் 11,000 என்றும் பிறகு 17,001 என்றும் கடைசியாக 25,756 என்றும் உயர்த்திக் காட்டியுள்ளது.

எனவே தமிழ்க் கல்வெட்டுப்படிகள் சுமார் 9,140 காணவில்லை என்று தெரியவந்திருக்கிறது என்பது அம்பலமாகியிருக்கிறது. கல்வெட்டுக்களை மீட்கும் இந்த வழக்கு தொடுக்கப்படாமலிருந்தால் இந்த உண்மையும் வெளி வந்திருக்காது. மத்திய அரசின் இந்த பாராமுகத்தையும் புறக்கணிப்பையும் எதிர்கொள்ள வேண்டியது நம் ஒவ்வொருவர் முன்னுள்ள கடமை..

கல்வெட்டுப் படிகளை மீட்கும் முனைப்பில் தமிழக அரசு உறுதியாக இருப்பது மகிழ்ச்சியளித்தாலும், மறைக்கப்பட்டுள்ள மீதமுள்ள கல்வெட்டுப்படிகளை மீட்க தமிழக அரசு முன்வர வேண்டும் என்பதையும் வலியுறுத்துகிறேன். குறிப்பாக விடுதலைச்சிறுத்தைகள் கட்சியின் நாடாளுமன்றத் தேர்தல் அறிக்கையில் இந்த பிரச்சினையைத் தேர்தல் வாக்குறுதியாக வைக்கப்பட்டுள்ளது என்பதை இங்கே வலியுறுத்த விரும்புகிறேன்.

**தீர்ப்பின் நகல்**: https://www.mhc.tn.gov.in/judis/index.php/casestatus/viewpdf/785328

**குறிப்பு: இதழின் இறுதியில் பின்னிணைப்பாக தீர்ப்பின் நகல் இணைக்கப்பட்டுள்ளது**



## மீட்கப்பட்டத் தமிழ்க் கல்வெட்டுகளின் வரலாறு: மா.மாரிராஜன்

மீட்கப்பட்டத் தமிழ்க் கல்வெட்டுகளின் வரலாறு ...
ஏறக்குறைய ...

1887 ஆம் ஆண்டு முதல் தமிழகம் முழுவதும் உள்ள கோவில்களில் இருந்த கல்வெட்டுகள் படியெடுக்கும் பணிகளை ஆங்கிலேயர்கள் தொடங்கினார்கள். இவர்களால் படியெடுக்கப்பட்ட கல்வெட்டுகளின் மைப்படிகள் அனைத்தும் முதலில் ஊட்டியிலும், பிறகு சென்னையிலும் பாதுகாக்கப்பட்டு, இறுதியில் மைசூர் தொல்லியல்துறை அலுவலகத்தில் பாதுகாக்கப்பட்டது. சுமார் 60000 கல்வெட்டுப் படிகளில், மிகக் குறைந்த அளவே வெளியிடப்பட்டது. மீதமுள்ள தமிழ் கல்வெட்டுகளை வெளியிடவேண்டும் என்பது பல வருடக் கோரிக்கை...

இந்தச் சூழலில் மைசூரில் உள்ள தமிழ்க் கல்வெட்டுப்படிகள் போதிய பராமரிப்பின்றி அழிந்து வருவதாக தொடர்ந்து குற்றச்சாட்டும் எழும்பியது. மைசூரில் உள்ள தமிழ் கல்வெட்டுகள் சென்னைக்கு இடமாற்றம் செய்ய வலியுறுத்தி உயர்நீதிமன்றத்தில் வழக்குகள் தொடர முயற்சி மேற்கொள்ளப்பட்டது.

இதற்கான முதல் முயற்சியைத் தமிழ் மரபு அறக்கட்டளை மேற்கொண்டது.
(பார்க்க:
https://books.google.co.in/books?id=rUFWDwAAQBAJ&lpg=PP1&pg=PA20#v=onepage&q&f=false கல்வெட்டில் அரசியல்)

தமிழ் மரபு அறக்கட்டளையின் நிர்வாகக்குழு கூட்டத்தில் வழக்குத் தொடர்வது குறித்து ஆலோசிக்கப்பட்டது.
(பார்க்க:
https://books.google.co.in/books?id=rUFWDwAAQBAJ&lpg=PP1&pg=PA1#v=onepage&q&f=true)

அறக்கட்டளையின் நிறுவனர் சுபாஷிணி; செயலாளர் தேமொழி; வழக்கறிஞர் கௌதமசன்னா; வழக்கறிஞர் காந்தி பாலசுப்ரமணியன் ஆகிய குழுவினர் கூட்டத்தில் வழக்குத் தொடர முடிவு செய்யப்பட்டது. உயர்நீதிமன்ற மூத்த வழக்கறிஞர் திரு.என். ஆர். இளங்கோ அவர்கள் எந்தக் கட்டணமும் பெறாமல் ஆஜராக முன்வந்தார்.

திரு.கௌதமசன்னா மற்றும் திரு.பி.மணிமாறன் இருவரையும் மனுதாராகக் கொண்டு வழக்குத் தொடரப்பட்டது.
வழக்கு எண்: W.p.(md) no 20678 / 2019.
இவ்வழக்கில் வாதிட்டவர் மூத்த வழக்கறிஞர் திரு.என். ஆர். இளங்கோ

இதே கோரிக்கையைக் கொண்டு மேலும் ஒரு வழக்கைத் தாக்கல் செய்தவர் திரு. இளஞ்செழியன் (17399 / 2020)
வாதிட்டவர் மூத்த வழக்கறிஞர் திரு.சித்தார்த்த விஷ்ணு.
தமிழ்நாடு அரசு சார்பில் வழக்கறிஞர் திரு.வீரகதிரவன் மற்றும் வழக்கறிஞர் சரவணன் ஆகியோர் ஆஜரானார்கள்.
தொல்லியல் துறை சார்பில் மூத்த வழக்கறிஞர் திருமதி. விக்டோரியா கௌரி ஆஜரானார்.

மனுதாரர்கள் இருவர் சார்பாக நிறைவு வாதத்தை மூத்த வழக்கறிஞர் திரு.என். ஆர். இளங்கோ எடுத்துரைத்தார். ஏறக்குறைய 266 பக்க வரலாற்றுத் தரவுகளுடன் கூடிய ஆவணங்களை நீதிமன்றத்தில் தாக்கல் செய்து வாதம் செய்தார் திரு.என். ஆர். இளங்கோ. மைசூரில் உள்ள தமிழ் கல்வெட்டுகளை தமிழகம் கொண்டுவருவதன் அவசியத்தை மிகத் தெளிவாக சான்றுகளுடன் எடுத்துரைத்தார். வழக்கிற்குத் தேவையான அனைத்து ஆவணங்களையும் வழக்கறிஞர் திரு.காந்தி பாலசுப்ரமணியன் அவர்கள் சேகரித்துக் கொடுத்தார்.
வழக்கிற்குத் தேவையான ஆவணங்களை மா.மாரிராஜன், திருச்சி பார்த்தி, ஆறகழூர் வெங்கடேசன், பத்திரிகையாளர் சஃபிமுன்னா, வழக்கறிஞர்கள் அருண் மற்றும் திலக்குமார் ஆகியோர் கொடுத்தனர்.

தீர்ப்பும் சாதகமாகவே வந்தது. மைசூரில் உள்ள தமிழ் கல்வெட்டுப்படிகள் அனைத்தையும் சென்னைக்கு இடமாற்றம் செய்ய உயர்நீதிமன்றம் உத்தரவு பிறப்பித்தது. இந்த வரலாற்றுச் சிறப்புமிக்கத் தீர்ப்பை நீதியரசர்கள் திரு.கிருபாகரன் மற்றும் திரு.துரைச்சாமி அமர்வு வழங்கியது.

நீதிமன்றத் தீர்ப்பில்: தமிழ் மொழியின் சிறப்பு, பழமை, தமிழ் வழிக் கல்வியின் அவசியம், பெற்றோர்களுக்கு அறிவுரை, தொல்லியல் துறையின் குளறுபடி என அனைத்தையும் மேற்கோள் காட்டி தீர்ப்பு வழங்கப்பட்டது. தீர்ப்பின் முழு விவரம், எளிய தமிழில், கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே என்று ஆரம்பித்தனர் நீதியரசர்கள்...

கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன் தோன்றி மூத்தக்குடி;
தமிழ் மொழி இளமையானது மற்றும் மிகப்பழமையானது. பழங்காலம் முதல் இன்றைய நவீன காலம் வரை தமிழ் தொடர்ந்து பேசப்பட்டு வருகிறது. உலகத்தின் முதல் மொழி என்று கூற இயலாது என்றாலும் உலகத்தின் மிகப்பழமையான மொழிகளில் தமிழும் ஒன்று என நிச்சயமாகக் கூறலாம். தமிழ் மொழியானது கி.மு. 409 - 508 வரை காலக்கணிப்பை உறுதி செய்து அறிவியல் பூர்வமாக கரிமப்பகுப்பாய்வு மூலம் கீழடி உறுதி செய்தது. இந்தியாவின் மிகப்பழமையான மொழியாக மௌரியப் பேரரசர் அசோகர் கால பிராகிருத மொழி எழுத்தே கி.மு. 268 -232 என்று இதுவரை நம்பப்பட்டது. ஆனால், தமிழ் மொழி பிராகிருதத்தைக் காட்டிலும் பழமையானது என்று நிறுவப்பட்டது.

இந்நீதிமன்றம் 22.03.2021 அன்று ஒரு வழக்கில் தீர்ப்பு கூறியபோது கொடுத்த மேற்கோளை மீண்டும் நினைவுகூருகிறோம். "தமிழ் மொழி பழமையானது. சமஸ்கிருதத்தை விடப் பழமையானது. என்னால் வணக்கம் மட்டுமே தமிழில் சொல்லமுடிகிறது. இதற்கு மேல் செல்லமுடியாதது வருத்தம் அளிக்கிறது" இவ்வாறாகப் பாரதப் பிரதமர் திரு.நரேந்திர மோடி அவர்கள் குறிப்பிட்டார். பிப்ரவரி 2018 இல் டெல்லியில் நடந்த மாணவர்கள் விழாவில் குறிப்பிட்டார். இது மோடி அவர்களின் கருத்து மட்டுமல்ல. உலக மொழியியல் ஆய்வாளர்களின் கருத்தும் ஆகும்.

2500 ஆண்டுகளுக்கும் மேல் தமிழ் பழமையான மொழியாகும். அசோகரின் பிராகிருதத்தை முந்திச் சென்று, இந்தியாவின் பழமையான மொழி தமிழ் ஆகும். கீழடி எழுத்துக்கள் தமிழின் பழமையை மட்டுமல்ல, பழங்காலந்தொட்டே தமிழர்கள் எழுத்தறிவு பெற்றவர்கள் என்றும் கூறுகிறது. 2600 ஆண்டுகளாக தமிழ் மொழி பேசப்பட்டும் எழுதப்பட்டும் தலைமுறைகளைக் கடந்து வந்துள்ளது. இத்தனை சிறப்பு வாய்ந்த தமிழ் மொழியை இன்றைய மாணவர் சமுதாயம் புறக்கணித்து ஆங்கில வழியை நாடுவதும், இதற்குப் பெற்றோர் ஆதரவு இருப்பதும் எங்களுக்கு அதிர்ச்சியாகவும் வேதனையாகவும் உள்ளது. இதே போல் தாய்மொழி புறக்கணிப்பு வேறு எந்த மாநிலத்திலும் இல்லை.

இந்தியாவில் கண்டறியப்பட்டக் கல்வெட்டுகளில் மிகப்பழமையானதாக தமிழ் கல்வெட்டுகளே எனத்தெரிகிறது. தொல்லியல் துறை அளவீட்டின்படி அதிக எண்ணிக்கையில் இருப்பது தமிழ் கல்வெட்டுகளே என்பதும் உறுதியாகிறது. இக்கல்வெட்டுகள் அக்கால மக்களின் வரலாறு, நிர்வாகம், வாழ்வியல், வணிகம், போன்ற தகவல்களைத் தருகிறது. கல்வெட்டுகளும் ஓலைச்சுவடிகளும் வரலாற்று

மூலங்களாகும். இந்த தமிழ் கல்வெட்டுகள் மற்றும் மைப்படிகள் பாதுகாப்பு குறித்தே இவ்வழக்குத் தொடரப்பட்டது.

நாடு முழுவதும் உள்ள கல்வெட்டுகள் ஆங்கிலேயர்களால் கண்டறியப்பட்டன. காடு, மலை என்று அலைந்து திரிந்த அவர்கள் மிகக் கடினமான சூழலில் இக்கல்வெட்டுகளைக் கண்டறிந்து அவற்றைப் பதிவு செய்தார்கள். இப்பதிவுகள் அனைத்தும் மைசூரில் உள்ள The Archaeological Survey of India (ASI) அலுவலகத்தில் வைக்கப்பட்டன. மைசூரில் உள்ள கல்வெட்டுப்படிகளில் குறிப்பாக தமிழ் கல்வெட்டுகள் சரியாக பராமரிப்பின்றி இருப்பதாக மனுதாரர் குறிப்பிடுகிறார். கல்வெட்டுகள் அழியும் அபாயத்தில் உள்ளதாகவும் அச்சப்படுகிறார். Damaged , Destroyed and found to be Missing. இதற்குத் தீர்வு கேட்டே இவ்வழக்குகள் தொடரப்பட்டுள்ளது.
Petition (md) no 20768 of 2019 மற்றும் Md no 17399 Of 2020.

கல்வெட்டுகளை மைசூரிலிருந்து தமிழ்நாட்டுக்கு இடமாற்றம் செய்து பாதுகாத்து மின்னாக்கம் செய்ய வேண்டும். இதற்கு போதிய கல்வெட்டு ஆய்வாளர்களை ASI பணி நியமனம் செய்யவேண்டும். என்பது மனுதாரர் கோரிக்கை. எதிர் தரப்பில் தொல்லியல் துறை தாக்கல் செய்த எதிர் - பிரமாணப் பத்திரம் (Counter - Affidavit) மூலம் தமிழ் கல்வெட்டுகளின் எண்ணிக்கையே அதிகம் என்று தெரிகிறது. ஆனால் இக்கல்வெட்டுகளின் எண்ணிக்கையை தொல்லியல்துறை துல்லியமாக தரவில்லை.

21.02.2018 இல்..
தமிழ் கல்வெட்டுகளின் எண்ணிக்கை 38000.
சமஸ்கிருதக் கல்வெட்டுகளின் எண்ணிக்கை 11000.
என்ற விவரத்தைக் கொடுத்தது.

ஆனால்;
21.12.2020 இல்..
தமிழ் கல்வெட்டுகளின் எண்ணிக்கை 28276.
சமஸ்கிருதக் கல்வெட்டுகளின் எண்ணிக்கை 17001.
என்ற விவரத்தைக் கொடுத்தது.

இது பேரதிர்ச்சியாக உள்ளது. தமிழ் கல்வெட்டுகளின் எண்ணிக்கை எவ்வாறு குறைந்தது.?
14.07.2021 இல் டெல்லியில் உள்ள இந்தியத் தொல்லியல்துறை கலாச்சார அமைச்சகம் கொடுத்த அறிக்கையின்படி கல்வெட்டுகளின் எண்ணிக்கை தோராயமாக 74000. RTI கொடுத்த 38000 தமிழ் கல்வெட்டுகளில்..
28, 276 என்று ஏன் குறைத்துக் காட்டப்பட்டது? அதேபோல் 11000 சமஸ்கிருதக் கல்வெட்டுகள் எப்படி 17001 ஆக அதிகரிக்கப்பட்டது? தொல்லியல்துறை தொடர்ந்து முரண்பாடான (Contradictory) தகவல்களையே நீதிமன்றத்தில் தாக்கல் செய்துள்ளது.

தமிழ் கல்வெட்டுகள் மைசூரில் இருந்தால் அவை பாதுகாக்கப்படாது என்ற மனுதாரர் வாதத்தை நீதிமன்றம் ஏற்கிறது. தமிழ் கல்வெட்டுகள் பராமரிப்பின்றி அழிக்கப்படுவதாக மனுதாரர்கள் ஆதாரத்துடன் குற்றம் சாட்டுகிறார்கள். சமீபத்திய தொல்லியல்துறை வெளியீடான தென்னிந்தியக் கல்வெட்டுத்தொகுதி 41 ( S.i.i.vol.41) No 271( Are.488 of 1905) 272, 273, 274,275,276,277, 426,427,428,429,430.
இக்கல்வெட்டுகள் அனைத்தும் காணாமல் போய்விட்டதாக தொல்லியல்துறையே அறிவித்துள்ளது.

மேலும் பல கல்வெட்டுகளின் நிலை இப்படித்தான் உள்ளது. சரியான பராமரிப்பும் பாதுகாப்பும் இன்றி ஏராளமான தமிழ் கல்வெட்டுகளின் மைப்படிகள் அழிந்துபோனதை உறுதி செய்கிறோம். அடுத்த தலைமுறைக்கு இக்கல்வெட்டுகளைக் கொண்டு செல்ல தொல்லியல் துறை தவறிவிட்டது. கல்வெட்டுகளின் மைப்படிகளை மின்னாக்கம் செய்யும் முயற்சியாக தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகத்துடன் தொல்லியல் துறை புரிந்துணர்வு ஒப்பந்தம் செய்தும் இப்பணி கைவிடப்பட்டது.

2005 - 2006 ஆம் ஆண்டு ஆதிச்சநல்லூர் ஆய்வறிக்கையும் வெளியிடவில்லை. கண்டறியப்பட்ட படிமங்களைக் காலக்கணிப்பும் செய்யவில்லை. இதுகுறித்து மனுதாரர் காமராஜ் அவர்கள் தொடர்ந்த வழக்கு W.p.no.13096 2012.
ஆதிச்சநல்லூர் ஆய்வாளர் திரு.சத்தியமூர்த்தி அவர்கள் ஆதிச்சநல்லூர் படிமங்களைக் காலக்கணிப்பு செய்யவோ, ஆய்வறிக்கை வெளியிடவோ மத்திய அரசு ஆர்வம் காட்டவில்லை என்று வாக்குமூலம் அளித்தார். எனவே மாநில அரசுக்கு இந்நீதிமன்றம் கோரிக்கை வைத்தது. ஆதிச்சநல்லூர் படிமங்களைக் காலக்கணிப்பு செய்ய நடவடிக்கை எடுக்க பரிந்துரை செய்தோம்.

இவ்வாறான பல காரணங்களால்; மைசூரில் உள்ள தமிழ் கல்வெட்டுகளின் மைப்படிகள், செப்பேடுகளின் பதிவுகள் மற்றும் அனைத்துத் தமிழ் தொல்லியல் ஆவணங்கள் அனைத்தும் மைசூரிலிருந்து சென்னைக்கு இடமாற்றம் செய்ய உத்தரவு பிறப்பிக்கிறோம்.

அரபி மற்றும் பர்சியன் மொழிக் கல்வெட்டுகளின் அலுவலகம் நாக்பூரில் உள்ளது.
சமஸ்கிருத மொழிக் கல்வெட்டுகள் அலுவலகம் லக்னோவில் உள்ளது.
இந்தோ - ஆரிய மொழியான சமஸ்கிருதத்துக்கே தனிப்பிரிவு அலுவலகம் இருக்கும்போது எண்ணிக்கையில் அதிகம் உள்ள தமிழ் மொழிக் கல்வெட்டு அலுவலகம் இல்லை.
அதை திராவிட மொழிக் கல்வெட்டுகளுடன் ஏன் இணைத்து வைத்துள்ளீர்கள்?

தமிழ் மொழிக் கல்வெட்டுகளுக்கும் தனி அலுவலகம் வேண்டும். சென்னைப்பிரிவு - Epigraphy Branch Tamil என்று பெயர் மாற்றம் செய்யப்பட வேண்டும். இங்கு தமிழ் மொழியின் அனைத்துத் தொல்லியல் ஆவணங்களும் பாதுகாக்கப்பட வேண்டும்.

போதுமான கல்வெட்டியல் பிரிவு ஆய்வாளர்கள் பணியமர்த்தப்பட வேண்டும். இதையே பேராசிரியர் இராஜவேலு தலைமையில் அமைக்கப்பட்ட குழுவும் பரிந்துரை செய்கிறது.

மேற்கண்ட காரணங்கள்; மற்றும் இந்திய அரசியல் அமைப்பு சட்டம் Article 51 - A Constitution of india 1949; மற்றும் Article 49 /1949
மேலும் உச்ச நீதிமன்ற உத்தரவுகளை மேற்கோள் காட்டி இந்த உத்தரவைப் பிறப்பிக்கிறோம். இந்த உத்தரவு பிறப்பிக்கப்படும் தேதியிலிருந்து 6 மாதக் காலத்திற்குள்..
"மைசூரில் இருக்கும் அனைத்துத் தமிழ் கல்வெட்டுகளின் மைப்படிகள் அனைத்தும் சென்னைக்கு மாற்றப்படவேண்டும்". அவ்வாறு மாற்றப்படுவதால் கீழ்க்கண்ட நன்மைகள் இருக்கும் என்று நீதிமன்றம் கருதுகிறது. ஆய்வாளர்கள் மற்றும் வரலாற்று மாணவர்களுக்கு சென்னையில் மைப்படி இருப்பதுதான் வசதி. மைசூரில் இருப்பது தூரம் மற்றும் செலவு. மைசூர் செல்லுதல், தங்குதல் என்று வீண் அலைச்சல் மற்றும் தேவையற்ற செலவும் ஏற்படுகிறது.

ஓய்வு பெற்ற முதுநிலை தமிழகத் தொல்லியல் ஆய்வாளர்கள் அனைவரும் - சென்னையில்தான் உள்ளனர். இவர்கள் ஆய்வு வசதியாக இருக்க சென்னைதான் பொருத்தமாக இருக்கும். 60 சதவீதம் தமிழ்க் கல்வெட்டுகள் இன்னும் வெளியிடப்படவில்லை. இப்பணியை மேற்கொள்வதற்கு சென்னைதான் சரியான இடம். தமிழகத்தில் உள்ள 50,000 கோவில்களில் உள்ள கல்வெட்டுகள் பல்வேறு காரணங்களால் சிதைவுற்றன. இவற்றில் உள்ள செய்திகளை அறிய மைப்படிகள்தான் ஒரே தரவு. இவை 1887 முதல் படியெடுக்கப்பட்டுள்ளன. இவை அனைத்தும் தமிழ் கல்வெட்டுகள் என்பதால் இவை தமிழகத்தில்தான் இருக்கவேண்டும்.

ஆகவே...சென்னையில் தமிழ் கல்வெட்டியல் பிரிவு தொடங்கவேண்டும். இதற்கான அனைத்து ஏற்பாடுகளையும் தமிழ்நாடு அரசு ஏற்பாடு செய்யவேண்டும். மைசூரில் உள்ள அனைத்துத் தமிழ் கல்வெட்டு மைப்படிகள் மற்றும் அனைத்துத் தமிழ் ஆவணங்களும் சென்னைக்கு இடமாற்றம் செய்யவேண்டும். இவை வெளியிடப்பட வேண்டும். போதுமான கல்வெட்டியல் ஆய்வாளர்கள் பணிநியமனம் செய்தல் வேண்டும். போதுமான நிதியை மத்திய அரசு ஒதுக்கீடு செய்யவேண்டும். இந்த உத்தரவு பிறப்பிக்கப்பட்டத் தேதியிலிருந்து 6 மாதக் காலத்திற்குள் இப்பணிகள் நிறைவு பெறவேண்டும்...

W.p.( md) no 20678 of 2019 and 17399 of 2020.
N.KIRUBAKARAN...J
and
M. DURAISAMY....J

## 2 • உலகத்தமிழ்' திங்கள் மின்னிதழின் சங்கச் சுவடுகள் பகுதியில் - தமிழ் மரபு அறக்கட்டளை

• • • முனைவர் க.சுபாஷிணி

உலகத் தமிழ்ச் சங்கம் மதுரையின் 'உலகத்தமிழ்' திங்கள் மின்னிதழ் - 13 ஆவது (http://online.anyflip.com/tntjr/vssz/ ) திங்களிதழில் ...

தமிழ் மரபு அறக்கட்டளை பற்றிய செய்திகள்
பக் 20 -25 (6 பக்கங்களில்) முழு கட்டுரையாக!
இடம்பெறுகின்றன - வாசிக்கத் தவறாதீர்கள்






# தமிழ் மரபு அறக்கட்டளை (பன்னாட்டு அமைப்பு) - ஓர் அறிமுகம்

தமிழ் மரபு அறக்கட்டளை (த.ம.அ.) என்ற பன்னாட்டு அமைப்பின் (THFi) நோக்கம், செயல்பாடுகள் மற்றும் கொள்கை என்பது தமிழரின் மொழி, வரலாறு, பண்பாடு, நாகரிகம், மானுடவியல் மற்றும் சமூகவியல் ஆகியவற்றைப் பாதுகாக்க உதவும் ஆராய்ச்சி நடவடிக்கைகளில் கவனம் செலுத்துவதாகும். தமிழ் மரபு அறக்கட்டளை நிறுவனம் ஒரு வணிக நோக்கற்ற, அரசியல் மற்றும் அரசு சாராத அமைப்பாகவும் இயங்கி வருகின்றது (https://www.tamilheritage.org/). தமிழ் மரபு அறக்கட்டளை தனது தமிழ்ப்பணி பயணத்தில் இந்த ஆண்டுடன் 20 ஆண்டுகளை (2001–2021) நிறைவு செய்கின்றது.

தமிழ் மரபு அறக்கட்டளை அமைப்பு ஆகத்து 2001ஆம் ஆண்டு, அமைப்பின் தலைவர் முனைவர் க. சுபாஷிணி, முனைவர் ந.கண்ணன் மற்றும் சில நண்பர்களால் தமிழ் மரபுச் செல்வங்களை ஆவணப்படுத்துதல், மின்னாக்கம் செய்து இணையம் வழி தமிழ் ஆர்வலர்களுக்கு விலையின்றி அளித்தல், அழிந்துவரும் மரபுச் செல்வங்களைப் பாதுகாக்கும் முறைகளையும் தேவையையும் குறித்த கருத்தரங்கங்கள், பயிலரங்கங்கள் மூலம் மக்களிடம் வரலாற்றின் முக்கியத்துவம் குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்துதல் என்ற நோக்கத்தோடு தொடங்கப்பட்டது.

இன்று இந்தியாவில் இந்திய அறக்கட்டளைச் சட்டத்தின் கீழும் ஜெர்மனியிலும் மலேசியாவிலும் பதிவு செய்யப்பட்ட ஒரு பன்னாட்டு நிறுவனமாக, தன்னார்வலர்கள் உதவியுடன் தமிழ் நாடு, மலேசியா, இலங்கை ஜெர்மனி மற்றும் அமெரிக்க நாடுகளில் தனது பணிகளை முன்னெடுத்து வருகின்றது. தமிழார்வம் கொண்ட உலகத் தமிழர்களை ஒருங்கிணைக்கும் நோக்கில் இந்தியா, மலேசியா, இலங்கை, ஐரோப்பா நாடுகளில் கிளைகள் கொண்டு இயங்குகின்றது.

தமிழகத்தில் சோழர் காலக் கோயில் கட்டுமானங்கள், குடைவரைக் கோயில்கள், தமிழகத்தில் சமணம் தொடர்பான வரலாற்றுச் சின்னங்கள், சைவ, வைணவ, இஸ்லாம், கிருத்துவ வரலாற்றுச் சின்னங்கள் பற்றிய ஆய்வுகளும் காணொலிப் பதிவுகளாகத் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகின்றன. இவற்றோடு நகரங்களின் வரலாற்றைப் பாதுகாக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு ‘டிஜிட்டல் மெட்ராஸ்’ என்ற திட்டம் உருவாக்கப்பட்டுத் தமிழ்நாட்டின் தலைநகரமான சென்னையில் உள்ள ஏராளமான வரலாற்றுச் செய்திகள் ஆவணப்படுத்தப் பட்டுள்ளன. தமிழர் மரபு சார் தகவல்களையும் ஆவணங்களையும் மின்மயப்படுத்திப் பாதுகாக்கும் வகையில் 2001ஆம் ஆண்டு முதல் பல்வேறு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. தமிழகமெங்கும் ஓலைச்சுவடி தேடும் திட்டம் 2009–2010 காலகட்டத்தில் தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகத்துடன் இணைந்து செயல் படுத்தப்பட்டது. இதன்வழிச் சேகரிக்கப்பட்ட ஓலைகள் இத்திட்டத்தின் வரையறைப்படி தமிழ்ப்பல்கலைக்கழகத்திடம் ஒப்படைக்கப்

பெற்றன. இவை தமிழ் இணையக் கல்விக் கழகத்தினால் மின்னாக்கம் செய்யப்பட்டு இணையத்தில் இணைக்கப்படுகின்றன. இங்கிலாந்தின் பிரித்தானிய நூலகத்துடன் ஓர் ஒப்பந்தம் செய்யப்பட்டு அரிய பழம் நூல்கள் மின்னாக்கம் செய்யப்பட்டு வலையேற்றம் செய்யப்பட்டன. அதனை அடுத்து 2015ஆம் ஆண்டு டென்மார்க் கோப்பன்ஹாகன் அரசு நூலகம், 2016ஆம் ஆண்டு பிரான்சு நாட்டின் தலைநகரான பாரீசிலுள்ள பிரான்சு தேசிய நூலகம், 2018ஆம் ஆண்டு ஜெர்மனியின் ஹாலே நகரிலுள்ள பிராங்கன் நிறுவனம் ஆகியவற்றின் சேகரத்திலுள்ள அரிய ஆவணங்களையும் ஓலைச்சுவடிகள் சிலவற்றையும் மின்னாக்கம் செய்துள்ளது தமிழ் மரபு அறக்கட்டளை.

இந்த வகையில், ஆவணப்படுத்தும் முயற்சியாக அரிய தமிழ் நூல்களும் சுவடிகளும் மின்னாக்கம் செய்யப்பட்டு அவை தமிழ் ஆய்வுகளில் ஈடுபடுவோருக்குக் கிடைக்கும் வகையில் தமிழ்மரபு அறக்கட்டளையின் மின்னூலகத்தில் இணைக்கப்பட்டு வருகின்றது. தமிழ் மரபு அறக்கட்டளையின் மற்றுமோர் சமூக நலன் சார்ந்த திட்டமாக 'சுவலி' ஒலிப்புத்தக மென்பொருள் உருவாக்கப்பட்டுள்ளது(https://play.google.com/store/apps/details?id=com.cloudsindia.thfsuvali). நூல்களை ஒலிவடிவத்தில் கேட்டுப் பயன்பெறும் வகையில் இந்தத் திட்டம் உருவாக்கப்பட்டுள்ளது. நாட்டுடைமையாக்கப் பட்ட நூல்களும் ஆய்வுக் கட்டுரைகளும் இந்தத் திட்டத்தில் கைப்பேசி வழியாக ஒலிவடிவத்தில் இணைக்கப்பட்டு வருகின்றன.

தமிழகத்திலுள்ள சில பல்கலைக்கழகங் களுடனும் கல்லூரிகளுடனும் புரிந்துணர்வு ஒப்பந்தங்களை ஏற்படுத்தி அவர்களின்


**தலைவர் :**
**முனைவர் க.சுபாஷிணி**

**தொடர்புக்கு:**
ஜீஸ்லிங்கர் – 71229,
லியோன்பெர்க், ஜெர்மனி.
வலைத்தளம் :
www.tamilheritage.org
மின்னஞ்சல் முகவரி
ksubashini@gmail.com


சட்டதிட்டத்திற்கு உட்பட்டு மேற்கண்ட பணிகளைப் பரந்துபட்ட அளவில் மக்களிடம் கொண்டு செல்கின்றது. தமிழக அரசின் நிறுவனமான தமிழ் இணையக் கல்விக்கழகம், பல்கலைக்கழகங்கள் துணையோடு தொல்லியல் ஆய்வாளர்கள் மூலம் தமிழி, வட்டெழுத்து ஆகிய கல்வெட்டுப் பயிற்சிப் பட்டறைகளையும் நடத்தி வருகின்றது. தலைவர் முனைவர் க. சுபாஷிணி அவர்களின் தமிழ்ப் பணிகளைப் பாராட்டித் தமிழக அரசின் உலகத் தமிழ்ச் சங்க விருதுகளில் ஒன்றான 2016ஆம் ஆண்டுக்கான 'மொழியியல் விருது' தமிழக முதல்வரால் அளிக்கப்பட்டது.

தமிழ் மரபு அறக்கட்டளையின் பல்வேறு தொடர் நடவடிக்கைகளில் ஓர் உறுப்பாக இணையவழி சிறப்புச் சொற்பொழிவுகளும் கருத்தரங்கங்களும் கலந்துரையாடலும் அமைவது வழக்கம். தமிழ்மொழி வளர்ச்சி, தமிழ் இலக்கியம், தமிழர் பண்பாடு, தமிழக வரலாறு, தமிழகத் தொல்லியல் தரவுகள், தமிழர் நாகரிகம் குறித்த தமிழ்க் கருவூலங்களை அடுத்த தலைமுறைக்குக் கொண்டு செல்லும் நோக்கில் 'கடிகை' தமிழ் மரபு முதன்மை நிலை இணையக் கல்விக் கழகம்(https://academy.tamilheritage.org/) மூலம் தமிழின்

தொன்மை, மரபு, பண்பாடு, கலைச்செல்வங்கள், கல்வெட்டுகள் குறித்த பயிலரங்கங்கள், மரபுச் சுற்றுலாக்கள் ஏற்பாடு செய்து நடத்தி வருகின்றது. ஐரோப்பியத் தமிழியல் ஆய்வுகள் குறித்து அறியவும் கிழக்கு–தென்கிழக்கு ஆசியத் தமிழியல் ஆய்வுகள் குறித்து அறியவும் எனக் கடிகையில் புதிய துறைகள் இரண்டு உருவாக்கப்பட்டுள்ளன.

அவ்வாறே, தமிழ் இலக்கிய உலகம் வழங்கிய அருஞ்செல்வங்கள் குறித்தும் உலக அளவில் மக்கள் அறிந்திருக்க வேண்டும் என்பது தமிழ் மரபு அறக்கட்டளையின் நோக்கம். அந்த வகையில், தமிழ் மரபு அறக்கட்டளையின் 'சங்கம்பீடியா' எனும் வலைப்பக்கத் திட்டம் (https://sangathamizh.tamilheritage.org/) சங்க இலக்கியத்தை அனைவரும் அறிந்து கொள்ளவும் அதனைத் தமது ஆய்வுகளில் செய்யுட்களின் பொருள் அறிந்து பயன்படுத்தவும் அரும்பொருட்களின் பொருள் அறிந்து பயன்படுத்தவும் வாய்ப்பினை வழங்குகின்றது.

தமிழரின் தொன்மையைப் போற்றிப் பரப்பும் நோக்கில் தமிழ் மரபு அறக்கட்டளையின் "கீழடி தகவல் களஞ்சியம்"(http://keezhadi.tamilheritage.co.in/) கீழடி அகழாய்வு குறித்த தகவல்களை இணையத்தில் ஆவணப்படுத்தி வருகிறது. அருங்காட்சியகம் மூலம் தொல்லியல் பொருட்கள் மரபுச் செல்வங்கள் மக்கள் பார்வைக்குக் கொண்டு செல்லப்பட வேண்டும் என்ற கொள்கையை மக்களின் குரலாக அரசு நிறுவனங்களிடம் கவனத்திற்குக் கொண்டு செல்கின்றது.

தமிழ் மரபு அறக்கட்டளையின் பதிப்பகப் பிரிவு 2019ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. திருக்குறளுக்கான 2 ஜெர்மானிய மொழிபெயர்ப்பு நூல்களின் ஆங்கில முன்னுரையுடன் கூடிய மறுபதிப்புகள், 'திருவள்ளுவர் யார் ?', 'நாகர் நிலச்சுவடுகள்', 'அறியப்படவேண்டிய தமிழகம்', 'கீழக்கரை வரலாறு' ஆகிய நூல்கள் தமிழ் மரபு அறக்கட்டளையினால் வெளியிடப்பட்டுள்ளன. மேலும் 7 நூல்கள் தயாரிப்பு நிலையில் உள்ளன. தமிழர்கள் உலகளாவிய வகையில் புலம்பெயர்ந்து வாழ்வதாலும் சீனர்கள், அரேபியர்கள், தென்கிழக்காசிய மக்கள் தமிழகத்துடன் கொண்டிருந்த வணிகம் முதலிய தொடர்புகளாலும் ஐரோப்பியர்களின் ஆட்சிக் காலத்திலும் தமிழக மக்கள் தொடர்பான செய்திகளும் தரவுகளும் உலக நாடுகளிலும் பதிவாகியுள்ளன. தமிழ்ப் பண்பாட்டுத் தொடர்பு குறித்த ஜெர்மானியத் தொடர்புகளைக் கவனத்திற்குக் கொண்டு வரும் வகையில் 04.12.2019 அன்று ஜெர்மனியின் 'ஸ்டுட்கார்ட்' நகரில் உள்ள லிண்டன் அருங்காட்சியகத்தில் திருவள்ளுவருக்கான 2 ஐம்பொன் சிலைகள் நிறுவப்பட்டன. அத்துடன் திருக்குறளுக்கான 2 ஜெர்மானிய மொழிபெயர்ப்பு நூல்களின் ஆங்கில முன்னுரையுடன் கூடிய மறுபதிப்பு தமிழ் மரபு அறக்கட்டளையினால் வெளியிடப்பட்டது. அதே நிகழ்வில் குழந்தைகளுக்கான திருவள்ளுவர் பற்றிய செயலி ஒன்றும் வெளியிடப்பட்டது.

பெருந்தொற்று முடக்கக்காலமும் தமிழ் மரபு அறக்கட்டளையின் பணிகளை முடக்க

த.ம.அ. பன்னாட்டு அமைப்பு ஜெர்மனி பதிவு எண் – e.V. -VR 723912;
த.ம.அ. பன்னாட்டு அமைப்பு இந்தியா பதிவு எண் – Reg. No.98/2019;
த.ம.அ. பன்னாட்டு அமைப்பு மலேசியா பதிவு எண் – PPM–030–05–26102015.



இயலாது போனது. இணையம் தந்த வாய்ப்புகளைப் பயன்படுத்திக் கொண்டு தமிழரின் மரபுச் செல்வங்கள் குறித்துப் பல்வேறு பொருண்மையில் துறைவல்லுநர்களாலும் தமிழ் ஆர்வலர்களாலும் பல சிறப்புரைகளையும் கலந்துரையாடல்களையும் உலக மக்களுக்கு எடுத்துச் சென்றது. இவை யாவும் எப்பொழுதும் தமிழ் மாணவர்களும், ஆய்வாளர்களும், ஆர்வலர்களும் கண்டு பயன்பெறும் வகையில் 600க்கும் மேற்பட்ட காணொலிகளாக வலையொளி வழியாகச் செம்மையாக ஆவணப்படுத்தப்பட்டுள்ளன (https://www.youtube.com/THFi-Channel). மண்ணின் குரல் என்று மக்கள் கலைகள் (Folklore), இலங்கை, மலேசியா, ஐரோப்பா தமிழ் மரபுகள் குறித்த காணொலிப் பதிவுகள் கேட்பொலிப் பதிவுகள் என்றும் கட்டுரைத் தரவுகள் சேகரித்து ‘மரபு விக்கி’ என்ற அமைப்பில் ஆவணப்படுத்தப்பட்டு வருகின்றன. கடந்த 2017ஆம் ஆண்டு தொடங்கி, நலிந்துவரும் மரபுக் கலையான கைத்தறி நெசவுக்கு ஒத்துழைப்பு அளிக்கும் நோக்கில் ஒவ்வொரு ஆண்டும் கைத்தறிப் பாதுகாப்பு என்ற பொருளில் உலகம் முழுவதும் தமிழ் நெசவாளர்களின் கைத்தறி ஆடைகளைக் கொண்டு சேர்க்கும் முயற்சியைத் தொடங்கி உள்ளது.

இந்த முன்னெடுப்புகளின் வரிசையில் ஒன்றாக, ஈ–சுவடி என்ற யாஹூ இணையக் கலந்துரையாடல் குழுமம் தொடங்கப்பட்டு அங்கு மின்னாக்கச் செயல்பாடுகளின் தொழில் நுட்பக் கூறுகள் பற்றிக் கலந்துரையாடல்கள் நிகழ்த்தப்பட்டன. 2006ஆம் ஆண்டு மின்தமிழ் கூகுள் குழுமம் தொடங்கப்பட்டது. ‘கூகுள் மின்தமிழ் குழுமம்’ (https://groups.google.com/g/mintamil) உலகத் தமிழர்களை ஒன்றிணைக்கும் நோக்கில் இயங்கி வருகிறது. தமிழ் மரபு அறக்கட்டளையின் செய்தி ஊடகமான மின்தமிழில் பல்வேறு தலைப்புகளில் கலந்துரையாடல்கள் கட்டுரைகளும் தகவல்களும் என மேலும் பல புதிய உறுப்பினர்களுடன் தொடர்ந்து வளர்ந்து வருகின்றது. இந்த மடலாடற் குழுமமான மின்தமிழில் வெளியிடப்படும் தமிழ் மொழி,

வரலாறு, தொல்லியல் அகழாய்வுகள், மானுடவியல், சமூகவியல், பண்பாடு, சமயம் மற்றும் தமிழர் புலப்பெயர்வு ஆகிய துறைகளிலான தேர்ந்தெடுக்கப்பட்ட பதிவுகளும் ஆய்வுக் கட்டுரைகளும் தொகுக்கப்பட்டு 'மின்தமிழ்மேடை' என்ற காலாண்டு மின்னிதழாக, கடந்த ஆறு ஆண்டுகளாக 2015ஆம் ஆண்டு முதல் இதுவரை 26 மின்னிதழ்கள் வரை வளர்ந்துள்ளன (கூகுள் புக்ஸ் தளத்தில் – மின்தமிழ்மேடை இதழ்கள்: https://tinyurl.com/mintamiledai). தமிழ் 'திணை' மாத இதழ் என்ற செய்திமடல் மூலம் செயல்பாடுகளை மக்கள் கவனத்திற்கும் கொண்டு செல்கின்றது.

தமிழர் மரபுச் செல்வங்கள் குறித்த பல்கலைக்கழகங்களிலும் கல்லூரிகளிலும் 'தமிழ் மரபு மையங்கள்' தொடக்கத்துடன் உயராய்வு உரைத்தொடர்களையும் வழங்கி வருகின்றது. அத்துடன், தமிழர்களுக்கு வரலாற்று ஈடுபாடும் அருங்காட்சியகங்கள் பற்றிய விழிப்புணர்வும் இளம் வயதிலேயே ஊட்டப்பட வேண்டும் என்கிற அடிப்படையில் கல்லூரிகள் மற்றும் பள்ளிக்கூடங்களில் மாணவர் மரபு மையத்தைத் தோற்றுவித்து வரலாற்றுக் கண்காட்சிகளையும் பள்ளி அருங்காட்சியகத்தையும் ஏற்படுத்தி வருகின்றது. தமிழர் பாரம்பரிய மரபு விளையாட்டுகளை மீண்டும் இளம் தலைமுறையினருக்கு அறிமுகப்படுத்தி ஈடுபடுத்தும் வகையில் பினாங்கு மாநில அரசின் அழைப்பின் பேரில் கண்காட்சியைப் பொது மக்களுக்காக மலேசியாவின் பினாங்குத் தீவில் 2018ஆம் ஆண்டு ஏற்படுத்தி வெற்றிகரமாக நிகழ்த்தியது. உலக மொழிகளுக்கான வாரம் என்ற சிறப்பு நிகழ்ச்சியில் தமிழ் மொழி பற்றிய சொற்பொழிவும் தமிழ் நூல்கள் கண்காட்சியும் ஜெர்மனி ஸ்டுட்கார்ட் நகரில் நிகழ்த்தப்பட்டன.

வரலாற்றுச் சிறப்பு மிக்க உலக நகரங்களுள் ஒன்று என்ற பெருமை கொண்ட சென்னை நகரில் உள்ள பண்டைய தொன்மைச் சின்னங்களும் வரலாற்றுச் சின்னங்களும் ஆறுகளும் ஏரிகளும் குளங்களும் பல்வேறு காரணங்களால் விரைவில் மறைந்து வருவதை முன்னிட்டுச் சென்னை நகரின் வரலாற்றுச் சிறப்புகளை 'டிஜிட்டல் மெட்ராஸ் திட்டம்' (https://www.digital-madras.tamilheritage.org/) மூலம் ஆவணப்படுத்துவதுடன் சென்னை நாள் அன்று சென்னைக்கே உரிய உணவு, கலை, விளையாட்டு ஆகிய பண்பாட்டுக் கூறுகள் அடங்கிய கருத்தரங்கங்களும் நடத்தப் படுகின்றது. தமிழக வரலாற்றில் முக்கியத்துவம் பெறும் தொன்மைச் சின்னங்கள் உள்ள பகுதிகளுக்கு மரபுப்பயணங்களை ஏற்படுத்தி அனுபவமிக்க வரலாற்றாசிரியர்களின் துணையுடன் பொது மக்களுக்கு அவற்றின் வரலாற்றுச் சிறப்புகளை விளக்கும் வகையிலான விழிப்புணர்வு நடவடிக்கைகளையும் மேற்கொண்டு வருகின்றது தமிழ் மரபு அறக்கட்டளை.

தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பைச் சேர்ந்த உலகளாவிய தன்னார் வலர்களின் கூட்டு முயற்சியாக "வையத் தலைமை கொள்!" (https://ruletheworld.tamilheritage.org/) என்ற குழுமம் பெண்கள், குழந்தைகள் மற்றும் பாலியல் சிறுபான்மையினரை மையமாகக்கொண்டு

அவர்களது முன்னேற்றம், வளர்ச்சி மற்றும் அதிகாரம் ஆகியவற்றை மேம்படுத்துவதை முதன்மை நோக்காகவும் கொண்டு செயல்படுகின்றது. இலங்கையில் 'ஊவா' மாகாணக் கல்வி அமைச்சகத்தின் முயற்சிகளில் ஒன்றான தமிழ்ப்பள்ளிகளுக்குத் தமிழில் பெயர் சூட்ட வேண்டும் என்ற முயற்சியில் கருத்துரைகள் வழங்கி இந்த முயற்சி 2019ஆம் ஆண்டு சாத்தியப்பட உதவி உள்ளது.

இதன் வழி 140 தமிழ்ப்பள்ளிகள் சிங்களப் பெயர்களிலிருந்து தமிழ்மொழிக்கு அரசாணை வெளியிடப்பட்டு அதிகாரப்பூர்வமாக மாற்றம் கண்டன. தமிழ் மரபு அறக்கட்டளை இப்பொழுது தமிழர் தம் பிள்ளைகளுக்குத் தமிழ்ப்பெயர் சூட்டல் வேண்டும் என்ற விழிப்புணர்வு செயல்பாட்டையும் முன்னெடுத்து உள்ளது. தமிழ் மரபு அறக்கட்டளை என்ற எங்களது பன்னாட்டு அமைப்பின் குறிக்கோள் தமிழர் வரலாற்றுக்கு ஓர் அரண் என செயல்படுவதாகும்.

தமிழ் மரபுச் செல்வங்கள் குறித்த விழிப்புணர்வுகளை மக்களிடம் கொண்டு செல்லுதல், அவற்றைப் பாதுகாத்தல், ஆவணப்படுத்துதல், மின்பதிப்பாக்கி வலையேற்றுதல் ஆகிய நடவடிக்கைகளில் முழு மூச்சாக உலகத் தமிழ் ஆர்வலர்களை தமிழ் மரபு அறக்கட்டளை ஒருங்கிணைத்து இயங்கி வருகின்றது.

தமிழ் மரபு அறக்கட்டளை அமைப்புடன் இணைந்து தமிழ் மரபுச் செல்வங்கள் பாதுகாத்தல் ஆகிய தன்னார்வப் பணிகளில் ஈடுபட விரும்புவோர் மின்னஞ்சல் வழியாகவோ (mythforg@gmail.com), அல்லது முகநூல் பக்கம் வழியாகவோ (https://www.facebook.com/TamilHeritageFoundation), அல்லது தமிழ் மரபு அறக்கட்டளை அமைப்பின் செய்திகள் தளம் வழியாகவோ (https://thf-news.tamilheritage.org/) தொடர்பு கொள்ளலாம். மேலும் தகவல்களும் அறியலாம். தமிழால் இணைவோம்.









## 3 • கோப்பன்ஹாகன் சுவடிகளில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வு

*• • • முனைவர் க.சுபாஷிணி*

தமிழ் மரபு அறக்கட்டளை முனைவர் சுபாஷிணி அவர்களால் 2016ம் ஆண்டு டென்மார்க் கோப்பன்ஹாகன் நகரில் உள்ள அரச அருங்காட்சியகத்துடன் தொடர்பு கொண்டு அனுமதி பெற்றுக்கொண்டு, அங்கு நேரில் சென்று 4 நாட்கள் அங்கு சேகரிப்பில் உள்ள தமிழ் ஓலைச்சுவடிகளை மின்னாக்கம் செய்யப்பட்டது.

ஏறக்குறைய 1800 ஓலைகள் (தனி ஓலைகள்) - இவற்றுள் 4 சுவடி பனை ஓலை நூல் கட்டுகளின் மின்னாக்கப் படிமங்களை (டிஜிட்டல்) பாளையங்கோட்டை சதக்கத்துல்லா அப்பா கல்லூரி ஆய்வாளர்கள் தங்கள் ஆய்விற்குக் கேட்டுக் கொண்டதற்கிணங்க வழங்கினோம்.

பாளை கல்லூரியில் சிறப்பு கருத்தரங்கு

**தமிழகத்தில் பழங்கால மரபுகளை ஆவணப்படுத்தும் விழிப்புணர்வு இல்லை**

**ஜெர்மன் தமிழ்மரபு அறக்கட்டளை தலைவர் பேச்சு**

நெல்லை, டிச. 28: பழங்கால மரபுகளை ஆவணப்படுத்துவதில் வெளிநாட்டில் உள்ள விழிப்புணர்வு தமிழகத்தில் இல்லை என நெல்லை கல்லூரியில் நடந்த சிறப்பு கருத்தரங்கில் ஜெர்மனி தமிழ் மரபு அறக்கட்டளை தலைவர் பேசினார்.

பாளையங்கோட்டை சதக்கத்துல்லா அப்பா கல்லூரியில் தமிழ் மரபுகளை ஆவணப்படுத்தும் பன்னாட்டு கருத்தரங்கு நடந்தது. கல்லூரி தாளாளர் பத்ஹூர் ரப்பானி தலைமை வகித்தார். முதல்வர் சாதிக் வாழ்த்தி பேசினார். ஆட்சிக்குழுத் தலைவர் பல்லாக்கு லெப்பை, பொருளாளர் ஷேக் அப்துல்காதர் ஆகியோர் முன்னிலை வகித்தனர். ஜெர்மனி தமிழ் மரபு அறக்கட்டளை தலைவர் சுபாஷிணி கருத்தரங்கை தொடங்கி வைத்து தமிழ் மரபுகளை ஆவணப்படுத்துவது தொடர்பாக கல்லூரியுடன் புரிந்துணர்வு ஒப்பந்தம் செய்தார்.



பாளை சதக்கத்துல்லா கல்லூரியில் நடந்த கருத்தரங்கில் மரபு தமிழ் ஆய்வு கோவையை கல்லூரி தாளாளர் பத்ஹூர் ரப்பானி வெளியிட்டார்.

நிகழ்ச்சியில் அவர் பேசியதாவது: தொழில் நுட்ப மரபுகளை ஆவணப்படுத்துவது அவசியமாகும். நடுகல், கல்வெட்டுகள், ஓலைச்சுவடிகள், நாட்டார் இலக்கியம் போன்றவைகளை பாதுகாக்க வேண்டும். வரலாற்று சிறப்பு மிக்க நெல்லையப்பர் கோவிலில்கூட சில சிற்பங்கள் சிதைந்திருக்கின்றன.

கோவில்களை புனரமைக்கும்போது வட்டெழுத்துக்கள், வரலாற்று கவடிகள் அழிக்கப்படாமல் இருப்பது அவசியமாகும். நெல்லை மாவட்டம் திருப்புடைமருதூர் கோவிலில் மகத்தான மூலிகை ஓவியங்கள் உள்ளன. ஆனால் சிறப்புமிக்க அந்த ஓவியங்கள் மீது சிலர் தங்கள் பெயர்களை எழுதியும் கிறுக்கியும் வைக்கிறார்கள். இது தவறானது. கண்டனத்திற்குரியது.

புராதான சின்னங்கள் மீது நமக்கு தெளிவு இல்லை. மேலைநாடுகளில் புராதான சின்னங்கள், கல்வெட்டுகள், உள்ளிட்ட அடையாளங்களை ஆவணப்படுத்துவதிலும் பாதுகாப்பதிலும் மிகுந்த விழிப்புணர்வு உள்ளது. அந்த விழிப்புணர்வு இங்கு நம்மிடம் இல்லை. இங்கும் அனைவரிடமும் அந்த விழிப்புணர்வு வரவேண்டும்.

நவீன யுகத்தில் பழங்கால மரபுகளை, அடையான சின்னங்களை ஆவணப்படுத்துவது கடினமானது அல்ல. மிகவும் சுலபம். டிஜிட்டல் தொழில் நுட்பத்தில் அவற்றை புகைப்படமாகவும், கணினி மயமாகவும் மேலும் பல நவீன தொழில் நுட்பத்திலும் ஆவணப்படுத்துவது அவசியமாகும். இதில் ஆராய்ச்சியாளர்கள் மற்றும் மாணவர்களுக்கும் முக்கிய பங்கு உள்ளது. பழங்கால ஓலைச்சுவடி போன்றவற்றையும் தேடி கண்டுபிடித்து ஆவணப்படுத்த வேண்டும். இவ்வாறு அவர் பேசினார்.

நிகழ்ச்சியில் ஆதிச்சநல்லூர் பதிவுகள் குறித்து எழுத்தாளர் திவான், நவீன இலக்கிய பதிவுகள் குறித்து பேராசிரியர் சிவசு, நிழற்படங்கள் மூலம் ஆவணப்படுத்துதல் குறித்து தமிழ்குரு மற்றும் நெல்லை அருங்காட்சிய காப்பாட்சியர் சிவசத்தியவள்ளி ஆகியோர் பேசினர்.

பிற்பகல் பிரான்ஸ் நாட்டு முனைவர் அலெக்சிஸ் தேவராஜ், இலங்கை யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த பாக்கியநாதன் அகிலன், அன்புச்செல்வி, கொக்குவில் கணேச ஸ்ரீதரன் ஆகியோர் பேசினர். நிகழ்ச்சியில் புகைப்பட கண்காட்சி நடந்தது. முன்னதாக கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் மகாதேவன் வரவேற்றார். அரசு உதவி பெறா பாடப்பிரிவுகளின் தமிழ்த்துறைத் தலைவர் அனுசுயா நன்றி கூறினார்.

[பாளையங்கோட்டை சதக்கத்துல்லா அப்பா கல்லூரியுடன் புரிந்துணர்வு ஒப்பந்தம் செய்து ஆய்வுப் பணிகளைத் தொடங்கிய பத்திரிக்கை செய்தி]

தமிழ் பனை ஓலைச் சுவடிகளைக் கணினி எழுத்துணரி மூலம் படிக்கும் முறையை மேம்படுத்தும் வகையில் ...

எழுதும் முறையில் கிடைமட்டமாகவும், நெடுக்கிலுமாக எழுதப்படும் எழுத்துகளைத் தெளிவுபடுத்தும் வகையில் உருவாக்கப்பட்ட நிரல்கள் மூலம் 91% வரை தெளிவாகப் படிக்கும் முறைக்கு ஆய்வின் மூலம் வழி செய்துள்ளனர், சதக்கத்துல்லா அப்பா கல்லூரி ஆய்வாளர்களான எம். முகமது சாதிக் மற்றும் ஆர். ஸ்பர்கன் ரத்தீஷ் ஆகியோர்.

"International Journal of Innovative Technology and Exploring Engineering" என்ற ஆய்விதழில், "Optimal Character Segmentation for Touching Characters in Tamil Language Palm Leaf Manuscripts using Horver Method" என்ற தலைப்பில் வெளிவந்துள்ளது. இது தமிழ் மரபு அறக்கட்டளையின் பணிகளில் சிறப்பு பெறுகின்றது.

நாம் மின்னாக்கம் செய்த ஓலைகள் உலகளாவிய பல்கலைக்கழகங்களிலும் கல்லூரிகளிலும் ஆய்வுக்குட்படுத்தப்பட வேண்டும் என்பதைத் தமிழ் மரபு அறக்கட்டளை விரும்புகின்றது. பாளையங்கோட்டை சதக்கத்துல்லா அப்பா கல்லூரி இதற்கு நல்லதொரு உதாரணமாகத் திகழ்கின்றது.

கல்லூரியின் முதல்வர் டாக்டர்.சித்திக், இப்பணியில் ஆர்வத்துடன் ஈடுபட்ட ஆய்வாளருக்கும், நம் தொடர்பாளர் முனைவர் சௌந்தர மகாதேவன் அவர்களுக்கும் தமிழ் மரபு அறக்கட்டளையின் பாராட்டுக்களும் வாழ்த்துகளும்.

ஆய்வாளரின் ஆய்வுக் கட்டுரைகள் கிடைக்கப் பெற்றதும் அவை தனிவரைவு நூலாக (மோனோக்ராஃப்பாக) வெளியிடப்படும்.

தமிழ் பனை ஓலைச் சுவடிகளை கணினி எழுத்துணரி மூலம் படிக்கும் முறையை மேம்படுத்தும் வகையில் ...
எழுதும் முறையில் கிடைமட்டமாகவும், நெடுக்கிலுமாக எழுதப்படும் எழுத்துகளைத் தெளிவுபடுத்தும் வகையில் உருவாக்கப்பட்ட நிரல்கள் மூலம் 91% வரை தெளிவாகப் படிக்கும் முறைக்கு ஆய்வின் மூலம் வழி செய்துள்ளனர், பாளையங்கோட்டை சதக்கத்துல்லா அப்பா கல்லூரி ஆய்வாளர்களான எம். முகமது சாதிக் மற்றும் ஆர். ஸ்பர்கன் ரத்தீஷ் ஆகியோர்.

**"International Journal of Innovative Technology and Exploring Engineering" என்ற ஆய்விதழில், "Optimal Character Segmentation for Touching Characters in Tamil Language Palm Leaf Manuscripts using Horver Method"** என்ற தலைப்பில், வெளியான அவர்களுடைய ஆய்வுக் கட்டுரை இங்கே இணைக்கப்பட்டுள்ளது. அத்துடன், சதக்கத்துல்லா அப்பா கல்லூரிக்கு தமிழ் மரபு அறக்கட்டளை அமைப்பு அனுப்பிய கோப்பன்ஹாகன் சுவடிகளைக் கொண்டு ஆய்வு செய்தவரின் கடிதம் காண்க. .

மதிப்பிற்கும் மரியாதைக்கும் உரிய தமிழ் மரபு அறக்கட்டளையின் நிறுவனர் முனைவர் .சுபாஷினி அக்கா அவர்களுக்கு என் பணிவான வணக்கங்கள்.

எனது பெயர் இரா. ஸ்பர்ஜன் ரத்தீஷ். நான் திருநெல்வேலியில் உள்ள சதக்கத்துல்லாஹ் அப்பா கல்லூரியில் கணினி தகவல் தொழில்நுட்பவியல் துறையில் பேராசிரியராக பணியாற்றி வருகிறேன். கடந்த 04.10.2019 ஆம் ஆண்டு எங்கள் கல்லூரியில் நடைபெற்ற பன்னாட்டுக் கருத்தரங்கில் தாங்கள் உரையாற்ற வந்திருக்கும் போது தங்களிடம் எனது ஆராய்ச்சி பற்றி எனது வழிகாட்டியான எங்கள் கல்லூரி முதல்வர் முனைவர் மு. முஹம்மது சாதிக் அவர்கள் விளக்கமளித்தார்கள். அதன் பின் நான் தங்களை சந்தித்து சில ஓலை சுவடிகளின் பிரதியை பெற்றுக்கொள்ள முயற்சி செய்தேன் ஆனால் தங்களின் ஓய்வில்லா உழைப்பின் நடுவில் அதற்கு நேரம் இடம் கொடுக்கவில்லை. என்றாலும் உங்களுடைய தேனீ போன்ற இடைவிடாத சுறுசுறுப்பான கால ஓட்டத்தில் என்னுடைய ஆராய்ச்சியை நினைவில் வைத்து 08.11.2019 அன்று எனது வழிகாட்டி அவர்களின் மின்னஞ்சலுக்கு 1) பரத்தையர் மாலை 2) திருவள்ளுவரின் குறள் 3) சாமுத்திரிகை பலாபலன் 4) மாரியம்மன் தாலாட்டு ஆகிய நான்கு ஓலைச்சுவடிகளின் தொகுப்பை அனுப்பி வைத்திருந்தீர்கள். தங்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றிகளை தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் எனது ஆராய்ச்சியை தொடர்வதற்கும் அதில் நல்ல முடிவை கண்டறிவதற்கும் தங்களின் புகைப்படங்கள் பேருதவியாக இருந்தது. நான் எனது ஆராய்ச்சி கட்டுரைகள் அனைத்திலும் தங்களின் பெயரையும், தமிழ் மரபு அறக்கட்டளையையும் குறிப்பிட்டு உள்ளேன். இதைப்போன்றதொரு ஆராய்ச்சி செய்வதற்கு முன்னோடியாக எனது வழிகாட்டியும் எங்கள் கல்லூரி முதல்வருமான முனைவர் மு. முஹம்மது சாதிக் ஐயா அவர்கள் திகழ்ந்தார்கள். அதற்கு உரமேற்ற ஓய்வு பெற்ற தமிழ் பேராசிரியர் முனைவர் வே. கட்டளை கைலாசம் ஐயா அவர்கள் உதவி புரிந்தார்கள். இதில் தங்களின் தன்னலமில்லா தாராள மனதினால் அளித்த ஓலைச்சுவடிகளின் தொகுப்பு என் ஆராய்ச்சியின் அலங்கார கிரீடமாய் அமைந்தது. கடவுளின் பெரிதான துணையால் எனது ஆராய்ச்சி வெற்றிகரமாய் தமிழ் எழுத்துக்களை பல்வேறு நிலைகளில் ஓலைச்சுவடிகளில் இருந்து பிரிதெடுத்து கணினி அறியப்படும் தமிழ் எழுத்துக்களாக வழங்குகிறது. இதில் தாங்கள் அனுப்பி வைத்திருந்த ஓலைச்சுவடிகள் மிகவும் துல்லியமான முடிவுகளை கொடுக்கிறது. தங்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றிகளையும் தங்களுக்கு என் இதயம் கனிந்த வாழ்த்துதல்களையும் மரியாதை மிக்க வணக்கங்களையும் தெரிவித்து கொள்கிறேன்.

நன்றி ! நன்றி !! நன்றி !!!

இப்படிக்கு

ஆராய்ச்சியாளர் இரா. ரத்தீஷ்

# Optimal Character Segmentation for Touching Characters in Tamil Language Palm Leaf Manuscripts using Horver Method

**M. Mohamed Sathik, R. Spurgen Ratheash**

***Abstract:*** *An optimality of an automatic character recognition for Tamil palm leaf manuscripts can be achieved only by an efficient segmentation of touching characters. In this article, the touching characters are segmented as a single character to achieve an optimum solution by the recognizer in Optical Character Recognition (OCR). The proposed method provides a novelty in touching character segmentation of Tamil palm leaf manuscripts. An initial process of separation of background image and foreground characters is applied on the palm leaf images by filtering and removing unwanted pieces of characters by noise removal methods. The thickening process overcomes the difficulty of small breakages in the characters. The aspect ratio of the character image can be used to categorize the character such as single or multi touching. Single touching is divided by yet another ways such as horizontal or vertical touching. Finally, the proposed algorithm for* **H***orizontal and* **Ver***tical character segmentation named as* **HorVer method** *is applied on the horizontally and vertically touching characters to segment as independent character. Experimental result produces 91% of an accuracy on segmenting the touching characters in Tamil palm leaf manuscript images collected from various resources and Tamil Heritage Foundation (THF). A novelty method can be achieved in Tamil touching character segmentation by the proposed algorithm.*

*Key words : Character segmentation, Pre processing, Touching characters, Tamil character segmentation*

## I. INTRODUCTION

Tamil language accommodates one of the oldest scripts of the world from 6th century BC. And the birth place of those characters is believed to be Keezhadi, Tamil Nadu, India. The shapes of Tamil characters have evolved from the Greek characters. The script was named as "Tamili" earlier and then called as "Tamil". The writing style of the script is from left to the right. The script has been categorized into two such as vowels (Uyirezhuthu) and consonants (Meiyezhuthu). The vowel has 12 characters and the consonant has 18 characters. The combinations of those two (UyirMeiyezhuthu) categories make 247 characters with one special character '∴' [1].

Ever since the evolution of the language, the characters have specific strokes as its forms. During the period of 17th Century AD, the Christian preacher Constantine Joseph Beschi named who was later known as 'Veeramamunivar' reshaped the forms by means of different strokes and shapes to differentiate the short (Kuril) and long (Nedil) vowels. In 19th Century AD, the great reformer from Tamil Nadu E.V. Ramasamy (Periyar) made changes on the shapes of the characters which continue to date. Prior to the invention of paper, an older civilization of Tamil people used to document their

medicinal hints, information about architecture, astrological ideas, and literatures on palm leaves because it was easily available then in their land. Palm leaf is generally 3.5 cm width and 35cm length as shown in Fig. 1. While writing on palm leaves, the writer holds the palm leaves on the left hand and writes his right hand. The issue here is the way stylus is held makes the difference in the forms of the scripts. Unlike holding a pen with fingers and thumb, a stylus is held while writing within the palm and the four fingers. A stylus is a needle like pen with no ink made of iron rods used to write on palm leaf. The writers write on the palm leaf with minimum pressure without any punctuation so as not to damage the palm leaf. While writing with a stylus, normally the letters or words are written without taking the stylus off the palm leaf and giving room neither for space nor for punctuation. This makes all the difference in the way the scripts are shown as touching characters [2]. OCR only recognizes single characters overlooking the touching characters. Hence, character segmentation is an important phase to provide an optimal solution in recognition phase. The touching characters are divided into two types such as single and multiple touching. The single touching characters are categorized further into two i.e. horizontal and vertical touching as shown in Fig.2. When the characters touch together with the same line characters that is known as horizontal touching as Fig.2a and when the characters touch with the subsequent line characters, they are classified as vertical touching as shown Fig.2b. The characters that touch both ways are called as multiple touching characters as shown in Fig.2c.



**Fig.1 Image of Tamil palm leaf manucript**

Revised Manuscript Received on March 30, 2020.

**M. Mohamed Sathik,** Principal and Research Supervisor
mmdsadhq@gmail.com PG and Research Department of Computer Science,
Sadakathullah Appa College, Tirunelveli, Tamilnadu, India. Manonmaniam Sundaranar University, Tamilnadu, India
**R. Spurgen Ratheash,** Research Scholar, Reg. No: 12334
spurgen@gmail.com Sadakathullah Appa College, Tirunelveli, Tamilnadu, India



*Published By:*
*Blue Eyes Intelligence Engineering & Sciences Publication*



**"உண்டெரூல்டிங்கன்(ஜெர்மனி) கற்கால மனிதர்கள் குடியிருப்பு - 2"**
வீடுகளைக் கட்டி குடியிருப்புகளை உருவாக்க எப்போது மனித குலம் தனது முயற்சியைத் தொடங்கியது என நம் எல்லோருக்குமே எப்போதாவது மனதில் கேள்விகள் எழுந்திருக்கும், அல்லவா?

கீழடி, ஆதிச்சநல்லூர் போன்ற அகழாய்வுகள் வெளிப்படுத்திய, நாம் அறிந்த தமிழ்நாட்டு அகழாய்வுகள் போல உலகின் ஏனைய பகுதிகளில் நடைபெற்ற அகழாய்வுகளையும் தெரிந்து கொள்வோமே. இது ஒப்பாய்வுகளுக்கு உதவும் என்பதோடு பொதுவாகவே ஹோமோ சேப்பியன்களான இந்த மனித குலத்தின் வாழ்விடங்கள் உருவாக்கல் என்ற பொதுக் குணத்தைப் பற்றி அறிந்து கொள்ளவும் உதவும் அல்லவா?

ஜெர்மனியின் உண்டெரூல்டிங்கன் பகுதியில் ஏறக்குறைய பொ.ஆ.மு 3917 ஆண்டு காலகட்டம் வாக்கில் உருவாக்கப்பட்ட வீடுகளின் மாதிரிகள் இங்கு உள்ள மிக முக்கிய காட்சிப் பொருள்களாக அமைகின்றன. காலவரிசைப்படி ஒவ்வொரு வீடுகளும் முன்னர் இப்பகுதியில் மக்கள் அமைத்த வீடுகளின் தொல் படிமங்களை ஆராய்ந்ததன் அடிப்படையில் மாதிரிகளாக இங்கே உருவாக்கப்பட்டுள்ளன. அந்த வரிசையில் முதலில் வருவது ஹோர்ன்ஸ்டாட் வீடு (Hornstaat Haus).



இந்த வகை வீடுகள் இப்பகுதியில் நிகழ்த்தப்பட்ட அகழாய்வுப் பணியின்போது ஏரிக்கு மிக ஆழமான பகுதிகளில் கிடைத்துள்ளன. அடிப்படையில் ஓர் அறை மட்டும் கொண்ட மரத்தாலும் குச்சிகளும் கட்டப்பட்ட வீடுகள். இவ்வகை வீடுகள் கட்டப்பட்ட காலமாக பொ.ஆ.மு. 3917 ஆம் ஆண்டு என ஆய்வாளர்கள் நிகழ்த்திய கரிம ஆய்வுகளின் வழி உறுதி செய்கின்றார்கள். இந்த வகை வீடுகளின் தொல்

படிமங்கள் 1980ஆம் ஆண்டு முதல் 1993ஆம் ஆண்டு வரை கான்ஸ்டன்ஸ் ஏரிக்கரையில் நிகழ்த்தப்பட்ட அகழாய்வில் கண்டுபிடிக்கப்பட்டவை. இந்த அகழ்வாய்வை பாடன் ஊர்ட்டன்பெர்க் மாநிலத்து வரலாற்றுச் சின்னங்கள் பாதுகாப்பு அமைப்பு (State office of Historic Monuments) நிகழ்த்தியது.

இந்த வீடுகளை உருவாக்கப் பயன்படுத்தப்பட்ட மரத் தூண்கள் 4 - 9 மீட்டர் உயரம் கொண்டவை. சுவர்கள் களிமண்ணால் பூசப்பட்டு மேற்கூரைகள் ரீட் கானரி வகைப் புற்களால் உருவாக்கப்பட்டுள்ளன. இங்கு மாதிரியாக வைக்கப்பட்டுள்ள இந்த வீடு 1996 ஆம் ஆண்டு முதலில் உருவாக்கப்பட்டு அதன் பின்னர் மீண்டும் 2011 ஆம் ஆண்டு புதுப்பிக்கப்பட்டுள்ளது.




பொ.ஆ.மு. 3900 எனும்போது இன்றைக்கு ஏறக்குறைய 6000 ஆண்டுக்காலப் பழமையான தொல் எச்சங்கள் என்பதை அறிய முடிகின்றது. ஐரோப்பாவில் தொல் மனிதர்கள் வாழ்ந்த பல இடங்கள் பற்றிய செய்திகள் இன்று நமக்குக் கிடைக்கின்றன. அந்த வகையில் இந்தப் பகுதியில் கிடைத்திருக்கின்ற இந்தக் குடியிருப்புகளின் எச்சங்கள் நமக்கு இப்பகுதியில் வாழ்ந்த மனிதர்கள் நீண்ட கழிகளையும், களிமண், மற்றும் புல் சருகுகளையும் கொண்டு வீடுகளைக் கட்டும் திறன்களையும் கொண்டிருந்தனர் என்பதையும், ஓரிடத்தில் தங்கி வாழ்வது, உணவுகளைச் சேகரிப்பது என்ற பழக்கங்களையும் கொண்டிருந்தனர் என்பதையும் இந்த அகழாய்வுச் செய்தி உலகுக்கு வெளிப்படுத்தியது.
அடுத்த பதிவில் இங்கு கிடைத்த மேலும் சில தொல்பொருட்கள் பற்றிய செய்திகளைப் பகிர்கிறேன்.

**"உண்டெரூல்டிங்கன்(ஜெர்மனி) கற்கால மனிதர்கள் குடியிருப்பு - 3"**
தொல் மனிதர்களின் வரலாறு மண்ணுக்குள் மறைந்து கிடக்கின்றது. ஆழமாக நிலத்தைத் தோண்டி அகழாய்வு செய்யும்போது நமக்குப் பல்லாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த மக்களின் வாழ்வியல் பற்றிய தொல் எச்சங்கள் கிடைக்கின்றன. அதேபோல கடலுக்கடியில் அகழாய்வு செய்யும் போதும், ஏரிகள், குளங்கள் போன்ற நீர் நிலைகள் இருக்கின்ற பகுதிகளில் அகழாய்வு செய்யும்போதும் ஏராளமான அரும் பொருட்கள் கிடைக்க வாய்ப்புகள் உள்ளன.

மனிதகுலம் மட்டுமல்ல; மிருகங்களும் சரி, தாவரங்களும் சரி; நீர்நிலைகள் எங்கு இருக்கின்றதோ அங்கேயே வாழ்விடத்தை உருவாக்கிக்கொள்ளும் அடிப்படை பண்பை ஆய்வுகள் நமக்கு வெளிப்படுத்துகின்றன. அதனால்தான் பெருவாரியான அனைத்து நாகரிகங்களும் ஏதாவது ஒரு நதிக் கரையை ஒட்டியே அமைந்திருக்கின்றன. நைல் நதி நாகரிகம், வைகை நதி நாகரிகம் போன்றவற்றை இதற்கு உதாரணமாகக் காட்டலாம். அல்லது ஏரிகள் குளங்கள் கடற்கரை அருகே என்ற வகையில் அமைந்திருக்கின்றன.

ஜெர்மனியின் உண்டெரூல்டிங்கன் பகுதி தொல்லியல் அகழாய்வின் போது ஏரியின் அடிப்பகுதியில் புதையுண்டு கிடந்த மர வீடுகளைப் பற்றிய செய்திகளை இதற்கு முந்தைய பதிவில் கூறியிருந்தேன். இப்பகுதியில் மரங்களின் அல்லது கழிகளின், புற்களின் எச்சங்கள் மட்டுமே கிடைத்தன என்று எண்ணிவிட வேண்டாம். இப்பகுதியில் நடத்தப்பட்ட பல்வேறு கால அகழாய்வுகளில் இங்கு மண்ணால் உருவாக்கப்பட்ட மண்பாண்டங்கள், இரும்பு மற்றும் மரத்தால் ஆன கருவிகள், கற்களாலான அணிகலன்கள் மட்டுமன்றி விலங்குகளின் கொம்புகளும் எலும்புகளால் ஆன பொருட்கள் என பல்வேறு தடயங்கள் கிடைத்திருக்கின்றன.

நம்மை ஆச்சரியப்படுத்தும் வகையில் 5000 ஆண்டுகள் பழமையான மரத்தாலான கலங்கள் மட்டுமன்றி மனிதர்கள் பயன்படுத்திய துணி வகைகளும் கிடைத்திருக்கின்றன. பானைகளுக்குள் வைக்கப்பட்டிருந்த ரொட்டி துண்டின் படிமங்கள், ஆப்பிள் பழங்கள், சமைத்த அல்லது சுட்ட பயிர்கள் சமைத்த கஞ்சி போன்றவை பதப்படுத்தப்பட்ட நிலையில் பானைகளில் கண்டெடுக்கப்பட்டன. இந்தக் கண்டுபிடிப்புகள் இப்பகுதியில் வாழ்ந்த மக்களின் குடியிருப்பு, வாழ்வியல் தன்மை ஆகியவற்றை ஆச்சரியப்படத்தக்க வகையில் நமக்கு விளக்குகின்றன.

அன்றாடப் பயன்பாட்டுப் பொருட்களான கோடரி, சமைக்கப் பயன்படுத்தும் பானைகள், ஊசிகள், மீன்களைப் பிடிப்பதற்காக உருவாக்கப்பட்ட இரும்பு கொக்கிகள் போன்றவையும் கிடைத்திருக்கின்றன. இவை இக்காலத்திலும் நமது வாழ்வியல் தேவைகளுக்கு அடிப்படையாக இருப்பவை தான். இதனைக் காணும்போது அடிப்படையில் மனித வாழ்வு என்பது பெரிய மாற்றத்தை இந்த ஐந்தாயிரம் ஆண்டுகள் கால வாக்கில் அடையவில்லை என்பதைக் காண்கின்றோம்.





உண்டெரூல்டிங்கன்(ஜெர்மனி) கற்கால மனிதர்கள் குடியிருப்பு
அருங்காட்சியகத்தில் தொல்லியல் அகழாய்வின் போது கிடைத்த பொருட்கள்

நமக்கு முன்னர் வாழ்ந்த மனிதர்கள் விட்டுச் சென்ற பொருட்கள் தான் இன்று நமக்குக் கடந்த காலத்தை அறிந்து கொள்ள உதவுகின்றன.

உடைந்த வகையிலும் முழுமையான வகையிலும் இப்பகுதியில் குறிப்பிடத்தக்க எண்ணிக்கையில் மண்பாண்டங்கள் கிடைத்திருக்கின்றன. இவை குறிப்பிடத்தக்க வடிவத்துடன் நேர்த்தியாக அமைக்கப்பட்ட வகையில் உள்ளன. இப்பகுதியில் பல்வேறு பண்பாட்டுக் குழுவினர் வாழ்ந்திருக்க கூடிய வாய்ப்புகள் உண்டு என்பதைக் காட்டும் வகையிலும் இத்தகைய மண்பாண்டங்களின் அமைப்பில் வேறுபாடுகள் இருப்பதையும் காண முடிகின்றது. பொ.ஆ.மு 3800லிருந்து பொ.ஆ.மு. 1000 வரையிலான (அதாவது இன்றைக்கு ஏறக்குறை 6000லிருந்து 3000 ஆண்டுகள் என) கரிமப் படிம ஆய்வுகள் காட்டுகின்றன.

கற்காலத்தில் அமைக்கப்பட்ட மிக எளிய சமையல் அறை ஒன்றில் வைக்கப்பட்ட நீர் அருந்துவதற்கான கோப்பைகள், பொருட்களை வைப்பதற்கான பாத்திரங்கள், பல்வேறு வகையான மண்பாண்டங்கள், உணவு சாப்பிடுவதற்கான மண்பாண்டங்கள், உணவுப் பொருட்களைப் பாதுகாப்பாக வைப்பதற்கான பாத்திரங்கள் என்பவை உடைந்த நிலையிலும் முழுமையான நிலையிலும் என்ற வகையில் இங்குக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன.

இங்கு கண்டெடுக்கப்பட்ட மண்பாண்டங்கள் இந்த மாநிலத்தின் ஆய்வுக்கூடத்தில் ஆய்வுக்காகப் பாதுகாக்கப்பட்டாலும் இப்பகுதியில் அமைந்திருக்கின்ற சிறிய அருங்காட்சியகத்தில் குறிப்பிடத்தக்க எண்ணிக்கையில் இவை காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

தமிழகத்தில் நடைபெற்ற ஏராளமான தொல்லியல் கண்டுபிடிப்புகளில் முழுமையான, அல்லது உடைந்த மண் பாண்டங்கள் பற்றிய செய்திகளை அடிக்கடி நாம் இப்பொழுது ஊடகங்களின் வழி கேள்விப் படுகிறோம் அல்லவா.. ? அதேபோல ஐரோப்பாவின் பல பகுதிகளிலும் மத்திய ஆசியா போன்ற நாடுகளிலும் நிகழ்த்தப்பட்ட தொல்லியல் அகழாய்வுகளில் மண்பாண்டங்கள் ஏராளமானவை கிடைத்துள்ளன என்பது நமக்கு ஆச்சரியமே. அவை அனைத்தும் அருங்காட்சியகங்களில் பாதுகாக்கப்படுகின்றன; பொதுமக்களுக்குக் காட்சிப்படுத்தப்படுகின்றன.

எனது ஏராளமான அருங்காட்சியங்களுக்கான பயணங்களின்போது நான் இத்தகைய மட்பாண்டங்கள் பலவற்றைப் பார்த்ததுண்டு. அந்த வகையில் இங்கு உண்டெரூல்டிங்கன் பகுதியில் உள்ள சிறிய அருங்காட்சியகத்திலும் நான் நேரில் கண்ட மண்பாண்டங்களின் புகைப்படங்கள் சிலவற்றை இங்கே பகிர்கிறேன்.

**"உண்டெரூல்டிங்கன்(ஜெர்மனி) கற்கால மனிதர்கள் குடியிருப்பு - 4"**
உணவுதான் உயிர்களுக்கு ஆதாரம். உணவைத் தேடித் தான் உயிரினங்கள் அனைத்துமே பயணிக்கின்றன. அது தாவரங்களாகட்டும்.. விலங்குகளாகட்டும் மனிதர்களாகட்டும்.. எல்லோருமே ஒவ்வொரு நாளும் உணவை மையமாக வைத்துத்தான் வாழ்க்கைப் பயணத்தைச் செலுத்துகின்றோம்.



யாராவது நண்பர்களைப் பார்த்தால் சாப்பிட்டீர்களா..? அல்லது அருந்தத் தண்ணீர் வேண்டுமா..? எனக் கேட்பது உலக மனிதர்கள் அனைவருக்குமே இயல்புதான்.

உணவைச் சார்ந்தே பல்வேறு வணிக முயற்சிகளும் உலகம் முழுவதும் இன்று பரந்து விரிந்து கிடக்கின்றன. ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு அனுப்பி வைக்கப்படும் பொருட்களில் உணவுப் பொருட்களும் முக்கியத்துவம் பெறுகின்றன. இப்போது மட்டுமல்ல.. பண்டைய காலம் தொட்டே கடல் வணிகத்தில் உணவுப்பொருட்களை ஏதாவது ஒரு வகையில் பதப்படுத்திப் பத்திரப்படுத்தி அனுப்பி வைப்பதும் ஒரு கலையாகவே இருந்து வந்துள்ளது. தமிழ்நாட்டில் உருவாக்கப்பட்ட மண்பாண்டங்கள் எகிப்தின் செங்கடலோர அகழாய்வுகளில் கிடைப்பதும், ரோமானியப் பேரரசில் பல்வேறு பகுதிகளில் உருவாக்கப்பட்ட எம்ஃபோரா ஜாடிகள் தமிழகத்தின் அகழாய்வுப் பகுதிகளில் கிடைப்பதும் நாம் அறிந்தது தான்.

வேட்டையாடியும், மண்ணில் புதைந்து கிடக்கும் கிழங்குகளைத் தோண்டி எடுத்தும், பழங்களையும் இலைகளையும் பறித்துச் சாப்பிட்டு வாழ்ந்த தொல் மனிதர்கள் படிப்படியாக ஓரிடத்தில் தங்கி வாழ முயன்றபோது உணவுப்பொருட்களைப்

பதப்படுத்திப் பாதுகாத்து வைக்க வேண்டியது அவசியம் என்பதை உணர்ந்து கொண்டார்கள்.

இப்போது பலரது வீடுகளிலும் இருப்பது போல அன்று குளிர்சாதனப்பெட்டி வீடுகளில் இல்லை அல்லவா...? ஆனாலும் தொல் மனிதர்கள் தொடக்கக் காலத்தில் உணவுகளை ஒன்றுக்கு மேற்பட்ட நாட்கள் சேமிக்க ஏராளமான முயற்சிகளைச் செய்திருக்கின்றார்கள். அவர்களது அன்றைய முயற்சிகளை ஒப்பிடும்போது இன்று நாம் செய்கின்ற முயற்சிகள் குறைவு என்றுதான் எண்ணத் தோன்றுகிறது.

கிழங்குகளைச் சாப்பிட்டது போக மீதத்தைப் பத்திரப்படுத்தி வைக்க வேண்டும்.... அன்று பிடித்த மீன்களைச் சாப்பிட்டது போக மீதத்தை மிச்சப்படுத்தி வைக்கவேண்டும்... அதேபோல காய்கறிகளையும் பழங்களையும் நாளைக்குச் சாப்பிட மிச்சப் படுத்தி வைக்க வேண்டும்...

அதுமட்டுமா குளிர்காலம் வந்து விட்டால் உணவைத் தேடுவது சிரமம்... அந்தச் சூழலில் அன்றாடத் தேவைக்கு வேண்டிய உணவைக் கோடைக் காலத்திலேயே சேமித்து வைக்கவேண்டும்... இப்படிப் பல சவால்கள் நமது தொல் மனிதர்கள் சந்தித்தார்கள்.

இதனடிப்படையில் பிறந்ததுதான் பானைகள் உருவாக்கும் தொழில் நுட்பமும் உணவைப் பதப்படுத்தும் தொழில் நுட்பமும், மண்பாண்டங்களை உருவாக்கும் தொழில்நுட்பம் நமது சூழலில் இந்திய நிலப்பகுதியில் மட்டும்தானா என்ற கேள்விக்கு 'இல்லை' என்பதே நமக்கு விடையாகக் கிடைக்கிறது. ஐரோப்பாவின் பல்வேறு பகுதிகளில் நிகழ்த்தப்பட்ட அகழாய்வுகளில் அதேபோல ஆப்பிரிக்காவிலும் தென் அமெரிக்காவிலும் மத்தியக் கிழக்காசிய நாடுகளிலும் நிகழ்த்தப்பட்ட ஏராளமான தொல்லியல் ஆய்வுகளில் மிக நீண்ட காலமாக மனித குல பயன்பாட்டில் இருந்த மண்பானைகள் பற்றிய செய்திகள் அதிகம் கிடைக்கின்றன. செய்திகள் மட்டுமல்ல.. ஏராளமான மண்பாண்டங்கள் இன்று உலகின் பல்வேறு அருங்காட்சியகங்களில் பல்கலைக்கழகக் கண்காட்சி பகுதிகளிலும் பொதுமக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டிருக்கின்றன.

இங்கு ஜெர்மனியின் உண்டரூல்டிங்கன் பகுதியில் 1920ம் ஆண்டில் 'Wasserburg Buchau' பகுதியில் நிகழ்த்தப்பட்ட தொல்லியல் அகழாய்வில் மண்பாண்டங்களை உருவாக்கும் அடுப்பும், மண்பாண்டங்களை பத்திரப்படுத்தி வைக்கும் ஒரு வீடும் அவற்றிற்குள் பதப்படுத்திய உணவுப் பொருட்கள் வைக்கப்பட்ட பல்வேறு மண்பாண்டங்கள் உள்ள வகையில் எனக் கிடைத்தன.

இங்கு புகைப்படத்தில் காட்டப்படுகின்ற அடுப்பு மற்றும் அருகில் உள்ள வீடு அகழாய்வில் கிடைத்த தொல்லியல் எச்சத்தை அடிப்படையாகக் கொண்டு மாதிரியாக உருவாக்கப்பட்டவை. இத்தகைய வீடுகள் மனிதர்கள் வாழ்ந்த வீடுகள்

இல்லை என்றும் இவை மண்பாண்டங்களில் பொருட்களைச் சேகரித்து பதப்படுத்தி வைக்கப்பட்ட தனி வீடுகள் என்றும் இந்த ஆய்வுகள் வெளிப்படுத்தின.



உணவு தோல் பைகளிலும், மரத்தாலான பெரிய வட்டவடிவிலான குடுவைகளில், மண்பாண்டங்களில் சேகரித்து வைக்கப்பட்டிருந்த செய்திகள் இந்த ஆய்வின்போது வெளிவந்தன. உணவு பதப்படுத்தல் என்னும் தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி மீன்களும் பயிர்களும் காய்கறிகளும் பண்டைய மக்களால் இங்கு பதப்படுத்தப்பட்ட செய்தி, உணவைப் பதப்படுத்திப் பாதுகாக்கும் முறை, மற்றும் மண்பாண்டங்களை உருவாக்கும் தொழில்நுட்பம் ஜெர்மனியின் இப்பகுதியில் இன்றைக்கு நான்காயிரம் ஆண்டு வாக்கில் வழக்கில் இருந்தது என்னும் செய்தி வரலாற்று ஆய்வில் ஈடுபடும் நாம் எல்லோருக்குமே ஆர்வம் தரும் ஒரு செய்தி தானே.

இவ்வளவு குளிர் நிறைந்த ஜெர்மனி போன்ற நிலப்பகுதிகளில் இன்றைக்கு நான்காயிரம் அல்லது ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே களிமண் கொண்டு மண்பாண்டங்களை உருவாக்கும் தொழில்நுட்பம் இருந்தது என்பதை அறியும்போது மனிதர்கள் வாழ்வதற்கு உகந்த நல்ல தட்பவெப்பச் சூழலைக் கொண்ட தமிழ்நாடு போன்ற நிலப்பகுதிகளில் அதே காலகட்டத்தில் அல்லது அதற்கு முன்னரும் கூட இத்தகைய தொழில் நுட்பங்கள் இருந்திருக்க வேண்டிய சாத்தியம் உள்ளது என்ற கருத்தையும் நாம் நோக்க வேண்டியிருக்கின்றது. இதற்குச் சான்றுகளைத் தேட வேண்டிய அவசியம் நமக்கு இருப்பதால் மிக ஆழமான வகையில் அகழாய்வு குழிகளைத் தோண்டி ஆய்வுகளைச் செய்வது இத்தகைய தேடுதலுக்கு நல்ல விடைகளை அளிக்கும் என்ற நம்பிக்கை ஏற்படுகிறது.

## 10 • வெளிச்சத்திற்கு வந்த வேட்டை நாய்

• • • ச.பாலமுருகன்

தமிழ்நாட்டில் மகத்தான நாகரிகம் ஒன்று மண்ணுக்குள் உள்ளது என்பதை அண்மைக்காலமாக தமிழ்நாட்டில் நடக்கும் பல அகழாய்வுகள் நமக்கு உணர்த்துகின்றன. அகழாய்வு செய்யாமலே மண்ணின் மேலடுக்கிலே அல்லது மண்மூடிய மேட்டிலிருந்து கிடைக்கும் பல அரிய பொக்கிஷங்களை நமக்கு தென்பெண்ணையாற்று நாகரிகம் அளித்து வருகிறது. திருவண்ணாமலை மாவட்டத்திற்கு உட்பட்ட தென்பெண்ணை ஆற்றங்கரைகளில் நூற்றுக்கணக்கான தொல்லியல் எச்சங்கள் நமக்கு கிடைக்கின்றன. அது போலத்தான் சற்றும் எதிர்பாராமல் கிடைத்த பொக்கிஷம் தான் தானிப்பாடி அருகே உள்ள வேளூரில் கிடைத்த வேட்டை நாய்க்கு வைத்த நடுகல்.



1000 ஆண்டுகள் பழமையான நாய் நடுகல்

அண்மையில் திருவண்ணாமலை மாவட்ட வரலாற்று ஆய்வு நடுவத்தால் மேற்கொள்ளப்பட்ட தொடர் பராமரிப்புப் பணியின் போது, தா.வேளூர் பாம்பாற்றுப் படுகையில் அமைந்துள்ள வேடியப்பன் கோயிலில் உள்ள நடுகற்கள் அருகே இருந்த மேட்டுப்பகுதியை சரிசெய்யும் போது தட்டுப்பட்ட கல்லை எடுத்து வைத்துப்பார்த்த போது முகமற்ற நாயின் உருவம் தெரிந்தது. இது என்ன அரிதான ஒரு சிற்பமாக இருக்கிறதே என்று அருகில் மேலும் ஆய்வு செய்யும் போது மற்றொரு கல்லில் நாயின் தலையும் எதிரே பன்றியின் உருவமும் கொண்ட கல்லும் கிடைத்தது. இரண்டும் ஒட்டவைத்துப் பார்த்ததில் முழு உருவம் தெரியவந்தது.

இதுபற்றி மேலும் ஆய்வு செய்கையில் இதே போன்று உருவமுள்ள சில நடுகற்கள் கர்நாடகா பகுதியில் கிடைத்துள்ளது. தமிழ்நாட்டிலும் ஏற்கனவே நாய்க்கு வைத்த நடுகற்கள் கிடைத்துள்ளன. ஆனாலும் இதுபோன்று நாய் பன்றியுடன் சண்டையிட்டு இறந்ததின் நினைவாக வைக்கப்பட்ட நடுகல் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இந்த நாயின் உருவம் நல்ல வேட்டை நாய்க்கு உண்டான உடல் வாகுடன் உள்ளது. பயிரை உண்டு அழிக்க வந்த காட்டுப்பன்றியுடன் சண்டை செய்யும் போதோ அல்லது தனது எஜமானுடன் வேட்டைக்குச் செல்லும் போதோ காட்டுப்பன்றியுடன் சண்டையிட்டு நாய் இறந்துள்ளது. இந்த நன்றியுள்ள நாய்க்கு அப்போதே நடுகல்லும் வைத்துள்ளனர். ஆனால் காலப்போக்கில் அது உடைந்து பூமிக்குள் சென்றுள்ளது.

நல்வாய்ப்பாக நமது கூட்டு முயற்சியால் அந்த நடுகல் வெளிவந்து தற்போது சரிசெய்து வைக்கப்பட்டுள்ளது. இந்த நடுகல்லின் சிற்ப அமைதியை நோக்கும் போது இது சுமார் 1000 ஆண்டுகள் பழமையானவை என்று அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். மேலும் இத்துடன் தஞ்சை பெரிய கோயில் ஓவியத்தில் உள்ள நாய் உருவத்துடனும் இது ஒத்துள்ளதும் குறிப்பிடத்தக்கது. மேலும் தஞ்சை ஓவியத்தில் உள்ள நாய் அலங்கு என்ற இனத்தைச் சேர்ந்தது என்ற செய்தி பரவலாக பகிரப்பட்டது. இது தொடர்பாக சூழலியல் அறிஞர் தியோடர் பாஸ்கரன் அவர்களைத் தொடர்பு கொண்டு கேட்டபோது அவ்வாறு ஒரு நாய் இனமே இல்லை என்றும் அலங்கு என்பது வேறு வகை உயிரினம் என்று தெளிவு படுத்தினார். எனவே அலங்கு என்பது நாய் இனம் அல்ல என்பதும் இங்கு வலியுறுத்தப்படுகிறது.

எடுத்தனூர் நாய் நடுகல்லுக்கு அடுத்ததாக கிடைத்த இந்த நடுகல்லும் நேரில் சென்று பார்க்கத்தூண்டும் ஒன்றுதான். பூமிக்குள் இருந்து இந்த நாய் நடுகல் வெளிவர உதவிய பழனிச்சாமி, மதன்மோகன், ஸ்ரீதர், சிற்றிங்கூர் ராஜா, கி.நி.அ.முத்து, செந்தில் குமார், கார்த்திக் மற்றும் உள்ளூர் மக்களுக்கும் நடுவத்தின் சார்பாக நன்றிகள்.

## 11• வரலாறு கூறும் சுடுமண் முத்திரைகள்

• • • கி. ஸ்ரீதரன்

வரலாற்றுச் சிறப்புமிக்க கீழடியில் நடைபெற்று வரும் அகழ்வாராய்ச்சிகளில் அகரம் கிராமத்தில் நடைபெற்ற ஆய்வில் அழகிய சுடுமண் முத்திரை கிடைத்த செய்தியைப் பார்த்தோம்.

இம்முத்திரை உடுக்கை போன்ற அமைப்பில் உருளை வடிவில் காணப்படுகிறது. முத்திரையின் கீழ் பகுதியில் தடிமனான வட்டவடிவ அலங்கார வேலைப்பாடு காணப்படுகிறது. அதில் சிறுசிறு புள்ளிகள் குழி வடிவாக உள்ளன.

முத்திரையின் தலைப்பகுதி வழவழப்பாக பிடித்துக் கொள்ளும் வகையில் அமைந்துள்ளது. இம்முத்திரை கையால் செய்யப்பட்டதாகும். இதன் உயரம் 2.75 செ.மீ. கீழ்ப்பகுதி 2.8 செ.மீ. இதன் எடை 24 கிராம் ஆகும் என்பது செய்திகளின் மூலம் அறிய முடிகிறது. இதேபோன்ற சுடுமண் முத்திரை இந்த கீழடி அகழாய்வில் இதற்கு முன்பும் கிடைத்துள்ளது. பிடித்துக் கொள்ள ஏதுவாக மேற்புறமும் கீழ்ப்பகுதி தட்டையாக வட்ட வடிவில் அமைந்துள்ளது. அதில் நடுவில் ஒரு குழியும் அதனைச் சுற்றி சிறுசிறு புள்ளிகள் வட்ட வடிவில் உள்ளன.



அதனைத் தொடர்ந்து சற்று வெளிப்புறம் வட்ட வடிவில் வரிசையாக புள்ளிகளும் இடைவெளிவிட்டு நீள வட்ட வடிவில் நான்கு புள்ளிகளும் உள்ளன. முத்திரையின் விளிம்பிலும் சிறு சிறு புள்ளிகளின் வேலைப்பாடுகள் காணப்படுகின்றன. இதன் பயன்பாட்டினை அரிய முடியாவிடினும் ஓரளவு ஊகிக்க முடிகிறது. கீழடி அகழ்வாய்வில் பல கட்டடப்பகுதிகள், நீர் செல்லும் குழாய் அமைப்புகள், செங்கற்களால் ஆன தொட்டிகள் போன்றவை ஆய்வில் தென்பட்டதால் இங்கே துணிகளை சாயம் போடுதல், வடிவமைப்புகளை செய்தல் போன்ற பணிகள் நடைபெற்று இருக்கலாம் துணிகளின் மீது வடிவமைப்பு செய்ய இத்தகைய சுடுமண் முத்திரைகள் பயன்பட்டிருக்கலாம் எனக் கருத முடிகிறது.

நமது சங்க இலக்கியங்களிலும் முத்திரை இடம்பெற்றதை பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. சங்ககாலத் துறை முகப்பட்டினமான காவிரிப்பூம்பட்டினத்தில் மதில் சுவரில் இருந்த கதவுகளில் (புலிப்பொறி போர்க் கதவின் - பட்டினப்பாலை 40) புலி முத்திரை இடப்பட்டிருந்தது. பூம்புகார் துறைமுகத்தில் இருந்த பொருள்கள் ஏற்றுமதி இறக்குமதி ஆனது பொருள்களின் மீது புலி முத்திரை இலச்சினை பொறிக்கப்பட்ட (பட்டினப்பாலை 131 - 137) கூறுகிறது.

புலி பொறித்து புறம் போக்கி
மதி நிறைந்த மலி மண்டபம்
பொதி மூடைப் போர் ஏறி ...

சோழன் நலங்கிள்ளி தன் புலி இலச்சினையை தனது எதிரிகளின் கோட்டைக் கதவில் பொறித்தான் என புறநானூறு (புறம் - 33 - 39) கூறுகிறது. மேலும் எதிரிகளின் மலையின் மீது புலியும் மீண்டும் ஒன்றாக பொறிக்கப்பட வேண்டும் என புறநானூறு (புறம் - 58) குறிப்பிடுகிறது. வில் - கயல் - புலி மூன்றும் இலச்சினையாகப் பொறிப்பது சங்க காலத்தில் நிலவி வந்த மரபினை சிலம்பும் எடுத்துக்கூறுகிறது.

தமிழ்நாட்டில் நடைபெற்ற பல அகழாய்வுகளில் வரலாற்றுச் சிறப்பினை எடுத்துக் கூறும் வகையில் முத்திரைகள் கிடைத்துள்ளன. கோவை மாவட்டத்தில் பேரூர் அகழ்வாய்வில் மற்றும் திருப்பூர் பகுதியில் மேற்கண்ட ஆய்வில் பானை ஓட்டில் சேரமன்னர்களின் வில், விளக்குகள் போன்றவற்றுடன் வட்ட வடிவ பானை ஓடுகள் கிடைத்துள்ளன. கோயம்புத்தூர் அருகே போளுவாம்பட்டி என்ற ஊரில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சிகளில் 6-ஆம், 7-ஆம் நூற்றாண்டு கால கிரந்த எழுத்துக்கள் உடன் சுடுமண் முத்திரையும் அதன் பின்புறம் பட்டையாக கயிறு கட்டியதற்கான அடையாளங்கள் உள்ளன. ஏற்றுமதியாகும் மூட்டையின் மீது கயிற்றால் பிணைத்த கட்டு அதன் மீது களிமண் வைத்து முத்திரை இடப்பட்டு இருக்கவேண்டும்.

இதேபோன்று சென்னைக்கு அருகில் குன்றத்தூரில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சியிலும் கிரந்த எழுத்துக்களுடன் களிமண் முத்திரை கிடைத்துள்ளது. அரிக்கமேடு, காஞ்சிபுரம், அழகன்குளம் போன்ற இடங்களில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சிகளிலும் முத்திரைகள் கிடைத்துள்ளன. விழுப்புரம்

அருகே கோப்பெருஞ்சிங்கனின் தலைநகராக விளங்கிய சேந்தமங்கலத்தில் நடைபெற்ற அகழ்வாய்வில், உலோகத்தால், கையால் பிடித்துக் கொள்ளும் வகையில் அமைந்துள்ள பாண்டிய அரசர் இலச்சினையான இரண்டு மீன்களுடன் முத்திரை கிடைத்துள்ளன. முத்திரை இடுவதற்கு ஏதுவாக இலச்சினை சற்று குழிவாக காணப்படுகிறது.

தமிழகத்தில் ஆட்சி செய்த மன்னர்களின் இலச்சினையுடன் கூடிய கல்வெட்டுகள், செப்பேடுகள், மண்டபத்தூண்கள், கோபுரங்கள் போன்றவை காணப்படுகின்றன. அரச முத்திரைகள் என்பது ஒரு வரலாற்று சான்றாக திகழ்கிறது. அப்பகுதியில் ஆண்ட மன்னர்கள் மற்ற அரசர்களோடு கொண்டிருந்த உறவுகள், வெளியிட்ட காசுகள் பற்றி அறிந்துகொள்ள உதவுகிறது.

பாணகவி எழுதிய ஹர்ஷ சரித்திரத்திலும் அரசனுடைய முத்திரை பற்றிய சம்பவம் காணப்படுகிறது. கௌட தேசத்தின் மீது படையெடுத்துக் கிளம்பிய ஹர்ஷ மன்னன் நதிக்கரையில் படைகளுடன் இருந்தார். அப்பொழுது அந்த ஊர் அதிகாரி அன்றைய தினம் செய்யவேண்டிய செயல்களுக்கு ஆணை வேண்டி உத்தரவுக்கு முத்திரையை அளிக்க பொன் முத்திரை ஒன்றையும் கொடுத்து அதனை பொறிப்பதற்காக களிமண்ணையும் நீட்டினார். அரசன் வாங்கிய முத்திரை தவறிக் கீழே விழுந்து நிலத்தில் பதிந்தது. அதிகாரிகள் கவலையடைய அரசனோ இவ்வுலகம் முழுவதும் தன் ஒரே ஆணைக்கு அடங்கியதாகும் என நினைத்து மகிழ்ந்தான் என்ற செய்தி காணப்படுகிறது.

தொன்மைச் சிறப்புமிக்க கீழடி - அகரம் அகழ்வாராய்ச்சிகளில் கிடைக்கும் சுடுமண் - முத்திரைகள் வரலாற்றுச் சிறப்பு மிக்கதாக விளங்குகிறது. தொடர்ந்து நடைபெறும் அகழ்வாராய்ச்சிகளில் கிடைக்கும் தொன்மைச் சான்றுகள் முத்திரைகளின் பயன்பாட்டை அறிய உதவும். சுடுமண் முத்திரைகள் தமிழகத்தின் வரலாற்றுக்கு மேலும் பெருமை சேர்க்கும் என்றால் மிகை இல்லை.

கி. ஸ்ரீதரன்
தொல்லியல் துறை (ஓய்வு) சென்னை

நன்றி: தினமணி

## 12 • வேட்டவலம் - பாக்கம்: கற்கால உலகத்தின் பொற்பாதை

• • • ச.பாலமுருகன்

பண்டைய காலத்தில் தொண்டை மண்டலமாக கருதப்படுகின்ற வடதமிழ்நாட்டுப் பகுதிகள் வரலாற்றுக்கும் தொல்லியலுக்கும் அளப்பறியச் சான்றுகளை அளித்துக்கொண்டே உள்ளது. சமணம், பௌத்தம், நடுகற்கள், பாறை ஓவியங்கள், குடைவரைகள், கோயில்கள், பெருங்கற்கால மற்றும் புதிய கற்காலத் தடங்கள் எனப் பட்டியல் நீளும். இவை அனைத்தும் ஒரே பகுதியில் காணவேண்டுமெனில் நாம் செஞ்சிக் குன்றுகளில் காணலாம். வேட்டவலம் பகுதியிலிருந்து ஆரம்பிக்கும் செஞ்சிக்குன்று வடகிழக்காகவும், தென்கிழக்காகவும் நீண்டு செல்கிறது. வடக்கே தேசூர்- வந்தவாசி வரையிலும் தெற்கே திண்டிவனம்- விழுப்புரம் வரையிலும் அமைந்துள்ள இந்த மலைப்பகுதியில் எத்தனை எத்தனை தொல்லியல் புதையல்கள். இந்த மலைத்தொடர்களைப் பார்ப்பதே ஒரு பரவச அனுபவம் தான். அப்படியொரு கொள்ளை அழகு.

செஞ்சி -வேட்டவலம் இடையே அமைந்துள்ள குன்றுகள் தொல்லியல் ஆர்வலர்களால் தேடப்படும் பகுதியாக மாறியதில் ஆச்சர்யம் இல்லை. அண்மையில் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட பல்லவர் கால ஓவியம், பாக்கம் மலைப்பகுதியில் உள்ள கோட்டைச்சிதிலங்கள், புதிய கற்கால இடங்கள், செத்தவரை ஓவியங்கள், வேட்டவலம் ஓவியங்கள், கஞ்சூர் சமணப்படுக்கை ஆகியவற்றின் நடுவே அமைந்துள்ள நல்லான் பிள்ளை பெற்றாள் கிராமத்தில் வரலாற்று ஆர்வலர் பாரதிராஜா ஓர் அற்புதமாக புதையலைக் கண்டுபிடித்தார். அவர் அளித்த தகவலின் பேரில் திருவண்ணாமலை மாவட்ட வரலாற்று ஆய்வுநடுவத்தைச் சேர்ந்த மதன்மோகன், பழனிச்சாமி, ச.பாலமுருகன் ஆகியோர் கூட்டாக ஆய்வு செய்தோம். செத்தவரை ஓவியத்திற்கு சற்றேறக்குறைய இணையான இரண்டு ஓவியத் தொகுதிகள் அவரால் உலகத்திற்கு வெளிவந்துள்ளது. வாழ்த்துக்கள் பாரதிராஜா.

தொடரட்டும் தேடல்கள். அந்த ஓவியத்தைப் பற்றி....
வேட்டவலத்திற்கு வடகிழக்காக அமைந்துள்ள மலைப்பகுதியில் விழுப்புரம் மாவட்டம் செஞ்சி வட்டம் நல்லான் பிள்ளை பெற்றாள் கிராமத்தின் நந்தன் கால்வாய் அருகே ஒரு பாறையில் இரண்டு பகுதிகளாக ஓவியங்கள் காணக்கிடைத்தன. இதில் பாறையின் உயரமான பகுதியில் உள்ள ஓவியத் தொகுதியில் மீன் அல்லது ஆமை போன்ற தோற்றம் கொண்ட செஞ்சாந்து நிறத்தில் சுமார் 3 அடி நீளமும் 2 அடி அகலமும் கொண்ட ஓர் ஓவியமும் அதன் அருகில் ஊர்வன போன்ற வடிவம் கொண்ட ஓவியம் சுமார் 2 அடி நீளமும் ஓர் அடி அகலமும் கொண்டுள்ளது. அதன் அருகில் சுமார் 1 அடி நீளமும் 1 அடி அகலமும் கொண்ட சிறிய அளவிலான மீன் அல்லது ஆமை போன்ற வடிவம் கொண்ட மற்றொரு

ஓவியமும் அமைந்துள்ளது. இந்தப் பாறையின் கீழ்ப்பகுதியில் அமைந்துள்ள ஓவியத் தொகுதியில் இரண்டு மனிதர்கள் உருவமும் வடிவியல் சார்ந்த குறியீடு கொண்ட ஓவியங்களும் உள்ளன.



இந்த ஓவியங்கள் வெண்சாந்து நிறத்தில் வரையப்பட்டுள்ளது. அதன் அருகே உள்ள பாக்கம் கிராமத்திலும்  ஏரிக்கரையின் அருகில் உள்ள மற்றொரு பாறை ஒன்றில் மங்கலான நிறமுடைய வெண்சாந்து ஓவியங்கள் கண்டறியப்பட்டன,

இவ்வோவியங்கள் குறித்து பாறை ஓவிய ஆய்வாளர் காந்திராஜன் கூறியதாவது, இங்கு இரண்டு காலகட்டத்தைச் சேர்ந்த ஓவியங்கள் உள்ளன என்றும் முதலாவது பிரிவில் உள்ள ஓவியங்கள் வெண்சாந்து மற்றும் செஞ்சாந்து நிறங்கள் கலந்த ஓவியங்கள் உள்ளன என்றும் இவை புதிய கற்காலத்தைச் சேர்ந்ததாலாம் என்றும் இரண்டாவது தொகுதி ஓவியங்கள் வடிவியல் சார்ந்த குறியீடுகள் தனியாகவும் மனித உருவங்களும் சேர்ந்து வரையப்பட்டுள்ளன. இதில் கோடுகள் மிகத் தெளிவாகவும் வலிமையாகவும் காட்டப்பட்டுள்ளது. சில குறியீடுகள் கீழ்வாலை மற்றும் கிருஷ்ணகிரி பகுதிகளில் உள்ள குறியீடுகள் போன்ற வடிவத்தை ஒத்துள்ளது. மேலும் இங்கு காட்டப்பட்டுள்ள மனித உருவங்களில் ஆண்குறி கட்டப்பட்டுள்ளது இதுபோன்று ஒரு சில இடங்களில் மட்டுமே காணக் கிடைக்கின்றது. அருகில் உள்ள பாக்கம் கிராம எல்லையில் உள்ள ஓவியங்கள் மங்கிய நிலையில் மனித உருவங்கள் மட்டும் வரையப்பட்டுள்ளது. இந்த ஓவியங்கள் பெருங்கற்கால ஓவியங்களாக கருதப்படுகின்ற ஓவியங்கள் போல உள்ளது எனக் கூறினார் , இதன் அருகில் உள்ள செத்தவரை , கீழ்வாலை போன்ற ஊர்களிலும் ஏற்கனவே பாறை ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. தொடர்ச்சியாக இப்பகுதியில் பாறை ஓவியங்கள் கிடைத்து வருவது இதன் தொல்லியல் முக்கியத்துவத்தையும் அக்கால மனிதர்களின் கலை சிறப்பினையும் உணர்த்துகிறது. தமிழகத் தொல்லியல் துறை இந்த ஓவியத்தைப் பாதுகாத்து ஆவணப்படுத்த வேண்டும்.

## 13 • வீரபாண்டியன் காலத்துக் கல்வெட்டு

• • • முனைவர். ப. தேவி அறிவு செல்வம்

பொ.ஆ 2 முதல் பொ. ஆ13 வரை தமிழகத்தில் இருந்த எழுத்துமுறை வட்டெழுத்து. இவற்றுடன் கிரந்த எழுத்து கலந்ததுதான் மலையாள எழுத்து வடிவம். அவ்வாறான வட்டெழுத்துக் கல்வெட்டு மதுரை அருகே அருள்மிகு மணிகண்டீசுவரர் திருக்கோயிலில் உள்ளது.

**கோயில் அமைப்பு:**



பாண்டியர் காலத்து வட்டெழுத்து கல்வெட்டு உள்ள அருள்மிகு மணிகண்டீசுவரர் திருக்கோயில்

இக்கோயிலில், அருள்மிகு மணிகண்டீசுவரர், அருள்மிகு உமா மகேஸ்வரி, அருள்மிகு ஸ்ரீதேவி பூதேவி சமேத சுந்தரமாணிக்க பெருமாள் ஆகியோருக்கென மூன்று சன்னதிகள் தனித்தனியாக உள்ளன. இக்கோயிலானது விமானம் இல்லாத கற்றளியாக உள்ளது. சிவன் கோயிலில் பெருமாளுக்குத் தனி சன்னதி உள்ளது இக்கோயிலின் தனிச்சிறப்பாகும்.

**வீரபாண்டியன் காலத்துக் கல்வெட்டு:**



இக்கோயிலில் எஞ்சியுள்ள வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்று கூறும் செய்தி:
***தூணி...விருநாழியும்..ம் நில்லிரு குறுணி தயி...(ரா)ணட்டு மந்த் ராதி...ணிரு தூணிய்ங் நெல்லு நூற்றிரு***
(நன்றி தொல்லியல் மூத்த அறிஞர் திரு.ராஜகோபால்)

பொ.ஆ950 வாக்கில் சோழருடன் போரிட்டு சோழன் தலை கொண்ட வீரபாண்டியன் கல்வெட்டு இது. அவனுடைய அதிகாரி கண்டன் சாத்தன் என்பவர் திரு மாத்தூரில் ஸ்ரீகண்ட ஈசுவரம் என்ற கற்றளி எடுத்து, நிலம் கொடுத்து, அதில் ஒரு பங்கில் வரும் நெல்லினை கோயில் வழிபாட்டுப் பொருள்களைப் பிரித்துக் கணக்கிட்டுக் கொடுத்துள்ளார். இவ்விவரங்களைச் சொல்லும் கல்வெட்டின் ஒரு பகுதியாக இந்தக் கல்வெட்டு காணப்படுகிறது(Ref SII 5No.864-866).

## 14 • மிகப்பெரிய எழுத்துகள் கொண்ட மறுகால்தலை தமிழிக் கல்வெட்டு

• • • வே.சிவரஞ்சனி

**அறிமுகம்:**
தமிழகத்தில் பழந்தமிழ் எழுத்துப் பொறிப்புகள் கொண்ட கல்வெட்டுகள் நூற்றுக்கும் மேல் ஆவணப்படுத்தப்பட்டுள்ளன. இதில் பல கல்வெட்டுகள் தன்னகத்தே சிறப்பு கொண்டவை. அவற்றில் ஒன்று மறுகால்தலையில் உள்ள தமிழிக் கல்வெட்டு.

**அமைவிடம்:**
திருநெல்வேலியிலிருந்து சீவலப்பேரி வழியாக 21 கிலோ மீட்டர் தொலைவில் அமைந்திருக்கிறது மறுகால்தலை. முன்பு ஒரு காலத்தில் இந்த ஊருக்குச் செல்லும் சாலை தான் திருநெல்வேலியில் இருந்து இராமேஸ்வரம் செல்லும் பெருவழியாக விளங்கியது. இவ்வூரின் அருகில் தான் தாமிரபரணி, கடனாநதி, சிற்றாறு ஆகிய மூன்று நதிகளும் சங்கமிக்கின்றன. குன்றுகள் நிறைந்த இவ்வூரில் பூவிலுடையார் மலை என்று அழைக்கப்படும் குன்றின் மேற்குப் பக்கத்துத் தரையில் குகை ஒன்று உள்ளது. படுக்கைகளுடன் காணப்படும் இக்குகை பஞ்ச பாண்டவர் படுக்கை என மக்களால் கூறப்படுகிறது. இந்த குகையின் நெற்றியில் அமைந்துள்ள காடியின் கீழ் ஒரு தமிழிக் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது.



**தமிழிக் கல்வெட்டு:**
இக்கல்வெட்டு முதன்முதலாக 1906 இல் அப்போது திருநெல்வேலி மாவட்ட ஆட்சியராக இருந்த ஹெமைடு என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டது. கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த இக்கல்வெட்டு ஒரே வரியில் ஆழமாகப் பொறிக்கப்பட்டுள்ளது.



**கல்வெட்டின் வாசகம்:**
"வெண்காஸிபன் கொடுபித கல்கஞ்சனம் "(தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை). இதனை,
"வேண் கோஸிபன் குடுபிதகல காஞ்சணன்" என்று கிருஷ்ண சாஸ்திரி அவர்களும்,
"வேண் கோஸிபன் குடுபித கல் காஞ்சனம்" என்று சுப்பிரமணிய அய்யர், நாராயணராவ், டி.வி.மகாலிங்கம் ஆகியோரும்,
"வெண் காஸிபன் கொடுபித கல் கஞ்சணம்" என்று இரா.நாகசாமி மற்றும் மயிலை.சீனி அவர்களும்,
"வெண் காஸிபன் குடுபித கல் கஞ்சணம்" என்று ஐ.மகாதேவன் அவர்களும் வாசித்து உள்ளதாக தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை 2006 இல் வெளியிட்ட தமிழ் - பிராமி கல்வெட்டுகள் என்னும் நூலில் பதிவு செய்யப்பட்டுள்ளது.
நான் இக்கல்வெட்டை நேரில் சென்று காணுகையில்,
"வேண கோஸிபான குடுபிதா கால காஞசாணம" (கல்வெட்டில் உள்ளபடி)
"வெண் கோஸிபன் குடு(ப்)பி(த்)த கல் கஞ்சணம்" என வாசிக்க முடிந்தது.

இக்கல்வெட்டு, ஆய்வாளர்கள் மத்தியில் பெரும் சவாலாக அமைந்திருந்தது. அதற்கு இக்கல்வெட்டு குறிப்பிடும் "கல் கஞ்சணம்" என்ற சொல்லே காரணம். தோராயமாக வெண் காஸிபனால் இந்த குகையில் ஒரு கட்டட அமைப்பு அமைத்துக் கொடுக்கப்பட்டுள்ளது என்று பொருள் கொள்ளப்பட்டதே தவிர, கல் கஞ்சணத்திற்கான உரிய பொருளை ஆய்வாளர்களால் அறிய இயலவில்லை. இந்நிலை ஒரு நூற்றாண்டுக்கும் மேல் நீடித்தது.

2017 இல் ஐ.மகாதேவன் அவர்கள் இச்சொல்லின் பொருள் முடிச்சை அவிழ்த்தார். அதாவது, தமிழில் கசணை என்ற பெயர்ச்சொல்லுக்கு "ஈரம், ஈரப்பதம்" என்றும் கசி என்ற வினைச்சொல்லுக்கு "ஈரம் கசிந்து வழிதல்" என்றும் பொருள். மேலும் கஸி என்ற கன்னடச் சொல்லுக்கு "வழிந்து ஓடுதல்" என்று பொருள். இவற்றோடு கஞ்சணம் சொல்லை ஒப்பிட்டு நோக்கினால் "நீர்க் கசிவு வழிந்து ஓடும் தடம்" எனும் பொருள் நேரடியாக கிடைக்கிறது. ஆதலால் இக்கல்வெட்டில் உள்ள கல் கஞ்சணம் என்ற சொல் குறிப்பது குகையின் நெற்றியில் வெட்டப்பட்டுள்ள சல தாரையையே ஆகும். கஞ்சணம் என்ற சொல்லின் முன் கல் என்ற அடைமொழி இட்டதற்குக் காரணம் உண்டு. பெய்யும் மழைநீர் வீட்டின் உள் கசியாதவாறு மேற்கூரையில் சலதாரை ஓடுகளை அமைப்பதுண்டு. வீட்டுக் கழிவுநீரைச் சுடுமண் கலங்கள், குழாய்கள் கொண்டு பழங்காலத்தில் வெளியேற்றப்பட்டதை அகழாய்வு உணர்த்துகிறது.

இந்த கஞ்சணங்களில் இருந்து இது வேறுபட்டது என்பதை உணர்த்தத்தான் கல்வெட்டில் கல் என்ற அடைமொழி கொண்டு கஞ்சணம் குறிப்பிடப்பட்டு உள்ளதாக தெரிவித்திருந்தார். இப்போது கல்வெட்டின் பொருளைப் பாருங்கள், "வெண் காஸிபன் என்பவரால் அமைத்துக் கொடுக்கப்பட்ட நீர்வடி விளிம்பு" என்பதே இக்கல்வெட்டு கூறும் செய்தி. கல் கஞ்சணம் பற்றி இராமநாதபுரம் தொல்லியல் ஆய்வு நிறுவனத்தின் தலைவர் வே.இராஜகுரு அவர்கள் என்னிடம் கூறியதாவது, கஞ்சம் என்ற சொல்லுக்கு நீர் எனவும் பொருள் உண்டு. வாயின் வளைந்த மேற்பகுதி அண்ணம், அணம் எனப்படுகிறது. அவ்வகையில் குகையின் வளைந்த மேற்பகுதியையும் காரணப் பெயராக அணம் என்ற சொல் குறிப்பதாகக் கொள்ளலாம். எனவே குகையின் வளைந்த மேற்பகுதியில் நீர் வடியாமல் தடுக்க வெட்டப்பட்ட காடியை, கஞ்சணம் என்ற சொல் குறிப்பதாகக் கொள்ளலாம். இது கல்லில் அமைக்கப்பட்டதால் கல் கஞ்சணம் எனப்பட்டுள்ளது.

வெண் காஸிபன் - வெண் காசிபன் இப்பெயர் ஆசீவகத்துடன் தொடர்புடையதாக பேராசிரியர் நெடுஞ்செழியன் கருதுகிறார். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, காயன் > காயிபன் > காசிபன் அதாவது காயன் என்ற பெயர்ச்சொல்லில் இருந்து காயிபனும் பிறகு காசிபனும் தோன்றியதாகக் கூறுகிறது. இம்மூன்று பெயர்ச்சொற்களும் ஒரே பொருள் கொண்டவை. காய் என்ற வினைச்சொல்லுக்கு ஒளிர்தல், பிரகாசித்தல் என்று பொருள் உண்டு.

எனவேதான், நாம் நிலா ஒளிர்தலை நிலா காய்கிறது என்கிறோம். அப்படியென்றால் நிலா ஒளி வீசுகிறது, பிரகாசிக்கிறது என்று பொருள். இது பெயர்ச்சொல்லாக வரும்போது ஒளியன், ஒளி உடையவன், பிரகாசன், பிரகாசிப்பவன் என வரும். ஆகவே வெண் காசிபன் என்ற சொல்லுக்கு வெண்மையான ஒளியை உடையவன் (அ) பிரகாசத்தை உடையவன் என்று பொருள் கூறலாம். இதுபோல் வெண் என்ற முன்னொட்டு கொண்ட சங்ககாலப் புலவர் வெண்கண்ணனார், வெண்கொற்றன், வெண்பூதன் போன்று சில பெயர்கள் உள்ளன. சங்ககாலப் புலவர்களுள் ஒருவர் பெயர் காசிபன் கீரன். அத்தியிடம் தேவர்களையும் திரியிடம் அசுரர்களையும் பெற்ற ஒரு முனிவரின் பெயர் காசிபனார். மேலும் தமிழிக் கல்வெட்டுகளில், அழகர்மலை கல்வெட்டில் உள்ள கஸபன், யானைமலை கல்வெட்டில் உள்ள அரட்டகாயிபன், புகளூர் கல்வெட்டில் உள்ள செங்காயபன், தொண்டூர் கல்வெட்டில் உள்ள இளங்காயிபன் ஆகிய பெயர்கள் இங்கு ஒப்புநோக்கத்தக்கன.

**கல்வெட்டின் தனிச்சிறப்பு:**

1. ஒரு அடிக்கும் மேல் உயரம் கொண்ட எழுத்துகள். தமிழி கல்வெட்டுகளிலேயே இந்த கல்வெட்டு எழுத்துகள் தான் அளவில் பெரியவை.
2. இங்கு அசோகன் பிராமி எழுத்தான "ஸி" பொறிக்கப்பட்டு உள்ளது.
3. தமிழ்நாட்டில், ஆரம்பத்தில் கண்டுபிடிக்கப்பட்ட தமிழி குகைக் கல்வெட்டுகள் ஏதோ ஒரு பழங்கால எழுத்துகளால் வெட்டப்பட்டுள்ளன என்றே ஆய்வாளர்கள் கருதினர். இந்த கல்வெட்டைக் கண்டறிந்த பின்பு தான் பிராமி எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளதென முதன் முதலாக தெரிய வந்தது.

**முடிவுரை:**

இக்கல்வெட்டு எழுத்துகள் சீராக இல்லாமல் பெரிதும் சிறிதுமாக ஒழுங்கற்று அமைந்துள்ளன. தரைப்பகுதிக்கும் கல்வெட்டுக்கும் இடையில் ஏறக்குறைய 40 அடி உயரம். ஆதலால் படிப்பதற்கு ஏதுவாக பெரிய எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளதாகக் கருதலாம். இப்போது தரைப்பகுதி உயர்த்தப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு அமைந்துள்ள பகுதி தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் கட்டுப்பாட்டில் உள்ளது.

**உதவியவை:**

1. தொல்லியல் துறை தகவல் பலகை
2. ஆவணம் இதழ் 28, தொல்லியல் கழகம், 2017
3. தமிழ்-பிராமி கல்வெட்டுகள், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, 2006.

**கட்டுரையாளர்:**

வே.சிவரஞ்சனி, rmdsivaranjani2021[at]gmail.com
முதுகலைத் தமிழ் இரண்டாமாண்டு, சேதுபதி அரசு கலைக்கல்லூரி, இராமநாதபுரம்.

**ஒருங்கிணைப்பாளர்:**

இராமநாதபுரம் தொல்லியல் ஆய்வு நிறுவனம்.

## 15 • மண்ணில் இருந்து மீண்டு வந்த அரிதாரிமங்கலம் நடுகல் வீரன்

• • • ச.பாலமுருகன்

வரலாற்று ஆர்வலரும் புகைப்படக் கலைஞருமான திருவண்ணாமலை வெற்றிவேல் அவர்கள் மண்ணில் புதைந்தவாறு இருந்த புகைப்படத்தை அனுப்பி அதன் இருப்பிடத்தையும் அனுப்பினார். புகைப்படத்தைப் பார்த்தால் பழமையான நடுகல் என்று தெரிந்தது. மேலும் அதன் தலைக்கு மேலே காலியான வெற்றிடம் போல இருந்தது. கல்வெட்டு இருக்கிறதா என கேட்க, ஆம் என்றார் வெற்றிவேல். எனக்குச் சந்தேகமாக இருந்தது. இருந்தாலும் நேரில் சென்று பார்த்துவிடலாம் பக்கம் தானே என்று சென்றேன். துணைக்கு எனக்குத் தெரிந்த காஞ்சி வெங்கடாசலம் அவர்களை அழைத்துக்கொண்டேன்.

வெற்றிவேல் கூறிய பள்ளியின் எதிரே உள்ள நடுகல்லை ஆய்வுசெய்த போது மேற்புறம் 5 வரிகளில் கல்வெட்டு இருந்தது. ஆச்சர்யமும் சந்தோஷமும் கலந்த நிலையில் அங்கிருந்த ஊர் மக்களிடம் இந்த நடுகல்லின் முக்கியத்துவத்தைக் கூறினேன். உடனே ஆளுக்கு ஒரு கைபிடிக்க பல நாட்களாக மண்ணில் புதைந்திருந்த நடுகல் தூக்கப்பட்டு, அருகில் இருந்த புளியமரத்தின் கீழ் நிற்கவைக்கப்பட்டது. அப்போது பார்க்கும் போது பின்பக்கமும் எழுத்துக்கள் இருப்பது தெரியவந்தது. மாலை நேரம் ஆனாலும் அப்போதே அந்த எழுத்தைப் படிக்க வேண்டும் என்று முடிவு செய்து நடுகல்லை சுத்தம் செய்து மாவு பூசிப் படியெடுத்துப் பார்த்தால் இந்த நடுகல் முதலாம் பராந்தகன் காலத்திய பல்குன்றக்கோட்டத்து கீழ்வேணாட்டு காந்தளூர் கூற்றத்து என்று கல்வெட்டு முன்பக்கம் இருந்தது. பின்பக்கம் பெருமளவு சிதைந்து இருந்தது. புகைப்படம் எடுத்துக்கொண்டு கிளம்பிவிட்டேன்.

அதன் பிறகு மதன், பழனிச்சாமி ஆகியோர்களுடன் மீண்டும் சென்று அந்த நடுகல்லை, அருகிலேயே அனைவரும் பார்க்கும் வண்ணம் நிலையாக ஒரு தளம் அமைத்து நிற்கவைக்கப்பட்டது. இந்த நடுகல்லில் சுவாரஸ்யம் என்னவென்றால் சாலை ஓரமாக சுமார் 20 ஆண்டுகளாக உள்ளது. ஆனால், இதை யாரும் பார்க்கவில்லை அந்த ஊரைச் சேர்ந்த விக்னேஷ் என்பவர் வெற்றிவேலுக்குத் தகவல் அனுப்ப வெற்றிவேல் எனக்குச் சொல்ல அந்த நடுகல் மீண்டெழுந்தது. இதற்கு முன்னர் இந்த நடுகல் கூட்டுறவு கடை கட்ட பள்ளம் எடுக்கும் போது மண்ணுக்குள் இருந்துள்ளது. அதை எடுத்து சாலையின் மறுபுறம் போட்டுவிட்டனர். வரலாறு எப்படியோ தன்னை மீட்டுக்கொள்ளும் என்பது போல, அந்த வீரன் மிகவும் சிரமப்பட்டுப் பல ஆண்டுகளாக மண்ணுக்குள் உள்ளேயும் 20 ஆண்டுகளாக சாலையின் ஓரம் கேட்பாரற்றும் கிடந்தான். இன்று உற்சாகமாக வில்லும் வாளும் கொண்டு காட்சியளிக்கிறான். இந்த காட்சியைப் பார்ப்பது ஒன்றே போதும் எங்களை போன்ற வரலாற்று ஆர்வலர்களுக்கு.

இந்த நடுகல் கல்வெட்டில் சுமார் 5 அடி உயரமும் 2 அடி அகலமும் கொண்டது. இதில் உள்ள வீரனின் உருவம், இடது கையில் வில்லும் வலது கையில் வாளும் கொண்டு போருக்குத் தயார் நிலையில் உள்ளது போன்ற தோற்றத்தில் அமைந்துள்ளது. இதில் மேற்பகுதியில் 5 வரியிலும் பின்பக்கத்தில் 6 வரியிலும் கல்வெட்டுகள் உள்ளன.

இந்த கல்வெட்டை படித்தளித்த கல்வெட்டு அறிஞர் சு. ராஜகோபால், இந்த கல்வெட்டு மதிரை கொண்ட பரகேசரி என்ற பட்டம் உடைய பராந்தக சோழனின் முப்பத்துமூன்றாவது ஆட்சியாண்டில் (கி.பி. 940) வெட்டப்பட்டது என்றும் இதில் பல்குன்றக்கோட்டத்து கீழ்வேணாட்டு காந்தளூர் கூற்றத்தைச் சேர்ந்த அதிராக மங்கலம் என்ற ஊரில் நடைபெற்ற ஒரு போரில் ஈடுபட்டு கலிமுகற் பெருங்கருமான் மருமகன் மலையன் என்பவர் இறந்துள்ளான் என்று அக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.



அரிதாரிமங்கலம் நடுகல் கல்வெட்டு

1. ஸ்ரீமதிரை கொண்ட கோப்ப
2. ர கேசர பந்மற்மக்கி யாண்
3. டு முப்பத்து மூன்றாவது ப
4. ல் குன்றக் கோட்டத்துக் கீழ் வே
5. ள் நாட்டு காந்தளூர்க் கூற்றத்து அ



6. திரா...
7. கலிமுகற் பெருங்கருமான் மரு
8. மகன் மலையன் அதிராக மங்
9. கலத்து......யப்பன்
10. மங்க...
11. ....
12. ....

அரிதாரிமங்கலம் நடுகல் கல்வெட்டு

அரிதாரிமங்கலம் நடுகல் கல்வெட்டு

1. ஸ்ரீமதிரை கொண்ட கோப்ப
2. ர கேசர பந்மற்மக்கி யாண்
3. டு முப்பத்து மூன்றாவது ப
4. ல் குன்றக் கோட்டத்துக் கீழ் வே
5. ள் நாட்டு காந்தளூர்க் கூற்றத்து அ
6. திரா...
7. கலிமுகற் பெருங்கருமான் மரு
8. மகன் மலையன் அதிராக மங்
9. கலத்து......யப்பன்
10. மங்க...
11. ....
12. ....

இதில் குறிப்பிடும் அதிராக மங்கலம் என்பதே தற்போது அரிதாரிமங்கலம் (இடம்: 12°23'53.1"N 78°59'08.3"E) என்றுவழங்கப்படுவதாகவும் குறிப்பிட்டுள்ளார். இந்த வீரனின் நினைவாக வைக்கப்பட்டுள்ள நடுகல் ஒருகாலத்தில் மக்கள் வழிபாட்டில் இருந்துள்ளது. பின்பு ஏதோ காரணத்தால் பூமியில் பள்ளம் தோண்டி புதைக்கப்பட்டிருந்தது.

திருவண்ணாமலை மாவட்ட வரலாற்று ஆய்வு நடுவத்தினர் இதை மீட்டு சீரமைத்து மக்கள் பார்வைக்கும் வழிபாட்டிற்கும் ஏற்றவாறு அமைத்துக் கொடுத்துள்ளனர். இந்த கல்வெட்டை படித்தளித்த சு. ராஜகோபால் கல்வெட்டறிஞர் அவர்களுக்கும், இவையனைத்தும் சாத்தியமாக்கிய வெற்றிவேல், விக்னேஷ், அரிதாரிமங்கலம் ஊர்மக்களுக்கும் அன்பான நன்றி.

## 16 • பகையின் எல்லை……

• • • முனைவர் எஸ்.சாந்தினிபீ

சேலத்தில் சின்னதிருப்பதி என்ற ஓர் இடம் இருக்கிறது அஸ்தம்பட்டியில் இருந்து கன்னங்குறிச்சி போகும் சாலையில் மணற்காடு தாண்டிய பின் வருவது சின்னதிருப்பதி. சாலையின் வலது பக்கம் இடது பக்கம் இரண்டையும் சேர்த்து குறிப்பிடுகிறது. இதனை அடுத்து கன்னங்குறிச்சி, அதற்கும் வடக்கே மலைகள் தான். சேலத்தின் அழகும் பெருமையும் சுற்றி உள்ள மலைகள்தான்.

சாலையின் இடது பக்கம் அதாவது மேற்குப் பக்கம் மேலாகவும் உயர்ந்தும் மேடாகவும் சாலையின் வலது பக்கம் கிழக்குப் பக்கம் கீழாகவும் அமைந்துள்ளது புவியமைப்பு. வலதுபக்கம் சந்திரன் கார்டன் என்கின்ற ஒரு பகுதி வருகிறது, அந்த குறுக்குத் தெருவில் சற்றே உள்ளே நடந்தால் பொருளாதார வளமையைச் சொல்லும் பெரிய பெரிய வீடுகள். அவற்றின் இடையே இடிபாடுகளுடன் கூடிய ஒரு கோயில் இருக்கிறது. பார்வைக்கும் கட்டிட அமைதிக்கும் சற்று பழையதாகவே தெரிகிறது.

ஒரு பிரதான சாலையில் அமைந்திருக்கும் ஒரு கோயில் இப்படிக் கேட்பாரற்று காணப்படுகிறது. அதே நேரத்தில் தினமும் கூட்டிப் பெருக்கி கோலமிட்டு அவ்வப்போது சூலத்தில் வைக்கப்படும் எலுமிச்சைப் பழங்களும் மாற்றப்பட்டுக் காணப்படுகிறதே என்கின்ற ஒரு தேடல் என்னுள் எழுந்தது. மெல்ல அதை விசாரிக்க சில வியப்புக்குரிய தகவல்கள் கிடைத்தன .

இந்த கோவில் ஒரு குடும்பத்துக்குச் சொந்தமானது அவர்களுக்குள் இருக்கும் பங்காளி சண்டையின் காரணமாக இப்படி இடிபாடுகளுடன் காணப்படுகிறது. ஆனாலும் குலதெய்வம் என்பதால், தெய்வ குற்றத்திற்கு அஞ்சி இந்த காளி கோயிலை முற்றிலும் ஒதுக்காமல் அதைச் சுத்தப்படுத்திக் கோலமிட ஆள் அமர்த்தி உள்ளனர். அவ்வப்போது அவர்கள் இந்த கோயிலுக்கு வருவதும் உண்டு. குடும்பத்தார் தங்கள் குலதெய்வத்தை வணங்கிவிட்டுச் செல்வதும் உண்டு. ஆனால் எந்தவித பராமரிப்பும் இல்லாமல் இக்கோயில் பல ஆண்டுகளாக இப்படியே பட்ட மரம் போல் பாழாகிறது.

இதைப் பார்க்கும்போது சில வரலாற்று நிகழ்வுகள் என் மனதிற்குள் வருகிறது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அதாவது சுதந்திரத்திற்கு முன் வலங்கை இடங்கைப் பிரிவினர் நமது சமுதாயத்தில் மிகக்கடுமையாகத் தங்களுக்குள் பிரிந்து சண்டையிட்டுக் கொண்டனர். அவர்களுக்குள் ஏற்பட்ட வேறுபாட்டின் காரணமாக ஒரே கோவிலில் அவர்கள் கடவுளை வணங்கும் நேரம், பூசைக்கான நேரம், ஆடல் பாடல் காலநேரம், விழாக்களுக்கான நேரம் எல்லாமே வேறுவேறாக அமைத்துக் கொண்டனர் .

சற்று காலத்தே முன்னோக்கிச் சென்றால் சோழர் ஆட்சியின் கடைசி காலத்தில் வலங்கை இடங்கையினரின் சண்டை சச்சரவுகள் ஆரம்பமாகி விட்டதை அறிய முடிகிறது. பதினோராம் நூற்றாண்டில், பேரரசன் முதலாம் ராசராசனின் காலத்தில் இருவருமே வேறு வேறு படைப்பிரிவினராக கல்வெட்டுகளில் காணக் கிடைக்கின்றனர். ஆனால் 13-ம் நூற்றாண்டில் சுமுக சூழல் மாறி பூசல்களில் இறங்கினர். சண்டை, வெறும் சொல்லாடலோடு நிற்காது கைகலப்பு, குத்து, வெட்டு, கொலை என்று வளர்ந்தது.

பின்னர் வந்த விஜயநகர மன்னர்களின் காலத்திலும் இவர்களின் சண்டைகள் மிக அதிகமாக தென்படுகிறது. அவை கோவில்களிலும் வணங்கும், தெய்வங்களின் மேலும் அதிகமாகவே எதிரொலித்தன. கோயில் எரிப்பு,கோயிலைக் கொள்ளையிடுதல் போன்று எல்லைதாண்டியது. இதற்கான கல்வெட்டுச் சான்றுகளும் உள்ளன. 20-ம் நூற்றாண்டின் தெருக்களில் இவர்களின் சண்டைகளும் கொலைகளும் அதிகமாகியதைத் தடுக்க வேண்டிப் பார்த்த இடத்தில் சுட்டுத் தள்ள ஆங்கில அரசு உத்தரவு போட்டதைப் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியும் தனது சோழர் புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளார்.

வரலாற்றின் விட்டகுறை தொட்டகுறை போலும் பங்காளி சண்டையில் சேலத்து இக்கோயில் பாழடைந்து கிடக்கிறது. மனிதன் கொள்ளும் பகை கால காலமாக கோயிலையும் கடவுளையும் விட்டு வைக்கவில்லை என்பதே தெரிகிறது.

உதவிய நூல்கள்:


1. K.A. Neelakanda Sastri - Colas, 2nd Edition, University of Madras, 1985, Chennai.
2. ARE (Annual Reports on Epigraphy)185 of 1921.
3. ARE 273 of 1939-40, Para- 101.
4. ARE 1921, Part II, p – 47.



பேராசிரியர் முனைவர் எஸ். சாந்தினிபீ
அலிகர் முஸ்லிம் பல்கலைக் கழகம்

# 17 • வலங்கை இடங்கைப் பிரிவினைச் சச்சரவுகள்

• • • கே.ஆர்.ஏ. நரசய்யா

மதராசபட்டினத்து ஆரம்ப வருடங்களில் வலங்கை இடங்கை ஜாதிச் சச்சரவுகள் எழுந்தன. இந்த பாகு பாடு எப்படித் துவங்கினதெனத் தெரிந்து கொள்ள நாம் பல நூல்களை ஆராய வேண்டியுள்ளது. தவிரவும் சற்று பின்னோக்கிப் போகவேண்டியுமுள்ளது. இந்த பேதத்தைப்பற்றிய நூலொன்று இடங்கை வலங்கையர் வரலாறு என்ற பெயரில் டாக்டர் எஸ். சௌந்தரபாண்டியன் என்பவரால் தொகுக்கப்பட்டு, திரு நடன. காசிநாதன் (அன்றைய இயக்குநர், தொல் பொருள் ஆய்வுத்துறை, சென்னை) அவர்களால் பதிப்பிக்கப்பட்டு, தமிழ் நாடு அரசால் வெளியிடப்பட்டுள்ளது. இதன் பதிப்புரையில் இவ்வாறு ஆசிரியர் கூறுகிறார்.

"அரசினர் கீழ்த்திசை சுவடிகள் நூலகத்தில் உள்ள கீழ்வரும் நான்கு சுவடிகளின் பிரதியே இந்த நூல்:-

1. இடங்கை வலங்கை புராணம் (டி. 2793)
2. வலங்கைச் சரித்திரம் (
3. இடங்கை வலங்கை சாதி வரலாறு (டி. 2751)
4. புதுவை இடங்கை வலங்கைச் சாதியர் வரலாறு (டி. 3196)

இவற்றில் டி. 2751 டி. 2793 ஆகியன ஓலைச் சுவடிகள், மற்ற இரண்டும் தாள் சுவடிகள்.

"கல்வெட்டுகள் பதிப்புப் பெற்ற முறையிலேயே இந்த வரலாறுகளும் இங்கு பதிப்பிடப் படுகின்றன. அஃதாவது, மூலச்சுவடியில் என்ன வடிவில் உளதோ அதே வடிவு, இயன்றவரையில், இங்கு காப்பாற்றப்பட்டுள்ளது. மூலத்தில் உள்ள வடிவை வரலாற்று ஆசிரியர்கள் அப்படியே பெறுவதே, மேலாராய்ச்சிகளுக்கு வழி வகுக்கும்.

"முதலில் வருவது இடங்கை வலங்கைப் புராணம்: இது செய்யுளில் அமைந்த புராணம் அல்ல. இச்சுவடியின் தொடக்கம், 'ராப்புள்ளையனுக்கு ஒழிகரெ நாட்டுப் புன்னப்பன் எழுதிக் கொடுத்த பட்டயம்' என்று தொடங்குகிறது. இச்சுவடி தெலுங்கு எழுத்தில் முழுவதும் அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தகும்.

"வலங்கைச் சாதி பத்து என்று தான் இந்த சுவடி கூறுகிறது. தவிரவும், சிவனும் தேவேந்திரனும் இடங்கைக்கு உரியவர்கள் என்றும், பிரும்ம தேவனும் பிருகு முனியும் வலங்கைக்கு உடையவர்கள் என்றும் இச்சுவடி சொல்கிறது.

"இரண்டாவது சுவடி வலங்கைச் சரித்திரம். இது தஞ்சை வேதநாயக சாஸ்திரி என்னும் கிறிஸ்துவப்புலவர் மெக்கன்சிக்காகத் தொகுத்தளித்து. ஆசிரியர்

கூற்றுப்படி இதில் கிறிஸ்துப் பார்வை தென்படுகிறது. அவர் சொல் படி, "வலங்கை யென்கிறது, வெள்ளாளரையும் அவர்களைச் சேர்ந்த சகல சாதியாரையுஞ்சார்ந்து நிற்கும். இடங்கையென்றால், கம்மாளரையு மவர்களைச் சேர்ந்த சகல சாதியாரையுங்காட்டும்.

"இப்போ இருக்கிற சரபோசி மகராசாவின் நாளிலே 1798 வருஷத்திலே துவக்கி இரண்டு மூன்று வருஷக்காலம் இருதரத்தாரும் வழக்கிலே கிடந்து நெய்யிலே கையிட்டுக் கொண்டார்கள்" என்று வேதநாயகர் எழுதுவதால், இந்தச் சுவடி (டி. 462) எழுதப்பட்ட காலம் கி. பி. 1798-ஐ ஒட்டியது என்று அறியலாம் என்று நூலாசிரியர் கருதுகிறார்.

வலங்கையார் என்பதற்குப் பொதுவான இவரது கருத்து, "எந்தெந்த சாதி யுயர்ந்த கையா யிருந்ததோ, எவர்கள் காரியக்காரரோ அவர்களெல்லாம் வலங்கைத் தங்களோடே சேர்ந்தவர்களென்றார்கள்" என்பது வேதநாயகனாரின் கருத்து.

மூன்றாவது இடங்கை வலங்கைச் சாதி வரலாறு எனும் சுவடி. நூலாசிரியர் இந்த சுவடி மிகவும் இன்றியமையாதது என்கிறார். இதில் தான் இடங்கைச் சாதிகள் தொண்ணூற்றியெட்டும் வலங்கைச் சாதிகள் அதே எண்ணிக்கையில் உள்ளதாகவும் கூறப்படுகிறது. அவர்களுக்கு உண்டான அடையாளங்களும் தரப்பட்டுள்ளன. ஆசிரியர் சொல் படி, "பண்டைக்காலச் சமுதாயம் தொழில் வழிச் சமுதாயம். சாதிகள் பிரிந்ததே தொழில் அடிப்படையில்தான் என்பர். அவ்வகையில் ஆய இச்சுவடி பயனுள்ளது"

நான்காவது சுவடி புதுவை இடங்கை வலங்கைச் சாதியர் வரலாறு என்ற சுவடி. பல சாதிகளுக்கு இருந்த மதிப்பை இந்தச் சுவடி கூறுகிறது. எடுத்துக்காட்டாக,, விசுவகர்மருக்கு வெள்ளைக்குடை பிடிக்கும் மரியாதை புதுவைப் பகுதியில் இருந்திருக்கிறது. வலங்கைச்சாதிகளுக்கு அவர்கள் வீடு விழாக்களில் இன்ன குடை பிடிக்கவேண்டும், இன்னவகைக் கோல் பிடிக்க வேண்டும் என்று பல கட்டுப்பாடுகள் இருந்திருக்கின்றன என்பதையும், அதே போல இடங்கைச் சாதிகளுக்கும் வரையறைகள் இருந்திருக்கின்றன என்றும் இந்த நூல் தெளிவாக்குவதாக ஆசிரியர் கருதுகிறார்.

ஆசிரியர் கூறுகிறார்: "வெள்ளாளர், அகம்படியர், இடையர், கவரை, கோமுட்டி, கைக்கோளர், சேடர், சேணியர், இவர்கள் சவுக்கழி பிடிக்கவும், வெள்ளைக் குதிரை ஏறவும் சுதந்திரமுண்டு . . . . . .தேவடியார்களிலேயும் இடங்கைத் தேவடியார்கள், வலங்கைத் தேவடியார்கள் என்ற இரு பிரிவுகளை இச்சுவடி குறிப்பிடுகிறது.

"பொதுவாக இந்த நான்கு சுவடிகளும் கி. பி. 18ம் நூற்றாண்டிலும் அதற்கு முன்பும் தமிழ் நாட்டில் இருந்த இடங்கை வலங்கைச் சாதிப்பிரிவுகளைப் பேசுகின்றன. இவற்றால் அச்சாதிகளிடையே அடிக்கடி சிறு பூசல்கள் நிகழ்ந்த உண்மையும் அறிய இயலுகிறது.

"1876 ல் கியார்ண்ஸ் என்பவர் இடங்கை வலங்கைச் சாதிகள் பற்றிய ஒரு கட்டுரை வரைந்துள்ளார். அதில், விசுகர்மருக்கும் பிராமணருக்கும், புரோகிதத் தொழில் தொடர்பான பூசலை விலக்கி அந்தப் பூசல் இறுதியில், சோழன், தன்னை ஆதரிப்போர் வலங்கையர் என்றும், விசுவகர்மரை ஆதரிப்போர் இடங்கையர் என்றும் வரையறுத்ததாகக் கூறுகிறார்"

ஆசிரியர் தொடர்கையில், "அதே போல இடங்கை வலங்கை வரலாறும் பேசப்படுகிறது. ஜெர்மன் நூல் ஒன்றில், இடங்கைச் சாதிகளாக ஒன்பதும், வலங்கைச் சாதிகளாகப் பதினெட்டும் குறிக்கப்படுகின்றன. வேடர், நெசவாளர், செட்டிகள் (வியாபாரிகள்), முதலானோர் இடங்கையர். குயவர், வண்ணார், பல்லக்குத் தூக்குவோர், முகம்மதியரில் ஒரு பிரிவினர் முதலியோர் வலங்கையர். இப்பிரிவுகளைச் ஜெர்மன் நூல் தருகிறது" என்கிறார்.

சமீப காலத்தில், இந்த ஜாதிப் பிரிவினைகளைப் பற்றித் தெரிந்துகொள்ள பல அயல் நாட்டினரும் முயன்றுள்ளனர். அவர்களில் முக்கியமான இருவர் பர்ட்டன் ஸ்டெயின், மாட்டிசன் மைன்ஸ் ஆவர். இவர்களைத் தவிர பல ஆய்வாளர்களும் இதில் கவனம் செலுத்தியுள்ளனர். திருமதி கனகலதா முகுந்த் எனபவரும் தமது "த வ்யூ ஃப்ரம் பிலோ" என்ற நூலிலும் இதைப் பற்றி நன்கு ஆராய்ந்து விளக்கியுள்ளார்.

ஒய். சுப்பராயுலு எனபவர் இந்த ஜாதி பாகுபாடுகளைக் குறித்து மிகத் தீவிரமாக ஆய்வு செய்துள்ளார். அவர் கருத்துப்படி இந்த வேறுபாடுகள் சோழர் காலத்திலிருந்தே இருந்தவனெனத் தெரிகிறது. தமது நூலான சோழர் காலத்துச் சரித்திரத்தில் "சமூக மாற்றங்களும், வலங்கை இடங்கை பிரிவுகள்" என்ற தலைப்பில் அவர் கூறுவதைப் பார்க்கலாம்.

அவர் கண்டதின்படி, இந்தப் பிரிவுகள் சோழர் காலத்துக் கல்வெட்டுகளிலேயே காணப்படுகிறது. சில நூற்றாண்டுகளுக்குப் பின்னர் மறுபடியும் இந்த சர்ச்சை அதிகமாகக் காணப்படுவது, ஆங்கிலேயர் காலத்தில் தான். அதுவும் சிறப்பாக 18-19 நூற்றாண்டுகளின் காலகட்டத்தில் தான். இந்தக் காலத்தில் இந்த இரு பிரிவினரும் எதிர்த்துக் கொண்டு கலவரங்களில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டிருந்தனர் எனத் தெரிகிறது. இதைப் பற்றிச் சமீப காலத்தில் நன்றாகவே ஆராய்ச்சி செய்த அயல் நாட்டவர் பர்ட்டன் ஸ்டெயின் ஆகும். அவர் முடிவில் கூறியிருப்பது, இந்தப் பிரிவுகள், ஜாதிகள் அடிப்படையில் இல்லாது, அவ்வப்போது ஏற்பட்ட சமூக மாறுதல்களால் தான் என்பதாகும்.

டாக்டர் இரா. நாகசுவாமி இதைப்பற்றித் தமது நூலொன்றில் விளக்கியுள்ளார்
"வலங்கை இடங்கை:
"கி. பி. 10 - ம் நூற்றாண்டிலிருந்து மற்றுமொரு பிரிவைக் காண்கிறோம். இப்பிரிவு தமிழக வரலாற்றில் ஒரு சமூகப் புரட்சியாக சற்றேறக்குறைய அண்மைக்காலம் வரை நிலவி வந்தது. இது வலங்கை இடங்கை என்று பிரிக்கப்பட்ட குடிகளாகும்.

தஞ்சைப் பெருங்கோயிலில் இராஜராஜனின் பல பெயர்களால் வலங்கை வேளைக்காரர்கள் இருந்திருக்கிறார்கள்.

1. இராஜராஜ தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர்.
2. அரிதுர்க்க லங்கனத் தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர்.
3. மூர்த்த விக்ரம்பாரண தெரிந்த வலங்கை வேளைக்காரர்.
4. இரணமுகராமத் தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர்.
5. இராஜ கண்டிவத் தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர்.
6. சத்ருபுஜங்கத் தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர்.
7. அழகிய சோழத் தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர்.
8. க்ஷத்திரிய சிகாமணித் தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர்.

எனப் பல வலங்கை வேளைக்காரர் இருந்தனர் என்று அறிகிறோம். வலங்கை வேளைக்காரர் என்பது படை என்றும் அவற்றில் பல குடியினர் இருந்தனர் என்றும் அறிகிறோம். இராஜராஜனின் படையில் வலங்கை வேளைக்காரனாக வெள்ளாளன் இருந்தான் என்று ஒரு கல்வெட்டு கூறுகிறது. (238/ 17). 'இவ்வூர் இருக்கும் வெள்ளாளன் ஸ்ரீராஜராஜ தேவர் படை ஜநநாத தெரிஞ்ச வலங்கை வேளைக்காரரில் வண்ணக்கன் ஐய்யாறனாகிய சித்திரையாளி' என்று கல்வெட்டு கூறுவதால், இதை அறியலாம். அதிராஜேந்திர சோழனுடைய கல்வெட்டில் (4 / 8) 'வலங்கை இடங்கை மகமை' என்று குறிக்கப்படுகிறது. இதிலிருந்து வலங்கை இடங்கை என்னும் பாகுபாடு 11 - ம் நூற்றாண்டிலேயே நிலைத்து விட்டது என்பது தெளிவு.

"கைவகுத்தல் (வலங்கை இடங்கை தோற்றம்):

"வலங்கை இடங்கை என்னும் பாகுபாடு எவ்வாறு தோன்றியது என்று தெளிவாகத் தெரியவில்லை. பெரும் பாலும் படை அரசனின் வலக்கைப் புறத்தும் இடங்கை புறத்தும் வகுத்து நிறுத்தப்பட்டதிலிருந்து இது தோன்றியிருக்கலாம் என்று கொள்ளலாம். ஏனாதிநாதர் தனது படையை பாகுபடுத்தி நிறுத்தியதை 'கை வகுத்து' என்று பெரிய புராணம் கூறுகிறது. இதிலிருந்து படை வகுப்பது 'கைவகுத்தல்' எனப் பெயர் பெற்றது என்பது தெளிவு. சிறந்த திறன் மிக்கப் போர் புரிவோர் அரசனின் வலப்புறத்தும் அவர்களுக்குக் களத்தில் படைக்கலங்களை நீட்டித்தருதல் முதலிய பணி புரிவோர் இடப்புறத்தும் நிறுத்தப்பட்டிருக்கக் கூடும். போர்ப்புறத்து வீரர்கள் முதலிடமும், வேல் வடித்துக் கொடுத்தல் முதலிய தொழில் புரிவோர் இரண்டாவது இடமும் பெறுவதில் வியப்பில்லை. தங்கள் உயிரை மதியாது போரிட்ட வீரர்களுக்கு உயர் இடம் அளித்தது இயல்பே. உயர் இடத்தைக் குறிப்பதற்காக வலப்புறமும் இரண்டாம் இடத்தைக் குறிக்க இடப்புறமும் கொள்ளப்பட்டன். ஆதலின் காலப்போக்கில் வலங்கையினர் இடங்கையாரைக் காட்டிலும் ஜாதியில் உயர்ந்தவர் என்று கருதிக் கொள்ளத் தலைப்பட்டனர்.

"எல்லா ஜாதியினரும் போர் வீரர்களாகப் பணி புரிந்திருக்கின்றனர் என்று முன்னரே கண்டோம். ஆதலில் எல்லா ஜாதியிலும் வலங்கை இடங்கை என்னும் பாகுபாடு காணப்பட்டது. ஆனால் பிராமணர்களுக்குள் இப்பாகுபாடு காணப்படவில்லை.

"கல்வெட்டுகளில் வலங்கை இடங்கையினருக்கு பல சலுகைகள் அரசனால் அளிக்கப்பட்டவை குறிக்கப்படுகின்றன. சக வருடம் 1340-ல் (கி. பி. 1418) திருவண்ணாமலையில் வலங்கை இடங்கை வகுக்கப்பட்டது என்றும் வலங்கைக்குக் கொடுக்கப்பட்ட சலுகைகள் என்ன என்பதும் குறிக்கப்படுகின்றன. 'திருவண்ணாமலையில் வலங்கை இடங்கை இல்லை. திருவண்ணாமலையில் இரண்டு தெருவில் கைக்கோளருக்கு முன்பு பூர்வம் நடந்து போந்த சங்கு, தண்டு, ஆனை, சாமரம், மற்றும் வலங்கைக்கு உரிய வரிசைகள் எல்லாம் நடக்கக்கடவதாக' என அரசன் ஆணையிட்டதைக் கல்வெட்டு கூறுகிறது. (155 / 8) சக வருடம் 1350 - ல் (கி.பி. 1428) திருவையாற்றில் வலங்கை சாதி 98 ம் இடங்கை ஜாதி 98 ம் குறிக்கப்படுகின்றன. 'பொய்கை நாட்டு தென்கால சபையாரும் வலங்கை 98 ஜாதியும், இடங்கை 98 ஜாதியும் நிறைவற நிறைந்து குறைவற குவிந்து' என்று குறிக்கிறது. இதிலிருந்து கி. பி. 15 ம் நூற்றாண்டில் சற்றேறக்குறைய 98 ஜாதிகள் வலங்கையிலும் இடங்கையிலும் இருந்ததாக அறியலாம் இதிலிருந்து ஒவ்வொரு ஜாதியிலும் வலங்கையும் இடங்கையும் இருந்தனர் என்பது தெளிவு. செல்வத்தாலும் செல்வாக்காலுமே இப்பிரிவு ஏற்பட்டுப் பின்னர் ஜாதி அடிப்படையில் அமைந்தது என்றும் கருதலாம். வலங்கை என்பது அரசனால் ஏற்படுத்தப்பட்டது என்பதும் தெளிவு."

கம்பெனி காலத்தில் சாதாரணமாக அறியப்பட்டது, ஒரு பக்கம் விவசாயம் செய்பவர்களுக்கும், மறுபக்கம் கைத்தொழில் மற்றும் வணிகம் செய்பவர்களுக்கும் இடையில் தான் அடிக்கடி இம்மாதிரியான பேதங்கள் இருந்தன என்பதாகும். ஆனால் சில காரணங்களுக்காக இந்த எண்ணம் ஒதுக்கப்பட வேண்டும் என்கிறார் சுப்பராயுலு. முதல் காரணம், 14- 15 நூற்றாண்டு கல்வெட்டுச் சாசனங்கள் இடங்கை பற்றியவை, பள்ளி அல்லது வன்னியர் குலத்தைச் சேர்ந்தவர்கள் குறிப்பிடப்படுகிறார்கள். இந்த குலத்தைச் சேர்ந்தவர்கள் சரித்திரத்திற்குத் தெரிந்த சில ஆயிரம் ஆண்டுகளில் வணிகத்தொழிலோ கைத்தொழிலோ செய்தவர்களல்ல; இந்தக் குலம் முதன் முதலாகக் குறிப்பிடப்படுகையில், போர்வீரர்களாக 11ம் நூற்றாண்டுக் காலத்தில் அறியப்பட்டார்கள். இவர்கள் சோழர்களது படைகளில் இருந்தனர். ஆனால் பிற்காலத்தில், விவசாயத் தொழிலுக்குச் சிறிது சிறிதாக இரண்டு நூற்றாண்டுகளுக்குள் மாறினர். அப்போதிருந்து அவர்கள் நிலை மாறவில்லை. இரண்டாவதாக, அய்யவோலே வணிகக்குழு சாசனங்களில், (11-13 நூற்றாண்டுகளில்) அவர்கள் வலங்கைக் குழுக்களாகத்தான் அறியப்படுகிறார்கள்.

நத்தம் கோயில்பட்டி வணிகக் குழு சாசனத்தில், (11ம் நூற்றாண்டைச் சேர்ந்தது) இவ்வாறுள்ளது:
நாட்டுச் செட்டிகளும், தன்ம செட்டிகளும், சேம்பியன் சேனாபதி ஆண்டான், வைகுண்ட நாடாள்வான் என்கிற வலங்கை மீகாம வீரகங்க பிள்ளை. . . என சொல்லப்படுகிறது. இதிலிருந்தும் வணிகர்கள் வலங்கைக் குழுவில் இருந்ததாகத் தெரிகிறது.

சுப்பராயுலு தொடர்கிறார்:

"சரித்திர பூர்வமாக, வலங்கை-இடங்கை பெயர்கள் சோழர் காலத்திலிருந்து இருப்பது தெரிகிறது. முதல் முதலாக வலங்கை என்ற சொல், 10வது நூற்றாண்டின் பிற்பகுதியில், ராஜராஜன் (985-1014) காலத்துச் சாசனங்களில் காணப்படுகிறது. தென்னிந்திய அரசர்களில், ராஜராஜன் தான் முதன் முதலாக போர்ப்படைகளைப் பெரிய அளவில் உருவாக்கினதாக அறிகிறோம். அதன் பிறகு, 11 வது நூற்றாண்டில், வரி ஒன்றைக் குறித்துப் பேசுகையில், வலங்கை இடங்கை என்று குறிப்பிடப்படுகிறது. ஆனால் இவற்றில் எவரெவர் இருந்தனர் என்று குறிப்பிடப்படவில்லை. ஆகையால் இவர்கள் போர்ப் படையினரெனக் கொள்ளுதலில் தவறிருக்காது. 11 வது நூற்றாண்டில் தான் முதன் முறையாக இடங்கை குறிப்பிடப்படுகிறது. அப்போது கூட வலங்கை போர்ப் படையாளர்கள் தனியாகக் குறிப்பிடப் பட்டுள்ளனர். உதாரணமாக, 1073 ம் ஆண்டு கல்வெட்டு, (கோலார் ஜில்லா) வலங்கை-மஹாசேனா, சோழமண்டலத்திலிருந்து வந்த, ஒரு பெரிய வேளாண் கூட்டம் கூடியபோது, அங்கு இருந்ததாகக் குறிப்பிடுகிறது. . . ."

அவர் கருத்துப்படி முதலில் போர்ப் படையாளர்களைக் குறிப்பிடத்தான் இச்சொற்கள் பயன் பட்டு வந்தன என்பதாகும். ஆனால் பிற்காலத்தில் முற்றிலும் மாறி அவ்வப்போது சமூக நிலைமையைக் குறிக்கும் சொற்களாக மாறி விட்டன.

மதராசபட்டினத்திலிருந்த வலங்கை இடங்கைக் குழுக்களுள், அவ்வப்போது, பேதங்கள் ஏற்பட்டுக்கொண்டிருந்தன. இவை கட்டுக்கடங்காமல் பல தடவைகள் குழப்பமூட்டிக் கொண்டிருந்தன. அப்போது அறிந்திருந்த படி, பேரி செட்டிகள், கைவினையாளர்கள், நெசவாளிகள், தோல் பதனிடுவோர் முதலானோர் இடங்கைக் குழுவில் இருந்தனர். வெள்ளாளர்கள், ஆரிய வைசியர்கள் (கோமுட்டிகள்), வன்னியர்கள், ஆதி திராவிடர்கள், வலங்கையினராக இருந்தனர். இவர்களுள் சண்டைகள் மூண்டதற்குக் காரணம், திருமணம் போன்ற நல்லவை நடக்கும் போதும் சாவு ஊர்வலம் போன்றவை நிகழும் போதும், அந்நிகழ்வுகளில் சம்பந்தப் பட்டவர்களுக்குக் கொடுக்கப்படும் மரியாதைகள் குறித்தும், அவைகளுக்கான ஊர்வலங்கள் செல்லும் வழிகள் பற்றியும் தான்!

இரண்டு குழுவினரும் அணியும் உடைகளில் கூட சில உரிமைகள் கொண்டாடப்பட்டன. அதே போல அவர்களது விழாக்களின் போது அமைக்கப்படும் பந்தல்கள் கூட அவர்களுக்குள் சச்சரவை ஏற்படுத்தின. கிட்டத்தட்ட அயர்லாந்து ஸ்காட்லாந்து போன்ற நாடுகளில் இருந்த இடைக்காலப் பிரச்சினைகள் போலத்தான் இவையும் இருந்தன என்பது தான் உண்மை. அங்கும் இதே போல மிகச் சிறிய பிரச்சினைகள் பெரியவையாக்கப்பட்டு, அவற்றால் போர்களே மூண்டிருக்கின்றன எனப் பார்க்கையில் இவை போன்ற பிரச்சினைகள் தமிழ் நாட்டில் மட்டும் நடந்ததாக சொல்ல இயலாது.

ஆங்கிலேயரின் மதராசபட்டினத்து வருகை, ஒரு புதிய வணிக எழுச்சியை உண்டாக்கிற்று. இந்த அயல் நாட்டு வணிகத்தால் ஈர்க்கப்பட்ட தென்னிந்தியர்கள்

பல இடங்களினின்றும் மதராசபட்டினம் வந்து சேர்ந்தனர். அன்றிருந்த நிலையில் ஆங்கிலேயர்களுடன் வணிகம் செய்து பொருளீட்டும் வர்க்கம் சமூகத்தில் ஒரு தனி அந்தஸ்தையும் பெற்றது. ஆகையால் அவர்கள், தமது ஜாதிகளைப் பிரித்துக்கொண்டு இடங்கை வலங்கையினராகப் பிரிந்த போது, அவர்களுள் உயர்வு தாழ்வு பேதமும் தலை தூக்கலாயிற்று.

தென்னகத்தில், பல இடங்களிலிருந்தும் வந்த வணிகர்களும் அவர்களுக்கு உதவ வந்த பல தொழில் விற்பன்னர்களும் ஆங்கிலேயர் வந்த சில வருடங்களுக்குள் மதராசபட்டினத்தை நோக்கிப் புலம் பெயர்ந்தனர். சிறு குப்பங்களாக மீனவர்களுடன் மட்டுமேயிருந்த இந்த ஊர் ஜனத்தொகையிலும், பரப்பளவிலும் பெருக ஆரம்பித்தது. அவ்வாறு பெருகுகையில் பல சமூகப் பிரச்சினைகளும் எழுந்தன. அதில் முக்கியப் பிரச்சினை சமூக நியதிகளும் உரிமைகளும் அவற்றால் உண்டான குழப்பங்களும் தாம்.

மதராசபட்டினத்தின் ஆங்கிலேயர் காலத்து முதல் பிரிவுப் பிரச்சினை 1652-53 ல் தான் ஏற்பட்டது. இதன் பிறகு அரசு கொடுத்த ஆணைப்படி பொதுவாக, இந்தியர் வாழ்ந்து கொண்டிருந்த ஊர்ப்பகுதியின் கிழக்குப் பாகம் இடங்கையினர் இருக்கும் பாகமாகவும், மேற்குப் பாகம் வலங்கையினர் வாழும் பாகமாகவும் ஆக்கப்பட்டது.

இரு பிரிவினருக்கும் இடையில், 1707 ல் ஒரு பெரிய பேதம் உருவாயிற்று. இதில் பொருட்சேதமும் உண்டாயிற்று. அது கிட்டத்தட்ட ஒரு வருடத்திற்குத் தொடர்ந்தது. சண்டை மூண்டதற்குக் காரணம், பெத்தநாயக்கன் பேட்டையிலுள்ள சில தெருக்களைப் பயன் படுத்துவதில் தான்! கலகத்தை அடக்க இராணுவத்தினர் அழைக்கப்பட்டனர். அப்போது பேமாஸ்டராக இருந்த ராவொர்த் எனபவர் கலகத்தைக் குறித்து விசாரிக்க நியமிக்கப்பட்டார். அப்போது வலங்கைப் பிரதிநிதியாக சேரப்பாவும் நாராயணன் எனபவரும், இடங்கைப் பிரதிநிதிகளாக காலவாய்ச் செட்டியும், வெங்கட செட்டியும் அழைக்கப்பட்டனர். ஜூலை மாதத்தில் ராவொர்த் ஒரு வரைபடம் தயாரித்து அதில் இரு பிரிவினர்கள் இடங்களும் குறிப்பிட்டார். மேற்குப் பாகம் முழுதும் வலங்கையினரால் குடியேறப்பட்டிருந்தது. ஆனால் அதில் இரண்டு வீதிகளில் (பிரிட்ஜ் கேட் வீதி, பெத்தநாயக் வீதி) இடங்கையினர் இருந்தனர். இந்த வீதிகளில் சில வலங்கையினர் இருந்தனர் அரசு அம்மாதிரி இருந்த இடங்கையினரை அவ்விடங்களை விட்டுக் காலி செய்து கிழக்குப் பக்கம் செல்லுமாறு உத்தரவிட்டனர். அங்கு அரசு எல்லைக் கற்களை நட்டுவிக்கவும் ஏற்பாடு செய்தது. இந்த ஆணை 17, ஜூலை 1707 ல் இடப்பட்டது.

ஆனால் அம்மாதிரி நடப்பட்ட கற்களில் ஆகஸ்டு மாதம் சில அரசுக்கு விரோதமான வாசகங்கள் எழுதப்பட்ட காகிதங்கள் ஒட்டப்பட்டிருந்தன! தவிரவும் வலங்கையினர் அவர்கள் தடுக்கப்பட்ட இடத்தில் ஒரு திருமணம் நடத்த ஏற்பாடு செய்து கொண்டிருந்தனர். அப்போது தான் அவர்கள் கைது செய்யப்பட்டு கோட்டை சௌல்ட்ரி சிறையில் அடைக்கப்பட்டனர். அவர்கள் அப்போது பழைய நிலைமைகளை எடுத்துக்கூறி அரசுக்கு விண்ணப்பித்தனர். ஆனால் இதற்குள், பல

வலங்கையினர் சாந்தோமுக்கு ஓடிவிட்டனர். மற்றவர்கள் தமது இல்லங்களுக்குள் தம்மையே அடைத்துக் கொண்டுவிட்டனர். கவர்னர் பிட் இதில் ஃபிரேசர் எனபவருக்குச் சம்பந்தம் இருப்பதாகச் சந்தேகித்து, அவர் மீது குற்றம் சாட்டினார். ஃபிரேசரோ தம்மீது சாட்டப்பட்ட குற்றங்களை நிரூபிக்கக் கேட்டார். கவுன்சில் கவர்னர் வேண்டுகோளுக்கிணங்கி, ஃபிரேசரைத் தற்காலிகப் பணி நீக்கம் செய்தது.

ஆகஸ்ட் 25ம் நாளன்று கவர்னர் பிட் இருதரப்பினரையும் அழைத்து அந்தப் பிரதிநிதிகளை ஓர் அறையில் தனியே இருத்தி அவர்களுக்குள் இருக்கும் பேதத்தைப் பற்றித் தீர்மானிக்கச் சொன்னார். அப்படி அவர்கள் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் படி, பெத்தநாயக்கன்பேட்டை முற்றிலுமாக வலங்கையினருக்கும், முத்தியால்பேட்டை முற்றிலுமாக இடங்கையினருக்கும் ஒதுக்கப்பட வேண்டுமென ஆயிற்று. ஆனால் கரையோரம் வாழும் மீனவர்கள் இதனால் பாதிக்கப்படக்கூடாதெனவும் தீர்மானிக்கப்பட்டது. எல்லா மாற்றங்களும் 1708 ஜூன் முதல் தேதிக்குள் செய்து விட வேண்டுமெனவும் தீர்மானித்தனர். ஆனால் சாந்தோம் சென்ற பலரால் இந்த முடிவை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அவர்கள் அங்கேயே இருந்தனர்.



அப்போது கவுன்சில், சூரப்பா, வெரொனா, சுங்கராமா மற்றும் ஆதி செட்டி எனபவர்களை வலங்கைக்காகவும், கால்வே செட்டி, வெங்கட செட்டி, பீதாம்ப செட்டி மற்றும் கார்னப்பா செட்டி முதலானோரை இடங்கைக்காகவும் வரவழைத்து பேச்சு வார்த்தை நடத்திய பின்னர் இவர்கள் 25ஆம் தேதியன்று செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தத்தை அங்கீகரித்து கம்பெனிக்கு ஒத்துழைப்பதாக அறிவித்தனர். அரசு, அவ்வாறு ஊரை விட்டுச் சென்றவர்களில், செப்டம்பர் 10ந் தேதிக்குள் திரும்பி வந்து விடுகிறவர்களுக்கெல்லாம் பொது மன்னிப்பு அளிப்பதாகவும் அறிவித்தது. அந்த நாளுக்குள் அந்தக் கற்கள் அகற்றப்பட்டு விட்டன. ஆனால் ஊரை விட்டு ஓடியவர்களிடமிருந்து, கடுமையான பதில் தான் வந்தது. அவர்கள் அதில் கம்பெனியைச் சரியாக மற்றொரு முறை பழைய ஆவணங்களைப் பரிசீலிக்குமாறு கூறினர். செப்டம்பர் 14ம் தேதியன்று, பெர்சியர்கள், பட்டான்கள், மற்றும் ஆர்மேனியர்கள் தாங்கள் இந்த பிரச்சினைக்குத் தீர்வு காண முயல்வதாக முன் வந்தனர். நாராயணன், மற்றும் முல்லா, பாப்பா பிராமணி மூவரும் இதற்காக சாந்தோம் நோக்கிச் சென்றனர். ஆனால் அவர்கள் சாந்தோம் வாயிலிலேயே நிறுத்தப்பட்டனர். சின்ன கேப்டன் என்று அவர்களால் அழைக்கப்பட்ட ஃபிரேசர் அங்கு வர வேண்டுமெனவும் அவரின்றி ஒரு முடிவும் எடுக்கப்பட மாட்டாதெனவும் அங்கு கூடிய மக்கள் கூக்குரலிட்டனர்.

அப்படி ஏற்படுத்தப்பட்ட குழப்பம் அரசுக்கு, ஃபிரேசர் மேலிருந்த சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்வதாய் இருந்தது! அப்போது அங்கு வந்திருந்த நவாபின் பிரதிநிதியும், கவர்னர் பிட்டைச் சென்று பார்த்துத் தனது சந்தேகத்தையும் கூறியிருப்பார் போலும்.

ஆகையால் அவரும் இந்த பிரச்சினைகளுக்கெல்லாம் பின்னிருந்து மூட்டிவிட்டவர் ஃபிரேசர் என்பது தெரிந்து விட்டதாகச் சொன்னார். ஆகையால் ஃபிரேசர் கைது செய்யப்பட்டார். அப்போது புதிதாக சாந்தோம் கவர்னராக நியமிக்கப்பட்ட ஒரு வலங்கை ஹிந்து மனிதரின் போக்கு தான், படைபலத்தைப் பயன் படுத்தி கலகக்காரர்களை அடக்க நினைத்த அரசின் முயற்சியை நிறுத்தியது. நவம்பர் ஆரம்பத்தில் இடங்கைப் பிரிவினர் தாங்கள் அமைதியான வாழ்க்கை நடத்திக்கொண்டிருப்பதாகவும், கருப்பு டவுனுக்குச் சுவர் கட்ட தாங்களே ஒரு பகுதி வரி கட்டுவதாகவும் தெரிவித்தனர். அதன் படி முத்தியால்பேட்டை அவர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டுமெனவும், பெத்தநாயக்பேட்டை வலங்கைக்கு அளிக்கப்படலாமெனவும் தெரிவித்தனர். அப்போது, நெசவாளிகளும், எண்ணெய் தொழிலாளர்களும் தமது பிரிவுகளைப் பற்றிச் சரியாக அறிந்திருக்கவில்லை. 1708, ஜனவரி 17 அன்று நெசவாளிகள், தாம் இடங்கையைச் சேர்ந்தவராகவும், எண்ணெய்த் தொழிலாளிகள் வலங்கையைச் சேர்ந்தவர்களாகவும், அறிவித்தனர் இது ஒப்புக்கொள்ளப்பட்டது. அப்போது ஏற்பட்ட புதியதொரு ஒப்பந்தத்தின் படி, கிட்டத்தட்ட 500 வீடுகள் இரு வகுப்பினரிடையே மாற்றிக்கொள்ளப்பட்டன. அதன் படி பெத்தநாயக்கன் பேட்டையின் சில பகுதிகள் இடங்கையினரால் பயன் படுத்தப்படலாம் என்று தீர்மானிக்கப்பட்டது. இந்தத் தீர்மானம் கவர்னர் பிட் ஆமோதிப்புடன் ஆணையாக ஆயிற்று.

ஆயினும் 1716ல் திரும்பவும் சச்சரவுகள் உண்டாயின. அப்போது இடங்கைச் செட்டிகள், வலங்கை கோமுட்டிகள் மீது பழி சுமத்தினர். அதன்படி, வலங்கையினர், தமது பட்டங்களை பயன் படுத்துவதாகவும், தமது தெய்வங்களுக்கு முன்னால் சில பூஜைகள் செய்து விட்டதாகவும் குறை கூறினர். அப்போது கவுன்சில், இருதரப்பினருக்கும் ஓர் ஆலோசனையை அளித்தது, அதன் படி, இரு தரப்பினர்களும், சம எண்ணிக்கையிலான பிராமணர்களைத் தமது பிரதிநிதிகளாக வைத்துக்கொண்டு அவர்கள் மூலம் பேச்சு வார்த்தை நடத்தி, ஒரு முடிவு காணலாம் என்றிருந்தது. ஆங்கிலேயர்கள் சாதாரணமாகப் பிராமணர்கள் பாரபட்சமின்றி முடிவெடுப்பார்கள் என நம்பியிருந்தனர். இது அந்த சமயத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டாலும், அந்த முயற்சி தோல்வி அடைந்தது. சில நாட்களில் வீட்டு வேலை செய்பவர்களெல்லோரும் (சமையற்காரர்கள், தண்ணீர் சுமப்பவர்கள், கூலிகள், பல்லக்குத் தூக்கிகள் முதலானோர்) தமது வேலையைத் துறந்து விட்டு, கையில் கண்ட ஆயுதங்களுடன், கருப்பு (இப்போதைய ஜார்ஜ் டவுன்) டவுனில் பெரிய கோஷத்துடன் வலம் வந்தனர். அங்கே வரும் நீரைக் கூட வர விடாது தடுத்தனர். அவர்களில் தலைவர்களாகக் கருதப்பட்டவர்களை அரசு, சங்கிலியால் பிணைத்துச் சிறையில் அடைத்தது. அதே வருடம் டிசம்பரில், செட்டிமார்களும், தமது எதிர்ப்பைக் காட்ட, தங்கள் கடைகளை மூடி விட்டனர். அதன் பயனாக இடங்கைப் பணியாளர்கள் வேலைகளும் நின்று போயின. தமது தேவைகளின் கருத்தையும் மனத்தில் கொண்டு, காலத்தின் அவசியம் கருதி, அரசு இதில் தலையிட முன் வந்தது. அவர்கள் பிராமணர்கள் முடிவையும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். முதலில் கவர்னர் பிட் கூறியது போலவே இரு வகுப்பினரையும் பிரித்து வைத்து, அவர்களுக்குள் சண்டைகள் வராது பார்த்துக்கொள்ள வேண்டி அவர்களது கோவில்களை அவரவர்களே பார்த்துக்கொள்ளவும் எனவும் சொல்லித் தாற்காலிகச் சமாதானம் அரசு ஏற்படுத்தி வைத்தது. அது அப்போதைக்கு ஒரு வழியாகக் காணப்பட்டாலும் அந்தப் பிரிவினை சமாதானத்தை நிலை நிறுத்தவில்லை. 1787 லிலும், 1790 லிலும் மறுபடியும் சண்டைகள் உண்டாயின. ஒரு விதமாக முதல் சச்சரவு நிறுத்தப்பட்டது அதற்காக ஆகஸ்ட் 1786 5ம் நாள் ஓர் அரசு ஆணை வெளியிடப்பட்டது. அதன் படி, "இனி சச்சரவுகள் வராமலிருக்க, இடங்கை வலங்கை சாதியினர் தமக்குரிய உரிமைகளின் படி தமது விழாக்களைக் கொண்டாடலாம். ஒருவர் விஷயத்தில் மற்றவர் தலையிடலாகாது. எஸ்பிளனேட் பொது இடமாகையால் இருவகையினரும் கம்பெனியின் விதி முறைகளின் படி அவ்விடத்தைப் பயன் படுத்திக் கொள்ளலாம்" என்றிருந்தது.

ஆனால், சில மாதங்களிலேயே இரு வகுப்பினருக்கிடையில் கருத்து வேறுபாடு உண்டாயிற்று. இது திருவொற்றியூர் கோவில் சம்பந்தமானது. இந்த வேறுபாட்டைக் குறித்துப் புரிந்து கொள்ள முதலில் இந்தக்கோவிலைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். திருவொற்றியூர் ஆங்கில மேலாண்மைக்கு அப்பாற்பட்டிருந்தது. இந்த கிராமம், 1708 ல் தான் வேறு ஓர் இடத்தில் கூறியுள்ளபடி, ஆங்கிலேயர் கைக்கு வந்தது. அப்போது ஆங்கிலேயர்கள் வரி வசூலிக்க, தமது இந்திய வணிகர்களையே பயன் படுத்தினர். அம்மாதிரியான பணிக்கு இந்த கிராமம், ஆங்கிலேயர்களால், பேரி செட்டி சமூகத்தைச் சேர்ந்த தம்பு செட்டி எனபவருக்கு உரிமையாக

அளிக்கப்பட்டிருந்தது. அங்கிருந்த தியாகராஜ ஸ்வாமி கோவில் நிர்வாகமும் அவருக்கு ஒப்படைக்கப்பட்டது. இது ஒரு புராதனமான சிவன் கோவில். அவர் அக்கோவிலுக்குத் தர்மகர்த்தாவாகச் செயல் பட்டார். சில வருடங்களில் அவரது வணிகம் குறைந்து அவரது செல்வாக்கும் ஒடுங்கியபோது, இந்த உரிமை, லிங்கி செட்டி என்ற மற்றொரு பேரி செட்டிக்குத் தரப்பட்டது. அவர் கைக்கு இந்த கிராமம் 1741ல் வந்தது. லிங்கி செட்டி, தங்க வியாபாரம் செய்து வந்தவர். ஆகையால் அவருக்கு கம்பெனியின் தங்கசாலையும் தரப்பட்டிருந்தது. தவிரவும் இந்த லிங்கி செட்டி தான் கம்பெனியின் முக்கியமான துணி வணிகர். 1757 நவம்பரில் இந்த மனிதர் காலமானபோது, அவருடைய குமாரனான செப்பெருமாள், (தெப்பெருமாள் என்றும் அழைக்கப்பட்டவர்) திருவொற்றியூருக்கு வரி வசூலிக்க நியமிக்கப்பட்டார். ஆகவே இடங்கை வகுப்பைச் சேர்ந்த தெப்பெருமாள் செட்டி மேற்பார்வையில் இவ்விடம் செயல் பட்டுக்கொண்டிருந்து. ஆனாலும் இடங்கை வலங்கை என்ற இரு வகுப்பினராலும் தொழப்பட்டுக் கொண்டிருந்த கோவிலாகவே இருந்தது.

1786ம் வருடத்து ஆகஸ்டு மாதத்தில், ஒரு நாள் இடங்கை வகுப்பைச் சேர்ந்தவர்கள் அவர்களது பணிகளில் வலங்கையினர் குறுக்கிடுவதாக முறையீடு செய்தனர். தவிரவும், அவர்கள் வகுப்பைச் சேர்ந்த குப்பு செட்டி எனபவரை வலங்கையினர், தாக்கினதாகவும் புகார் எழுந்தது. 'கொண்டைக்கட்டி வெள்ளாளர்களா'ல் மற்ற வலங்கையினர் துணையுடன், "சுமார் ஆயிரம் பறையர்களை ஏவி, பூசாரியின் தீவட்டி வராமல்" செய்தனர் தவிரவும் இடங்கையினரின் தலைவர்களில் ஒருவரான, குப்பு செட்டி என்ற சொக்கப்ப செட்டியின் சகோதரரை "இந்தப் பறையர்கள்" தாக்கினதாகவும் குறை கூறினர். வலங்கையைச் சேர்ந்தவர்கள் தான் கலகத்தை ஆரம்பித்ததாகவும் தெரிந்தது.

அந்தக் கலகம் அடக்க முடியாமல் போகவே, அது மதராசபட்டினத்திற்கும் பரவியது. சொக்கப்ப செட்டியின் தலைமையில் ஓர் இடங்கைக் கூட்டம், வலங்கையினரைத் தாக்கியது. அங்கே கலகத்தை அடக்குவதற்காக அனுப்பப்பட்ட சிப்பாய்களும் இடங்கையினரால் தாக்கப்பட்டனர். இது ஆங்கிலேயர்களுக்கு ஆத்திரத்தையூட்டியது. ஆதலால், அவர்களால் மிகவும் தீவிர முயற்சியெடுக்கப்பட்டு, அப்போதைக்குக் கலகம் நிறுத்தப்பட்டது.

ஆனால் இம்மாதிரியான சச்சரவுகள் மறுபடியும் வரத்தான் செய்தன! நாற்பது வருடங்களுக்குப் பின்னர், 1828-ல், மற்றொரு கலகம் உண்டாயிற்று. இதுவும் கோவிலைப் பற்றியது. இதே கோவிலின் குருக்கள் தர்மகர்த்தாவுக்கு எதிராகச் செயல் பட்டதாகப் புகார் எழுந்தது. அங்கிருந்த ஒரு விக்கிரகம் அந்தக் குருக்களால், வேறு இடத்திற்கு எடுத்துச் செல்லப் பட்டதாகவும் அதனால் நவராத்திரி விழா ஒத்திப்போட வேண்டியதாயிற்று எனவும் அவர் மீது குற்றம் சாற்றப்பட்டது. ஆங்கில அதிகாரம் அவர் மீது கடுமையான நடவடிக்கை எடுக்க முற்பட்டது. 1831 ல் தர்மகர்த்தாவுக்கும் மற்ற கோவில் பணியாளர்களுக்கும் இடையில் மோதல் உண்டாயிற்று. இத்தடவை இதற்குக் காரணம், கோவிலில் நடனமாடும் பெண்கள் தடுக்கப்பட்டது தான். அப்போது கலெக்டராக இருந்த சி. ஆர். காட்டன் சட்ட

ரீதிகளுக்கிணங்க, தர்மகர்த்தா அதிகாரம் மதிக்கப்பட வேண்டியது என்பதை அறிவுறுத்தினார். ஆனால் அந்த தர்மகர்த்தா முதலில் சரியான முறையில் நியமிக்கப்பட்டாரா என்பதே கேள்விக்குறியாக இருந்தது.

அந்தக் குற்றச்சாட்டிற்கு ஒரு காரணம் இருந்தது. 1750 வருடங்களில் இந்த தர்மகர்த்தா அதிகாரம் வலங்கையினர் கையில் இருந்தது. ஆனால் அவர்கள் பணமுடையினால் கோவில் நிர்வாகம் சரி வரச் செய்ய இயலாது போனார்கள். அப்போது நிதி உதவி செய்து, கோவிலின் பணிகள் தொடர்ந்து நடக்க உதவி புரிந்தவர் இடங்கையைச் சேர்ந்த லிங்கி செட்டி ஆவார். அப்போதிருந்து இடங்கையினரே அந்தக் கோவிலின் தர்மகர்த்தாவாக இருந்துள்ளனர். காட்டன் காலத்தில் இருந்த தர்மகர்த்தா அருணாசலச் செட்டி எனபவர் இந்த லிங்கி செட்டியின் மூன்றாவது தலைமுறையினராவார். ஆகையால் காட்டன் இவரைத் தான் தர்மகர்த்தாவாக இருக்க விரும்பினார். தவிரவும் காட்டன் சொற்படி, அருணாசல செட்டி தமது சொந்தச் செலவிலேயே கோவிலுக்குப் பல நற்பணிகள் புரிந்துள்ளதாகவும் அறியப்பட்டது. தொடர்ந்து ஆங்கில மேலாண்மை அவரது பரிந்துரையையே ஏற்றுக் கொண்டது.

மதராசபட்டினம் முன்னரே பார்த்தது போல, சில வருடங்கள் ஆங்கில அரசால், கடலூர் கோட்டை ஆளுமைக்குக் கீழ் தான் செயல் பட்டு வந்தது. திரும்பவும், 1752, பிப்ரவரி மாதம் 6 ஆம் தேதியன்று, கோட்டை தனிப்பட்ட ஆளுமையை அடைந்தது என்பதையும் கண்டோம். அப்போது ரிச்சர்ட் பிரின்ஸ் எனபவர் இரண்டாவது நிலையில் இருந்தார். அவர் எதிர்கொண்ட பிரச்சினைகளில் இடங்கை வலங்கை பூசல்களும் ஒன்றாகும். அந்தப் பிரச்சினை, பிரெஞ்சுக்காரர்கள் மதராசபட்டினத்தை விட்டுச் சென்ற பிறகு, வட பகுதியில் இருந்த நிலத்தைப் பற்றியது. 1725 ல் கட்டப்பட்ட (முத்தியால் பேட்டையில், அரண்மனைக்காரத் தெருவில்) கச்சாலீஸ்வரர் கோயில், நிர்வாகம், இவ்விரு பிரிவினருக்கும் இடையில் கருத்து வேற்றுமையை உண்டாக்கியிருந்தது. வலங்கையினர், துளசிங்கச் செட்டியின் தலைமையில், ஒரு கருத்தை வைத்தனர். அதன் படி பிரெஞ்சுக்காரர்கள், தரை மட்டமாக்கிவிட்ட அவ்விடம், முன்பே போல வீதிகளுடன் அமைக்கப்பட வேண்டும்; தவிரவும், இடங்கையினர் வலங்கையினர் இடத்தில் வரக்கூடாது என்பதாகும். அதே போல, கச்சாலீஸ்வர கோயில் தெருவில், முன்பே போல பிராமணர்களுக்குத் தனி இடம் ஒதுக்கப்பட வேண்டும் என்பதும் ஒரு ஷரத்தாக இருந்தது. இந்த இடம் பிரெஞ்சுக்காரர்கள் ஆளுமையில் நாட்டியப் பெண்களுக்குத் தரப்பட்டிருந்தது. இடங்கையினர் வீரண்ணா மற்றும் சிலர் தலைமையில், தரை மட்டமாக்கப்பட்ட அந்த இடம், பொது இடமாக அறிவிக்கப்பட வேண்டுமென்றனர். அதற்கு அவர்கள் தந்த காரணம், அவர்களால், கோட்டைக்குச் செல்கையில், அது பொது இடமாக இருந்தால் தான் வலங்கையினர் இடங்களைத் தவிர்த்துச் செல்ல முடியும். கவுன்சில் இவற்றையெல்லாம், தீர விசாரித்து, பிட் காலத்து முடிவுகளையும் மனதில் கொண்டு, மோர்ஸ் எனபவரின் ஆலோசனையையும் ஏற்று, ஒரு குறிப்பு தயாரித்தது. (ஆவணம் மார்ச் 3, 1749/50 தேதியிடப்பட்டது).

"கோட்டையின் மத்தியப்பகுதி கதவு மூடப்பட்டு விட்டதால், இடங்கையினரால், வெள்ளை டவுனுக்கு வர வேண்டுமெனில், வலங்கையினரின் இடங்களைத் தாண்டாமல் வர இயலாது. அதை வலங்கையினர் அனுமதிப்பதில்லையாதலால் ஒரு வீதி கட்ட வேண்டியுள்ளது. இதற்காக 40 அடி அகலமான இடம் ஒதுக்கப்பட வேண்டும். இந்த இடம் இருவருக்கும் பொதுவானதாக இருக்கவேண்டும். இது சௌல்ட்ரி கேட்டிலிருந்து கடலை நோக்கி இருக்கும். அதனால், இடங்கையினர், பெருமாள் கோயிலிலிருந்து நேராக, வெள்ளை டவுனுக்கு வரலாம். அங்கே திரும்புமிடத்தில் வலது பக்கமாகத் திரும்பாமல் இடது பக்கமாகத் திரும்பினால் திருவல்லிக்கேணி கோயிலுக்குப் போகலாம். வலங்கையினரும், இதைப் பயன் படுத்திக் கொள்ளலாம். "ஆனால் இரு பிரிவினருக்கும் சண்டை சச்சரவு வராமலிருக்க இந்தப் பொது வீதியில் ஒரு விதமான ஊர்வலங்களும் அனுமதிக்கப்பட மாட்டாது."

நாட்டியப் பெண்கள் கச்சாலீஸ்வரர் கோயில் வீதியில் குடியிருக்க அனுமதிக்கப்பட வேண்டும் எனவும் ஆங்கிலேயர் கூறினர். இரண்டு வருடங்களுக்குப் பிறகு, எஸ்பிளனேட் வீதியும் இரு பிரிவினருக்கும் பொதுவானது என அறிவிக்கப்பட்டது. இந்தக் கோயிலைப் பற்றிய ஒரு குறிப்பு: 1728 நவம்பர் 4ஆம் தேதியினது உள்ளது. அதில் இந்தக் கோயிலில் வந்த சச்சரவை ஜேம்ஸ் மேக்ரே கோட்டையில் அப்போது தலைவராக இருந்தவர் சமாளித்ததாகக் கூறுகிறது

"இடங்கையினர் சமீபத்தில் கச்சாலீஸ்வரர் கோயில் என்ற ஒரு கோயில் கட்டியுள்ளனர். முத்தியால்பேட்டையில் உள்ள காலவாய்ச் செட்டிக்குச் சொந்தமான தோட்டத்தில் இது கட்டப்பட்டது. ஆனால் அதன் ஒரு பகுதி வலங்கையினருக்குச் சொந்தமான இடத்தில் ஊடுருவியதாகத் தெரிந்தது. ஆகையால் குழப்பம் ஏற்பட்டது. அக்குழப்பம் தீவிரமாவதற்கு முன்னரே மேக்ரே குறுக்கிட்டு, அமைதியை உண்டாக்கி, இடங்கையினருக்கு நுழைவாயில் தனியாக கட்ட ஏற்பாடு செய்தார். அதற்காக அவர் அமைத்த குழுவில், கோஜா பெட்ரஸ், கோஜா சர்க்கிஸ், பெத்தநாயக் மற்றும் சில முசல்மான்கள் இருந்தனர். இவர்களது தீர்வு ஏற்றுக் கொள்ளப்பட்டது" இந்த ஆவணத்திலிருந்து நமக்கு கச்சாலீஸ்வரர் கோயில் கட்டிய ஆண்டு தெளிவாகிறது.

கபாலீஸ்வரர் ஆலயத்திலும் இரு பிரிவினருக்கும் இடையில் ஒரு கலகம் எழுந்தது. காரணம் அங்கு எழுப்பப்பட்ட தோரணங்கள், பூப்பந்தல்கள் பற்றியது. 1789 ல் வலங்கையினர், தாங்கள் கோவில் விழாவிற்காக அலங்காரத்திற்கு எழுப்பியிருந்த தோரணங்களையும் பூப்பந்தல்களையும் இடங்கையினர் அழித்ததாகக் குற்றம் சாட்டினர். அப்போதிருந்த ஆங்கில அதிகாரியின் கட்டளைகளையுங்கூட இடங்கையினர் சட்டை செய்யவில்லை! ஆகையால் வலங்கைப் பிரிவைச் சேர்ந்த தோட்டக்காரர்கள், மற்றும் பல தொழிலாளிகள் வேலை செய்ய மறுத்ததினால் கம்பெனியின் வணிகத்திற்கு இடையூறு விளையும் என்று சாந்தோமிலிருந்த முத்துப்பிள்ளை ஆங்கிலேயர்களுக்கு எடுத்துரைத்தார். ஆனால் இடங்கையினர் விடுவதாக இல்லை. அவர்கள் குற்றச்சாட்டு இவ்வாறிருந்தது.

"1. இடங்கையினருக்கு ஐந்து வர்ணங்கள் பயன் படுத்தும் அதிகாரம் உள்ளது. வலங்கையினரோ வெள்ளை வர்ணம் மட்டும் தான் பயன் படுத்தலாம். இந்த நியதியைக் கடந்து வலங்கையினர் பல வர்ணங்களைப் பயன் படுத்தியுள்ளனர்.
2. இரண்டாவதாக, வலங்கையினரை, சாந்தோம் வணிகரான முத்துப் பிள்ளை ஆதரிப்பதற்குக் காரணம் அவரும் வலங்கையைச் சேர்ந்தவர் என்பதால் தான். தவிரவும் கோட்டையில் துபாஷிகளாக இருக்கும் அகமுடையார்களும் ஆதரிக்கின்றனர்.
3. இந்த விதமாக, ஒருவிதமான அதிகாரப் பூர்வமான ஆதரவும் எங்களுக்கு இல்லை. ஆகையால் ஆங்கிலேய மேலாண்மை இதைக் கவனிக்க வேண்டும்."
(எட்கர் தர்ஸ்ட்டன் அகராதிப் படி, அகமுடையார்கள் விவசாயிகள் வகுப்பைச் சேர்ந்தவர்கள். தம்மை வெள்ளாளர் எனக் கூறிக்கொண்டதாகவும் தெரிகிறது.)
இதற்கு ஒரு தீர்வு காணவேண்டி ஆங்கில மேலாண்மை அப்போதிருந்து இரு வகுப்பினருமே, கோட்டைக் கொடியின் சிவப்பு வெள்ளை வர்ணங்களை மட்டுமே தமது கொடிகளில் பயன் படுத்தலாம் என உத்தரவிட்டது. இம்மாதிரி உத்தரவுகள் ஏற்கனவே இருந்தன என்றாலும் அவைகள் மதிக்கப்படவில்லை!

அப்போது தாற்காலிகமாக அந்தக் கலகம் ஒடுக்கப்பட்டு சமாதானம் நிலவியது. ஆனால் அடுத்து, சாந்தோமில், 1789 நவம்பரில், ஒரு கோவில் திருவிழாவின் போது கொடிகள் பயன் படுத்தப்பட்ட விதத்தில் தகராறு உண்டாயிற்று. 1790, ஏப்ரல் 13ம் தேதியிட்ட ஆணை ஒன்று பிறப்பிக்கப்பட்டது. அதன் படி, "வலங்கை இடங்கையினரிடையில் சமீபத்தில் சாந்தோமில் ஏற்பட்ட சச்சரவுகள் காரணமாக இனி அம்மாதிரி சண்டைகள் வராதிருக்க வேண்டி, எந்தப் பிரிவும் தமது விழாக்களின் போது கொடிகள் பயன் படுத்தக்கூடாதென அறிவிக்கிறோம்" என்று கூறப்பட்டது. ஆனால், இந்த ஆணை எதிர் பார்த்த பலனை அளிக்கவில்லை. அதே வருடம் செப்டம்பர் மாதம் 5 ம் தேதியன்று, வலங்கையினர் வெள்ளைக்கொடியை ஏற்றியது மட்டுமின்றி, இடங்கையினர் தமதெனக் கொண்டாடிய வண்ணக் கொடிகளையும் வலங்கையினர் பயன் படுத்தினர்! உடனே ஆங்கில மேலாண்மை அவர்களது கொடியான செயிண்ட் ஜார்ஜ் கொடியைத் தவிர வேறு எந்தக் கொடியும் எந்த விழாவின் போதும் கொடியேற்றப்படக் கூடாதென அறிவித்தனர். அதே போல கூட்டம் கூடுவதும் தடுக்கப்பட்டது. அப்போது தலைவராக தாற்காலிகப் பணி செய்து கொண்டிருந்த மார்கன் வில்லியம்ஸ், 17, 18 20 தேதிகளில் இவர்களிடையில் கூட்டம் போட்டுப் பேசி, சமாதானப்படுத்த முயன்றார். வலங்கையினர் தமது வீடுகள் சூறையாடப்பட்டது மட்டுமின்றி தமது மக்களில் ஒருவர் கொல்லப்பட்டதாகவும் குறை கூறினர். தவிரவும், இடங்கையினர் ஆயுதங்களை வைத்திருந்ததாகவும், அவர்களுக்கு ஆங்கிலப் படையின் உதவி அளிக்கப்பட்டதாகவும் கூறினர். ஆனால் இடங்கையினரோ, வலங்கையினர் பல அட்டூழியங்கள் செய்ததாகக் குறை கூறினர்.

அப்போது கவர்னருக்குத் துபாஷியாக இருந்தவர் தெலசிங்கப் பிள்ளை (சில இடங்களில் இவரது பெயர் தெலசிங்கச் செட்டி என்றும் கூறப்படுகிறது. இது சற்றே முரண்பாடாக உள்ளது. ஏனெனில் செட்டி ஜாதி, இடங்கையைச் சேர்ந்தது

பிள்ளையோ வலங்கையைச் சேர்ந்தவர்கள்) அவரது துணையுடன்தான், ஆங்கில மேலாண்மை, மேலே கூறிய "இனி எந்தப் பிரிவும் செயிண்ட் ஜார்ஜ் கொடியைத் தவிர வேறு எந்தக் கொடியும் பறக்கலாகாது" என்று உத்திரவிட்டு, சமாதானத்திற்கு வழி செய்தது. ஆனால் இடங்கையினர், தமது பிரிவினரில் 89 பேர் சிறையில் இருப்பதாகவும் அவர்கள் உடனே விடுவிக்கப்பட வேண்டுமெனவும் விண்ணப்பித்தனர். வலங்கையினர், கொலைக்காக நீதி வழங்கக் கோரினர். தம்பி செட்டி எனபவர் இடங்கையினருக்காக 20,000 பகோடாக்கள் செலுத்தி கையெழுத்துமிட்டார். அப்போது அவர்கள் செய்த முறையீடு இவ்வாறிருந்தது: "இதற்கு முன்பு கவர்னர் சாண்டர்ஸ் அப்போதிருந்த கோவில்கள் தமது பழக்க வழக்கங்களை வைத்துக் கொள்ளலாமெனவும் அரசு உத்தரவின்றி புதுக் கோவில்கள் கட்டப்படக்கூடாதெனவும் எழுப்பியிருந்த உத்தரவை மீறி, வலங்கையினர் கிருஷ்ணஸ்வாமி கோவில் எழுப்பி, அங்கு விழாக் கொண்டாடுகையில் தான் இந்தக் கலவரம் வந்தது. மாறாக இடங்கையாயினர் வழிபடும் காளஹதீஸ்வரா கோவில், சுமார் நூற்றியைம்பது வருடங்களுக்கு முன்னரே எங்களது மூதாதையரால் கட்டப்பட்டது. அங்கு நாங்கள் எங்கள் விழாக்களைக் கொண்டாடுகிறோம்".

அதே நேரத்தில், வலங்கையினர் சார்பாக, பாலகிருஷ்ண செட்டி, எஸ். கிருஷ்ணசாமி செட்டி என்ற இருவரால் கையெழுத்திடப்பட்ட முறையீடும் சமர்ப்பிக்கப்பட்டது. அதில் அவர்கள் கவர்னர் பிட் காலத்திய வரையறுத்தல்களையும் எடுத்துரைத்திருந்தனர். தவிரவும் சமீபத்திய சண்டைகளில் அவர்கள் அடைந்த நஷ்டத்திற்கு ஈடும் கேட்டனர். இவற்றையெல்லாம் ஆராய்ந்து அரசு இவ்வாறு ஆணையிட்டது (21 செப்டம்பர் 1790).
"கருப்பு (ஜார்ஜ்) டவுனில் எழும் சச்சரவுகளுக்கெல்லாம் காரணம் கொடிகள் பற்றியது தான். முன்னரே நாங்கள் ஆணையிட்டது போல, கொடிகள் பறக்கவிடுவதைப்பற்றி ஆராய ஒரு கூட்டம் கூட்டப்படும். . ."

1795ல் மறுபடியும் வலங்கையினருக்கும் இடங்கையினருக்கும் இடையில் சச்சரவேற்பட்டது. ஆலங்காத பிள்ளை கட்டிய ஏகாம்பரேஸ்வரர் கோவில் நிர்வாகியான வைத்தியநாத பிள்ளை எனபவர், இந்த கோவில் இரு பிரிவினருக்கும் பொதுவானதெனவும், முன்னரே கண்டபடி கோயிலில் இரு வகுப்பினரும் தொழுது கொண்டிருந்தனர் என்றும் கூறினார். 100 வருடங்களாக திருவிழாக்களும் ஊர்வலங்களும் தொந்தரவின்றி நடந்து வருவதாகவும் குறிப்பிட்டார். 29 மார்ச் அன்று, இடங்கையினர் கூட்டமொன்று, அந்தக் கோவிலின் நாட்டியப் பெண்கள் மீது மஞ்சள் நீர் தூவ முயன்றது. அடுத்த நாளே அவர்கள் கத்தி கபடாக்களுடன் வந்து வருடாந்திர கோயில் திருவிழாவை நடக்கவொணாது தடுத்தனர். ஆனால் பெத்தநாயக்கன்பேட்டை, கடை வணிகர்களோ வலங்கையினர் தான் வந்து தாக்கியதாகப் பழி சுமத்தினர். அரசாங்கம், கேப்டன் அலெக்ஸாண்டர் ஆலன் எனபவரை அனுப்பி கலகத்தை அடக்க ஏற்பாடு செய்தது. அந்த மனிதர் சமாதான அறிக்கைகளைத் தெரிவிக்க அனுப்பிய தண்டோரா போடுபவர்கள்

தாக்கப்பட்டார்கள்! 31 மார்ச் 1795 ல் எழுதப்பட்ட குறிப்பொன்றில், இவ்வாறு காணப்படுகிறது.
"இடங்கைப் பிரிவின் தலைவர்களான, தம்பு செட்டி, காவல்சேரி பொன்னப்ப செட்டி, சின்ன தம்பு நாயக், நல்ல மூத்த ஆசாரி மற்றும் சுங்க பட்டன் ஆகியோர் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டனர். அவர்களது நண்பர்கள், குழப்பம் உண்டாக்கினவர்கள், அவர்களது மனிதர்கள் இல்லையென்றும், அவர்கள் சாதாரணக் கலகக்காரர்கள் என்றும் கூறி அவர்களை விடுவித்தனர். அதற்குப்பிறகு சமாதானம் நிலவியது".

இடங்கை வலங்கை ஜாதிகளைப்பற்றி சி. எஸ். ஸ்ரீனிவாசாச்சாரி என்பவர் தீவிரமாக ஆராய்ந்து, ஒரு கட்டுரை வரைந்துள்ளார். அவர் கருத்துப்படி, "மதராசபட்டினத்து மக்கள் பல நூற்றாண்டுகளாகத் தமது முக்கிய இரண்டு ஜாதிப் பிரிவுகளைக் கொண்டிருந்தனர். மிகவும் சிறிய குழப்பம் போதும், அயர்லாந்தின் ஆரஞ்ச்மென், ரிப்பன்மென் அல்லது வெரோனாவின் மாணடேக்ஸ் காபுலெட்ஸ் மக்கள் போல சண்டைகள் உண்டாக்கிக் கொண்டனர். சாதாரணமாக, வலங்கையினர் எல்லா மேற்குடி மக்களாலும், ஆதி திராவிடர்களையும் கொண்டதாக இருந்தது. இடங்கையினரோ பாஞ்சாலர்கள் எனப்படும் ஐந்து வகைத் தொழிலாளர்களையும், சக்கிலியர்களையும், மற்றும் சில கீழ் ஜாதியினரையும் கொண்டதாக இருந்தது. பிராமணர்கள், சில வெள்ளாள ஜாதியினர் மற்றும் சில மேற்குடியினர் நடு நிலை வகித்தனர். வலங்கையினர், தமது திருமணச் சடங்குகளில், 12 கால்கள் கொண்ட மண்டபம் அமைப்பதற்கு உரிமை கொண்டவர்கள். இடங்கையினர் குதிரைச் சவாரி செய்யவோ ஹனுமான் கொடியைப் பறக்கவிடவோ உரிமையற்றவர்கள் என்று வலங்கையினர் நம்பினார்கள். ஆனால் இடங்கையினரோ தமக்கு இந்த உரிமை காளி மாதாவே வழங்கியிருப்பதாகச் சொன்னார்கள்.

டாக்டர் மெக்லீன் குறிப்புப்படி அவர் காஞ்சீபுரத்திற்குச் சென்று பார்த்த போது கூட இந்த இரு பிரிவினருக்கும் தனித்தனி மண்டபங்கள் இருந்தனவாம். பிரச்சினை என்னவெனில் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு சமயங்களில் சாதிகள் தங்களுக்குள் பிரிவுகளை மாற்றிக்கொண்டன! ஆகையால் சரியாக எந்த ஜாதி எந்தப் பிரிவைச் சார்ந்தது என்று கூறுவது சாத்தியமில்லாததாக இருந்தது. எல்லா நூலாசிரியர்களும் இதே போலத்தான் அபிப்ராயப்படுகின்றனர். ஆகையால் சுலபமாக, எந்த ஜாதியினர் எந்தப் பிரிவைச் சேர்ந்திருந்தனர் என்பது, காலத்தையும் இடத்தையும் பொறுத்துத்தான் இருந்திருக்கிறது!

இந்தப் பிரிவுகளின் இடையில் எழுந்த சச்சரவுகளைக் குறித்து நோபொரு கராஷிமா தனது நூலில் மிக விவரமாக எழுதியுள்ளார். அந்த விவரம் தென்னகத்து எல்லா இடங்களையும் குறித்துச் சொல்லப்படுகிறது. ஆனால் அது மதராசபட்டினத்தில் வேறு விதமாகத் தான் உருவெடுத்தது. அதைத் தமது ஆளுமையால் தமக்குச் சாதகமாகவும் ஆங்கிலேயர்கள் கையாண்டார்கள் என்பது தெளிவு! இதைப் பிற்காலத்தினர் சமூகப் பொருளாதாரப் பிரச்சினையாகத் தான் கண்டார்கள்.

## 18 • வ.உ.சி.யின் திரிசூலம்

••• ஆ.சிவசுப்பிரமணியன்




இந்திய விடுதலை இயக்கத்தின் தொடக்க காலத் தலைவர்களில் ஒருவரான வ.உ.சிதரம்பரனார் (1872-1936) தனித்துவமான போராட்டங்களை மேற்கொண்டவர். அவற்றுள் குறிப்பிடத்தக்க ஒன்று, வேறு யாரும் சிந்திக்காதது. அது 'சுதேசி ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனி' (சுதேசி நாவாய்ச் சங்கம்) என்கிற கப்பல் நிறுவனம். இந்திய கம்பெனி சட்டப்படி 16.10.1906-ல் இந்நிறுவனம் பதிவுசெய்யப்பட்டது. இதன் தொடக்க மூலதனம் ரூ.10 லட்சம். ரூ.25 முக மதிப்புள்ள பங்குகளின் விற்பனை மூலம் இது பெறப்பட்டது. 10,000 பங்குகளை விற்பது என்கிற வரம்பையும் ஆசிய நாடுகளைச் சேர்ந்தவர்களிடமிருந்தே பங்குத்தொகையைப் பெறுவது என்ற முடிவையும் இந்நிறுவனம் எடுத்திருந்தது. இதன் அலுவலகம் தூத்துக்குடியில் செயல்பட்டது.



No. 1723 Rs. 25

THE SWADESHI STEAM NAVIGATION COMPANY, LIMITED.

TUTICORIN.

Share Certificate.

CAPITAL Rs. 10,00,000, DIVIDED INTO 40,000 SHARES OF Rs. 25. EACH.

This is to certify that S. Nagalingampillay of [illegible] is the Registered proprietor of Share No. 20662 in the SWADESHI STEAM NAVIGATION CO., LTD. subject to the Memorandum and Articles of Association of the Company and that up to date there has been paid in respect of this Share the sum of Rupees Twenty five only.

Given under the Common Seal of the Company

TUTICORIN. this [illegible] day of [illegible] 1907.

Secretary

Director

சுதேசிக் கப்பல் நிறுவனத்தின் பங்குதாரர் சான்றிதழ்

இந்நிறுவனத்தை நடத்துவதற்கு இயக்குநர் குழு ஒன்று உருவாக்கப்பட்டது. நிறுவனத் தலைவராக பாலவநத்தம் ஜமீன்தார் பாண்டித்துரைத் தேவர் நியமிக்கப்பட்டார். நான்காம் தமிழ்ச் சங்கம் என்றழைக்கப்படும் தமிழ்ச் சங்கத்தை மதுரையில் நிறுவியவர் இவர். வ.உ.சி. உதவிச் செயலாளராக இருந்தார், இக்கப்பல் நிறுவனம் ஆதாயம் ஈட்டுவதை மட்டுமே குறிக்கோளாகக் கொண்ட வணிக நிறுவனமாக அமைக்கப்படவில்லை. இந்நிறுவனத்தின் நோக்கங்கள் குறித்த விவர அறிக்கை இவ்வுண்மையை அறியத் தருகிறது:

- இந்தியர்களையும் இலங்கையர்களையும், ஆசியா கண்டத்து ஜாதியார்களையும் கப்பல் நடாத்துந் தொழிலில் பழக்குவித்து அதன் மூலம் வரும் லாபத்தை அடையும்படிச் செய்தல்.
- கப்பல் நடாத்துந் தொழிலையும் கப்பல் நிர்மாணஞ் செய்யும் தொழிலையுஞ் செய்து காட்டிக் கற்பித்தல்.
- மாணவர்க்கு கப்பலோட்டுந் தொழிலையும் கப்பல் நிர்மாணஞ் செய்யும் தொழிலையும் சாஸ்திர சம்பந்தமாகக் கற்பிக்கும் கலாசாலைகளை ஏற்படுத்தல்.
- ஸ்டீமர்கள், ஸ்டீம்லாஞ்சுகள், படகுகள் முதலியன நிர்மாணஞ் செய்வதற்கும் அவைகளைச் செப்பனிடுவதற்கும் துறைகளேற்படுத்தல்.
- கம்பெனியார் தீர்மானிக்கும் சுதேசியக் கைத்தொழில்களையும் வியாபாரங்களையும் நடத்துதல்.




சுதேசிக் கப்பல் நிறுவனத்தின் இக்குறிக்கோள்கள் வ.உ.சி.யின் தொலைநோக்கான பார்வையை வெளிப்படுத்துபவை. முதற்படியாக மும்பை சென்று இரண்டு கப்பல்களை விலைக்கு வாங்கினார். ‘எஸ்.எஸ்.காலியோ’, ‘எஸ்.எஸ்.லாவோ’ என்கிற பெயரிலான இரண்டு கப்பல்களும் தூத்துக்குடிக்கு 1907 மே மாதம் வந்துசேர்ந்தன. ஒவ்வொன்றிலும் 42 முதல் வகுப்புப் பயணிகள், 24 இரண்டாம் வகுப்புப் பயணிகள், 4,000 மூட்டை சரக்கு செல்ல முடியும்.

இவ்விரு கப்பல்களின் வருகையால் மகிழ்ச்சியடைந்த பாரதியார், தாம் நடத்திவந்த ‘இந்தியா’ இதழின் (26 மே1927) முகப்பில் கருத்துப் படம் வெளியிட்டதுடன், “வெகு காலமாய்ப் புத்திரப் பேறின்றி அருந்தவம் செய்துவந்த பெண்ணொருத்தி ஏக காலத்தில் இரண்டு புத்திரர்களைப் பெற்றால், எத்தனை அளவற்ற ஆனந்தத்தை அடைவாளோ, அத்தனை ஆனந்தத்தை நமது

பொதுமாதாவாகிய பாரததேவியும் இவ்விரண்டு கப்பல்களையும் பெற்றமைக்காக அடைவாளென்பது திண்ணமே" என்று குறிப்பும் எழுதினார். அக்குறிப்பில் வ.உ.சி.க்கும் அவருக்கு உதவியவர்களுக்கும் பாராட்டுத் தெரிவித்திருந்தார்.




தூத்துக்குடியில் ஏற்கெனவே செயல்பட்டுவந்த ஆங்கிலேயக் கப்பல் நிறுவனமான 'பிரிட்டிஷ் இந்தியன் ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனி' என்கிற ஆங்கிலேயக் கப்பல் நிறுவனம், சுதேசிக் கப்பல் நிறுவனத்தின் வருகையால் ஆதாய இழப்புக்கு ஆளானது. இவ்விழப்பானது, 1907-ம் ஆண்டின் இறுதியிலும் 1908-ன் தொடக்கத்திலும் மாதம் ஒன்றுக்கு முப்பதினாயிரம் முதல் நாற்பதினாயிரம் வரை இருந்ததாக வரலாற்றறிஞர் இராசேந்திரன் குறிப்பிட்டுள்ளார். மக்களிடையே நிலவிய சுதேசி இயக்க உணர்வே இதற்குக் காரணம்.

1908 மார்ச் மாதம் கைதாகி விசாரணைக் கைதியாக இருந்த வ.உ.சி. அதே ஆண்டு ஜூலையில் வழங்கப்பட்ட தீர்ப்பின் அடிப்படையில் தண்டனைக் கைதியாகி கோவைச் சிறைக்குச் சென்றார். இதன் பின் ஆஷ் என்கிற ஆங்கிலேய அதிகாரி கொடுத்த நெருக்கடிகளை எதிர்கொள்ள இயலாது, சுதேசிக் கப்பல் கம்பெனி ஆங்கிலேயர்களிடமே விற்கப்பட்டது.

**தொழிலாளர் இயக்கம்:**

1907-ல் கப்பல் நிறுவனத்தைத் தொடங்கிய வ.உ.சி., அடுத்த ஆண்டில் தூத்துக்குடியில் இயங்கிவந்த ஆங்கிலேயர் நடத்திய 'கோரல் மில்' என்கிற நூற்பாலையில் தொழிலாளர்களை ஒன்றுதிரட்டி, சுப்பிரமணிய சிவாவின் துணையுடன் வேலைநிறுத்தத்தை 1908 பிப்ரவரி 27-ல் தொடங்கினார். (1) ஊதிய உயர்வு, (2) வார விடுமுறை, (3) இதர விடுமுறை வசதிகள் என்பனவற்றை முன்வைத்து வேலைநிறுத்தம் நடத்தப்பட்டது. ஒன்பது நாட்கள் தொடர்ச்சியாக நடந்த வேலைநிறுத்தம் 07.03.1908 நண்பகலில் முடிவுற்றது.

50% ஊதிய உயர்வு, பணி நேரத்தில் உணவருந்த அனுமதி, ஊதியமில்லா விடுமுறை என்பனவற்றை ஆலைத் தொழிலாளர்கள் பெற்றனர். இன்று எளிதானதாகத்

தோன்றும் இவ்வுரிமைகளைப் பெறுவதற்குக் கடந்த நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் இந்தப் போராட்டம் நிகழ்ந்துள்ளது.

இப்போராட்ட நிகழ்வு, இந்திய அளவில் பேசுபொருளானது. வேலைநிறுத்தக் காலத்தில் உணவின்றித் தவித்த ஆலைத் தொழிலாளர்களுக்கு உணவு வழங்கும் பொறுப்பை வ.உ.சி. மேற்கொண்டிருந்தார். 'தி இந்து' ஆங்கில நாளிதழும் 'சுதேசமித்திரன்' தமிழ் நாளிதழும் இந்தச் செய்தியை முக்கியத்துவம் கொடுத்து வெளியிட்டன. வங்கத்தின் அரவிந்தர் தமது 'வந்தேமாதரம்' இதழில் வேலைநிறுத்த நிகழ்வு குறித்து விரிவான முறையில் செய்தி வெளியிட்டுவந்தார். வேலைநிறுத்தம் வெற்றிபெற்றவுடன் 'தூத்துக்குடி வெற்றி' (The Tuticorin Victory) என்கிற தலைப்பில் நீண்ட தலையங்கமே எழுதியுள்ளார்.

ரஷ்யாவை ஜார் மன்னன் ஆட்சிபுரிந்துவந்தபோதுதான் இவ்வேலைநிறுத்தம் நடந்துள்ளது. இக்காலத்தில் ஜார் மன்னருக்கும் ஆங்கிலேய அரசுக்கும் இடையே இணக்கமான உறவு இல்லை. எனவே, இந்தியாவில் நடக்கும் ஆங்கிலேய எதிர்ப்புப் போராட்டங்கள் குறித்து அறிந்துகொள்வதில் ஜார் மன்னருக்கு ஆர்வம் இருந்தது. இதன் அடிப்படையில் மும்பையில் ரஷ்யாவின் தூதுவராகப் பணியாற்றிவந்த செக்கின் என்பவர், தூத்துக்குடியில் நிகழ்ந்த வேலைநிறுத்தம் குறித்து ஜாருக்கு அறிக்கைகள் அனுப்பிவந்துள்ளார். அதில் ஓர் அறிக்கையில் தூத்துக்குடியில் நிகழ்ந்த வேலைநிறுத்தம் குறித்து, "இது திறம்பட நடத்தப்படும் வேலைநிறுத்தம். வேலைநிறுத்தத்தில் ஈடுபட்ட தொழிலாளர்களுக்கு உணவு படைக்க வேலைநிறுத்தத்தை நடத்தும் தலைவர்கள் ஏற்பாடு செய்துள்ளனர்" என்று குறிப்பிட்டுள்ளார். இப்போராட்டத்தின்போது தூத்துக்குடி நகரின் பொதுமக்களும் தொழிலாளர்களுக்கு ஆதரவாகச் செயல்பட்டுள்ளனர். தொழிலாளர் போராட்டம் ஒன்றை அரசியல் போராட்டமாக மாற்றுவதில் சிவாவும் வ.உ.சி.யும் வெற்றிபெற்றுவிட்டனர். இவ்வகையில் இந்தியாவில் நிகழ்ந்த தொழிலாளர்களின் முதல் அரசியல் வேலைநிறுத்தமாக இவ்வேலைநிறுத்தம் அமைந்தது.

**பண்பாட்டுப் பார்வை:**

வ.உ.சி. தன் அரசியல் குருவாகத் திலகரை ஏற்றுக்கொண்டவர். 1907-ல் நடந்த 'சூரத் காங்கிரஸ் மாநா'ட்டில் திலகரைத் தலைவராகத் தேர்வுசெய்ய பாரதியாருடன் இணைந்து செயல்பட்டதைப் பற்றி வ.உ.சி. எழுதியுள்ளார். சிறையிலிருந்து 1912-ல் விடுதலையாகி வந்த பின்னர், கொழும்பு நகரிலிருந்து வெளிவரும் நாளேடு ஒன்றில் 'திலக மகரிஷி' என்கிற தலைப்பில் அவரது வாழ்க்கை வரலாற்றைத் தொடராகவும் எழுதிவந்தார். ஜெர்மனியில் இயங்கிவந்த இந்தியப் புரட்சிக் குழு ஒன்றிடமிருந்து வந்த ரகசியச் செய்தி ஒன்று குறித்து விவாதிக்க வ.உ.சி.யை திலகர் அழைத்துள்ளார். வ.உ.சி.யும் அந்த அழைப்பை ஏற்று திலகரைச் சந்தித்துள்ளார். இந்த அளவுக்கு இருவருக்கும் இடையே நெருக்கமான நட்பு இருந்துள்ளது. வ.உ.சி. சென்னையில் வாழ்ந்தபோது திலகரை சென்னைக்கு வரவழைத்து, அவரை ஊர்வலமாக அழைத்துச் சென்றோரில் வ.உ.சி.யும் உண்டு. இந்த அளவுக்கு

திலகரின் மீது அன்பும் நெருக்கமும் கொண்டிருந்தாலும், பண்பாடு குறித்த திலகரின் அணுகுமுறையிலிருந்து வ.உ.சி. இறுதிவரை மாறுபட்டே இருந்தார்.

இதுபோல் அழுத்தமான சைவராக இருந்து 'சிவஞானபோதம்' நூலுக்கு உரை எழுதியபோது, பல மதக் கோட்பாடுகளையும் அவற்றின் மீதான கண்டனங்களையும் எழுதுவதை வ.உ.சி. தவிர்த்தார். அத்துடன் நாஸ்தீகரது இயற்கையைத்தான் ஆஸ்தீகர்கள் கடவுள் என்று கூறுகின்றனரென்றும் ஆஸ்தீகரது கடவுளைத்தான் நாஸ்தீகர்கள் இயற்கையென்று கூறுகிறார்களென்றும் விளக்கமளித்தார்.

''1,330 குறளையும் பொருளுடன் உணர்ந்திராத தமிழர் முற்றுந் துறந்த முனிவரேயாயினும் என்னைப் பெற்ற தந்தையேயாயினும் யான் பெற்ற மக்களே யாயினும் யான் இவரைப் பூர்த்தியாக மதிப்பதுமில்லை நேசிப்பதுமில்லை'' என்ற இவரது கூற்று, தமிழரின் பண்பாட்டு அடையாளமாகத் திருக்குறளைக் கருதியதை உணர்த்துகிறது. 1927-வது ஆண்டில் சேலத்தில் நடந்த காங்கிரஸ் மகா சபை மூன்றாவது அரசியல் மாநாட்டில் ஆற்றிய தலைமை உரையில் வகுப்புவாரி இடஒதுக்கீட்டை ஆதரித்து அவர் ஆற்றிய உரை வரலாற்றுச் சிறப்புமிக்கது.

**திரிசூலம்:**

மூன்று கூர்முனைகளைக் கொண்ட ஓர் படைக்கருவியே திரிசூலம். இப்படைக்கருவியைக் கொண்டிருப்பதாக நம்புவதன் அடிப்படையில் எமனுக்கு திரிசூலன் என்ற பெயருண்டு. ஒரு நாட்டு மக்கள் தம் முன்னேற்றத்துக்காக அரசியல் போராட்டம், பொருளாதாரப் போராட்டம், பண்பாட்டுப் போராட்டம் என மூன்று வகையான போராட்டங்களை நடத்த வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறார்கள். இவற்றுள் எவற்றையும் ஒதுக்கிவிட முடியாது. அதேநேரத்தில், பொருளாதாரப் போராட்டத்திலும் பண்பாட்டுப் போராட்டத்திலும் அரசியல் மறைந்துள்ளது. இம்மூன்று போராட்டங்களின் தேவையை வ.உ.சி. நன்கு உணர்ந்திருந்தார். அவரது தொடக்க கால சுதேசி இயக்க அரசியலை உள்வாங்கியே ஏனைய இரண்டு போராட்டங்களையும் அவர் நடத்தினார். அரசியல், பொருளாதாரம், பண்பாடு ஆகிய மூன்றும் தனித்தனியாக இருப்பதுபோல் தோன்றினாலும் அவற்றுக்கிடையே உள்ள உறவு திரிசூலம் போன்றது. இதுவே வ.உ.சி. வரலாறு நமக்கு உணர்த்தும் செய்தி.

- ஆ.சிவசுப்பிரமணியன்,
மூத்த ஆய்வாளர் மற்றும் மார்க்சிய அறிஞர்
நன்றி - இந்து தமிழ் திசை

## 19 • கல்கி ஒரு சகாப்தம்

• • • *மா. மாரிராஜன்*

செப்டம்பர் 9, 1899 கல்கி அவர்களின் பிறந்ததினம். அவரது 122 ஆவது பிறந்த நாள் அன்று அவரைப்பற்றிய ஒரு சில நினைவலைகள்...




கல்கியின் சாதனைதான் என்ன? அவர் ஓர் இலக்கியவாதியா? நூறாண்டு கடந்தும் அவர் கொண்டாடப்படுவதன் மந்திரம்தான் என்ன? சரித்திரத்தின் பெருமையை அடுப்பறை பெண்களும் எட்டிப்பார்க்கும் நிலையை உருவாக்கியவர் கல்கி என்றார் அறிஞர் அண்ணா. உண்மைதான்; பெரும் ஆய்வாளர்கள் மட்டுமே வலம் வந்து கொண்டிருந்த வரலாற்று உலகின் வாசலை வெகு சாமானியனுக்காகத் திறந்து விட்டவர் கல்கி.

1950 .. கல்கி வார இதழில் பொன்னியின் செல்வன் தொடர் ஆரம்பம். ஓர் அத்தியாயத்தில் இவ்வாறு கூறுவார்..
பிற்காலத்தில் கோப்பரகேசரி என்னும் பட்டத்துடன் சோழ சிங்காதனம் ஏறப்போகும் உத்தமச்சோழரை நேயர்களுக்கு அறிமுகம் செய்கிறோம். இந்த கோப்பரகேசரி என்னும் வார்த்தையின் பரிச்சயம் நீலகண்ட சாஸ்திரி போன்ற ஆய்வாளர்கள் மட்டுமே அறிந்த ஒன்று. ஆனால் பொன்னியின் செல்வன் வந்தபிறகு, சரித்திரம் சாதாரண மக்களுக்கும் சொந்தமானது.

அன்றைய காலத்தில் நந்தினி கொண்டை மிகவும் வைரலாம். இன்றைக்கும் பிரபலப் பதிப்பகமான வானதி பதிப்பகம் பொன்னியின் செல்வன் நாயகி வானதி ஏற்படுத்திய தாக்கம்தான்.

கல்கி 1899 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 9 ம் தேதி மயிலாடுதுறை அருகே புத்தமங்கலம் என்னும் கிராமத்தில் பிறந்தார். இயற் பெயர் ரா.கிருஷ்ணமூர்த்தி. பெற்றோர் இராமசாமி - தையல் நாயகி. இவரது மனைவி பெயர் கல்யாணி. தன் பெயரை மனைவியின் பெயருடன் இணைத்து கல்கி ஆனார்.

கல்கி அவர்கள் எழுதியவை 9 நாவல்கள், 9 நாடகங்கள், 10 பெருங்கதைகள், 119 சிறுகதைகள், 500 க்கும் மேற்பட்ட கட்டுரைகள். இவர் எழுதிய 'அலை ஓசை' நாவல்

சாகித்திய அகாடமி பரிசு பெற்றது. தனது பள்ளிக்காலம் முதலே விடுதலைப் போராட்டத்தில் பங்கேற்றார். 1921 ல் ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கேற்று சிறை சென்றார். 1927 ல் நவசக்தி பத்திரிக்கையின் துணை ஆசிரியர். பின்பு 1930 ல் ஆனந்த விகடனில் சேர்ந்தார். கல்கி என்ற பெயரில் இவரது எழுதிய முதல் படைப்பு "ஏட்டிக்குப் போட்டி".

தமிழ்மகன் - குகன் - அகத்தியன் - பிராமமண இளைஞன் - விவசாயி - பெற்றோர் - எமன் - லாங்கூலன் இவை யாவும் இவரது புனைபெயர்கள். தியாகராஜரின் தெலுங்கு கீர்த்தனைகள் பிரபலமாக இருந்த அக்காலத்தில் தமிழ் இசையை முன்னெடுத்தவர் கல்கி. எம். எஸ். சுப்புலட்சுமியுடன் இணைந்து இதற்கான பல நிகழ்வுகளை முன்னெடுத்தார். எம். எஸ். அவர்கள் நடிப்பில் உருவான மீரா திரைப்படத்திற்குக் கதைவசனம் எழுதி, இவர் எழுதிய காற்றினிலே வரும் கீதம் என்னும் பாடல் இன்றும் பிரபலம்.

பிறகு, 1941 ல் ஆனந்த விகடனில் இருந்து விலகல். எம்.எஸ் அவர்கள் நிதியுதவி செய்ய, சதாசிவம் அவர்கள் முன்னெடுக்க, ரசிகமணி டி.கே.சிதம்பர முதலியார் அவர்கள் உற்சாகமூட்ட, 1941 ல் கல்கி இதழை ஆரம்பித்தார் கல்கி.
1941 அக்டோபர் 16 ம் நாள் பார்த்திபன் கனவு என்னும் வரலாற்று நாவல் கல்கியில் தொடராக ஆரம்பம் ஆனது. 1943 பிப்ரவரி மாதம் நிறைவுற்றது. ஒரு முறை கல்கியும், ரசிகமணி டி.கே.சி.யும் மாமல்லபுரக் கடற்கரையில் அமர்ந்துள்ளனர். அப்போது கல்கி இவ்வாறு கூறுகிறார். விதியின் எழுத்தை கிழிச்சாச்சு, விட்டகுறை வந்து தொட்டாச்சு என்ற புகழ் பெற்ற கவிதையைச் சொல்லி சிற்பிகளின் பேச்சுக்குரலுடன் அவர்களின்
உளியின் ஓசையும் எனக்குக் கேட்கிறது. ஒவ்வொரு சிற்பமும் உயிர் பெற்று எழுகிறது. பல்லவர்களை எழுத வேண்டும் என்றாராம்.

1944 - ஜனவரி 1 ல் சிவகாமியின் சபதம் தொடர் ஆரம்பமானது. 1946 ஜூன் 30 ல் முடிந்தது. மிகுந்த வரவேற்பைப் பெற்றது. 70,000 பிரதிகள் என்னும் மிகப்பெரும் இலக்கை கல்கி இதழ் அடைந்தது. முற்றும் என கொட்டை எழுத்தில் போட்டேன். என் 10 வருட பாரம் இறங்கியது. என்றார் கல்கி. ஏறக்குறைய 10 ஆண்டுக்காலம் சிவகாமியின் சபதத்தை பாரமாகச் சுமந்துள்ளார்.

1950 - அக்டோபர் 22 கல்கி வார இதழில் ஓர் எளிமையான விளம்பரம். ராஜராஜ சோழனின் இளம் பிராயத்தில் சோழநாட்டில் நடந்த சரித்திரக் கதை. அடுத்தவாரம் முதல் பொன்னியின் செல்வன். 1950 - அக்டோபர் 29 அன்று பொன்னியின் செல்வன் ஆரம்பம் ஆனது. சோழ வரலாறு என்னும் மிகப்பெரும் சரித்திர வாயில் சாமானியனுக்காகத் திறந்தது. வாசிப்போனின் கரங்களைப் பிடித்து ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேல் பின்னோக்கி அழைத்துச் சென்று வீரநாரயண ஏரிக்கரையில் நம்மை இறக்கி விடுகிறார்.




அங்கேதான் நமது நண்பன் வந்தியத்தேவனின் அறிமுகம் கிடைக்கிறது. அவனுடன் சேர்ந்தே நமது பயணமும் துவங்குகிறது. வாசிப்பது வரலாற்று நிகழ்வுகளின் தொகுப்பே என்னும் மனநிலை எளிதாகவே

நம்மை ஆக்கிரமிக்கிறது. அன்று ஆரம்பித்த பொன்னியின் செல்வனின் தாக்கம் 70 ஆண்டுகள் கடந்து இன்றும் தொடர்கிறது. 1950 ல் அறிமுகமான கனவு நாயகன் வந்தியத்தேவன் இன்றும் அதே மிடுக்கோடு இருக்கும் அதிசயம்! எது வரலாறு? எது புனைவு? என்று இன்றும் தேடிக்கொண்டிருக்கும் ஒரு கூட்டம்? பொன்னியின் செல்வனை நேசிப்போரும், விமர்சிப்போரும், இருவருக்குமான விவாதங்கள் இன்றும் தொடர்கின்றன. பொன்னியின் செல்வன் பாத்திரங்களின் பெயர்களைத் தங்கள் குழந்தைகளுக்குச் சூட்டும் வழக்கம் இன்றும் உண்டு.

பொன்னியின் செல்வன் வெற்றிக்கு என்னதான் காரணம்? பல நிகழ்வுகள் உள்ளன. சரியான வரலாற்று ஆதாரங்களிலிருந்து சம்பவங்களை எடுத்தார் கல்கி என்கிறார் வை.கோ. கடுந்தமிழ் தவிர்த்து எளிய பழகு தமிழ் மூலம் வாசகர்களைக் கவர்ந்தார் என்கிறார் கல்கியின் பொறுப்பாசிரியர் ஆர். வெங்கடேஷ். என் தாத்தாவின்

அளப்பரிய அர்ப்பணிப்பே பொன்னியின் செல்வன் என்கிறார் கல்கியின் பேத்தி லட்சுமி நடராஜன்.



கல்கியின் ஆஸ்தான ஓவியர் மணியம். இக்காலத்தில் ஓவியர் மணியம் அவர்களுக்கு அழகான ஆண் குழந்தை பிறந்தது. பொன்னியின் செல்வன் பிறந்த காலத்தில் மணியனுக்கு செல்வனும் பிறந்தான் என்றார் கல்கி. மணியன் செல்வனும் மிகச்சிறந்த ஓவியர். கல்கி வசித்த அடையாறு வீட்டில் இரவு நேரத்தில் எழுதுவார். ஓவியர் மணியம் அவர்களுடன் ஆலோசித்து அவ்வார ஓவியங்களை வரையச் செய்வார். ஒவ்வொரு வாரமும் இரண்டு அத்தியாயங்கள், 16 பக்கங்கள், ஐந்து ஓவியங்கள் என்று வகைப்படுத்துவார். கோட்டோவியம், நீர் வண்ண ஓவியம் என்று பலவாறு அமர்க்களப்படுத்தினார் மணியம். ஒவ்வொரு அத்தியாயத்தின் தலைப்புக்கேற்றவாறு ஓர் ஓவியம் இருக்கும். பருந்தும் புறாவும் என தலைப்பு, பருந்து புறா ஓவியம் இருக்கும். ஐயனார் கோவில் என்று தலைப்பு, ஐயனார் கோவில் பற்றிய ஓவியம் இருக்கும். கல்கியின் வசீகர எழுத்து, எளிய நடை, மெல்லிய உணர்வு, இழையோடும் நகைச்சுவை இப்படி எல்லாமே சரியாக அமைந்ததால் பொன்னியின் செல்வன் சிகரம் தொட்டது. 1950 அக்டோபர் 29 ல் தொடங்கி 1954 மே 16 ல் பொன்னியின் செல்வன் நிறைவு. என்னாது? முடிஞ்சிடுச்சா? என்றுதான் ஒட்டுமொத்தமாய் குரல்கள் எழும்பின. அது என்னாச்சு? உத்மச்சோழருக்கு பட்டம் சூட்டிய பிறகு அருள்மொழி என்னவானார்? வந்தியத்தேவன் எங்கே சென்றார்? இதுபோன்ற பல கேள்விகள் எழுந்தன (இன்றளவும் இக் கேள்விகளுக்கான விடைகள் கிடைக்கப் பெறவில்லை). வெகு சாமர்த்தியமாய் இக்கேள்விகளை எதிர் கொண்டார் கல்கி. பொன்னியின் செல்வன் முடிவுரையில் பதிலும் கூறினார்.

இதன் பிறகு பொன்னியின் செல்வன் ஐந்து முறை கல்கி வார இதழில் ஐந்துமுறை தொடராக வந்தது.
1950 - 1954 வரை மணியம் ஓவியம்

1968 - 1972 வரை வினு ஓவியம்
1978 - 1982 வரை மணியம் ஓவியம்
1998 - 2002 வரை பத்மவாசன் ஓவியம்
2014 முதல் வேதா ஓவியம்
1954 டிசம்பர் 5ல் பொன்னியின் செல்வன் புத்தகமாய் வெளிவந்தது. 1999 ல் கல்கியின் படைப்புகள் அனைத்தும் நாட்டுடைமை ஆக்கப்பட்டன. பொன்னியின் செல்வன் விஸ்வரூபம் எடுத்தது. பல பதிப்பகங்கள் போட்டியிட்டு பொன்னியின் செல்வனைப் பதிப்பித்தன. எந்தப் புத்தகக் கண்காட்சியிலும் இடம் பெற்று விற்றுத்தீர்வதே இதற்குக் கிடைத்த மிகப்பெரும் அங்கிகாரம்.

கல்கி அவர்கள் மிகச்சிறந்த விடுதலைப்போராட்ட வீரராய் இருந்துள்ளார். ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கேற்று சிறை சென்றார். இவர் எழுதிய தியாகபூமி நாவல் திரைப்படமாய் வெளிவந்தது. அப்படத்தில் தேசபக்திப்பாடல்கள் மிகுதியாக இருந்ததால் அப்படத்தைத் தடைசெய்யலாம் எனத் தகவல் கிடைத்தது. இயக்குநர் சுப்ரமணியமும் எஸ்.எஸ்.வாசனும் அப்படத்தை விடிய விடிய மக்களுக்கு இலவசமாகக் காட்டினார்கள். தொடர்ந்து அப்படம் திரையிடப்பட்டது.

இந்தியா விடுதலைப்பெற்றது. ஆகஸ்டு 17 வரவேண்டிய கல்கி இதழ், ஆகஸ்ட் 15 ல் வெளிவந்தது கார்ட்டூன் புகழ் பெற்ற ஒன்று. கல்கி மிகுந்த நகைச்சுவை உணர்வு மிக்கவர்.. மெல்லிய ஹாஸ்யம் அவர் எழுத்துக்களில் இழையோடும். வர வர என் கையெழுத்து மிக மோசமாய் உள்ளது. கம்போசிடருக்கு புரிந்தால் சரி என்று எழுதினார். அவரது உடல்நிலை மிகுந்த மோசமடைந்தது. மருத்துவரின் பரிசோதனை அறையிலிருந்து வெளிவருகிறார் எழுத்தாளர் பகீரதன். என்னாயிற்று என்று கல்கியிடம் கேட்க, "ஒன்றுமில்லை" என்கிறார் டாக்டர். சந்தோசம்தானே என்றார் பகீரதன். சிரித்தபடி கல்கி கூறுகிறார், "ஏதாவது இருந்தால் நான் குணமாகலாம், என்னிடம்தான் ஒன்றுமில்லையே" என்று.

டிசம்பர் 5, 1954.. கல்கியின் மறைவு. மீ.ப.சோமு அவர்களின் தலையங்கத்தோடு அவ்வார கல்கி இதழ். இதழ் முழுவதும் கல்கிக்குப் புகழஞ்சலி செலுத்தும் கவிதைகள், கட்டுரைகள்.
புத்தேனரி ரா.சுப்ரமணியன் இவ்வாறு எழுதுகிறார்..
" மாய்ந்ததே வசன மேதை!
மறைந்ததே ஹாஸ்ய ஜோதி!
காய்ந்ததே தமிழ்ப்பூஞ் சோலை!
கல்கியின் எழுது கோலே
ஓய்ந்ததே! மக்கள் உள்ளம்
உடைந்ததே, கண்ணீர் வெள்ளம்
பாய்ந்ததே கல்கி வைத்த
பயிரெலாம் செழிக்கு மாறே."

கல்கி ஒரு சகாப்தம்! நேற்றும்.. இன்றும்.. நாளையும்..

## 20 • கவிஞர் புதுவைச் சிவம் வெளியிட்ட "பெரியார் இராமசாமி" நூல்

• • • முனைவர் சிவ. இளங்கோ

புதுச்சேரி, முத்தியால்பேட்டைக்கு வருகை தந்திருந்த ஈ.வெ.ராமசாமிப் பெரியாரைக் கவிஞர் புதுவைச் சிவம் (ச.சிவப்பிரகாசம்) 1926 ஆம் ஆண்டில் முதன் முதலாகச் சந்தித்தார். அன்று முதல் அவரைத் தலைவராக ஏற்றுக்கொண்டு புதுச்சேரியின் சுயமரியாதை இயக்கப் பணிகளை மேற்கொண்டு வந்தார். உலகச் செய்திகளைத் தனக்குக் கற்பித்து வரும் ஆசானாகப் பெரியாரைக் கொண்டாடும் கவிஞர் புதுவைச் சிவம், தந்தை பெரியாரின் வாழ்க்கை வரலாற்றை ஒரு குறுங் காவியமாக இயற்றி, "பெரியார் பெருந்தொண்டு" என்ற தலைப்பில் 1944 ஆம் ஆண்டு வெளியிட்டார். இந்நூலுக்குப் பாவேந்தர் பாரதிதாசன் மிகச் சிறப்பான பாயிரமொன்று (அணிந்துரை) எழுதியுள்ளார்.

இதற்குப் பின்னர், 1949 ஆம் ஆண்டில், தந்தை பெரியார் குறித்து அறிஞர் பலரின் கருத்துகளைத் தொகுத்த கவிஞர் புதுவைச் சிவம், அத்தொகுப்பு நூலைத் தனது சொந்தப் பதிப்பகமான "ஞாயிறு நூற்பதிப்பகம்" வாயிலாகப் "பெரியார் இராமசாமி" என்ற தலைப்பில் வெளியிட்டார்.




இந்நூலுக்குக் கட்டுரை, கவிதைகளைப் பிறரிடமிருந்து தருவிக்கும் பொருட்டு, அவர் பல்துறை அறிஞர்களுக்கும் மடல் எழுதினார். 1948 ஆம் ஆண்டில், இந்திய கவர்னர் ஜெனரலாக இருந்த இராஜகோபாலாச்சாரியார் அவர்களுக்கும் இம்மடலைப் புதுவைச்சிவம் அனுப்பினார். கவிஞர் புதுவைச் சிவம் குறித்து நேரடி அறிமுகம் இல்லாத நிலையில், ராஜாஜி அவர்கள், தந்தை பெரியாரைப் பற்றிய ஒரு கருத்தை எழுதி அதைப் பெரியாருக்கே அனுப்பி விட்டார். ராஜாஜி எழுதிய அந்தக் கடிதத்தைப் பாதுகாக்க விரும்பிய பெரியார், ராஜாஜியின் கடிதத்தைப் புதுவைச் சிவத்திற்கு அனுப்பி, அக்கடிதத்தை நூலுக்குத் தகுந்த வகையில் பிளாக் செய்து கொண்டு, மீண்டும் தனக்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொண்டார்.

அந்தக் கடிதத்தில் தந்தை பெரியார் அவர்கள் இப்படிக் குறிப்பிட்டுள்ளார்:

E. V. ராமசாமி
சென்னை
3.12.1948

அன்புள்ள தோழர் சிவப்பிரகாசம் அவர்களுக்கு வணக்கம்.
தாங்கள் டெல்லி கவர்னர் ஜெனரல் C. இராஜகோபாலாச்சாரியார் அவர்களுக்கு என்னைப் பற்றி கருத்து கூறும்படி எழுதிய கடிதத்தையும், ஒரு நல்ல கருத்தையும் எழுதி எனக்கு அனுப்பி விட்டார். அதை உங்களுக்கு அனுப்பி இருக்கிறேன். அதைத் தாங்கள் பிளாக் எடுத்துப் போட்டுக்கொண்டு இந்த காகிதத்தை எனக்கு அனுப்பிக் கொடுக்கக் கோருகிறேன்.

தங்கள்
ஈ.வெ.ராமசாமி
(கையொப்பம்)

இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருப்பவர், தனக்கு அறிமுகமில்லாத ஒருவர், பெரியாரைப் பற்றி கருத்துக் கேட்டபோது அதைத் தவிர்த்து விடாமல், பெரியாரைப் பற்றிய ஒரு கருத்தை எழுதி, அதைப் பெரியாருக்கே அனுப்பி வைக்கிறார். பெரியார் அவர்களும் அதை ஓர் ஆவணமாகக் கருதி, பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணத்தில் அக்கடிதத்தைப் புதுவை சிவத்திற்கு அனுப்பி வைத்து, மீண்டும் அதைத் தனக்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொண்டுள்ளார்.

எதிர் எதிர் அணியில் இருந்தாலும்கூட, இரு பெரும் தலைவர்களுக்கு இடையே நிலவிய விரிசல் இல்லாத நட்பும், அதைக் கண்ணியத்தோடு அவர்கள் பரிமாறிக் கொண்டதும் பெரும் வரலாற்று நிகழ்வுகள் அல்லவா?

-- தந்தை பெரியார் அவர்களின் 143 ஆவது பிறந்தநாள் - சிறப்புப் பதிவு

## 21• நிறைவேறியது 'அனைத்துச் சாதியினரும் அர்ச்சகர்' தீர்மானம்

• • • முனைவர் தேமொழி

"ஆலயங்களில் பூசை செய்யும் உரிமையை சிலர் கைப்பற்றி எல்லா ஜனங்களுக்கும் அவ்விஷயத்திலுள்ள புறப்புரிமையைப் பிடுங்கிக்கொண்டதினால் இந்த அக்கிரமத்தை நிறுத்தவும் ஆலயத்தில் பூஜை செய்யவும் அதற்காகக் கோயிலுக்குள் போகவும் ஒவ்வொரு இந்துவும் உரிமை பெறச்செய்யவும் இந்துத் தலைவர்கள் முயற்சி செய்ய வேண்டுமென்று இந்த மகாநாடு தீர்மானிக்கிறது."

இவ்வாறாக ஒரு தீர்மானம் முன்மொழியப்பட்டு சுமார் 93 ஆண்டுகள் ஆகின்றன. சீர்திருத்தம் விரும்பிய தமிழர்களின் இத்தீர்மானம் பல போராட்டங்கள் மற்றும் சட்டச் சிக்கல்களுக்குப் பிறகு இப்பொழுது நிறைவேறியுள்ளது.
**தந்தை 'பெரியாரின் நெஞ்சில் தைத்த முள்' இதனால் அகற்றப்பட்டுள்ளது.**

**பார்க்க-தமிழ்நாடு அரசாணை எண் 609:**
https://cms.tn.gov.in/sites/default/files/press_release/pr140821_609.pdf

மற்றும் படங்கள்:
https://cms.tn.gov.in/sites/default/files/press_release/pr140821d.jpg
https://cms.tn.gov.in/sites/default/files/press_release/pr140821c.jpg
https://cms.tn.gov.in/sites/default/files/press_release/pr140821b.jpg

ஆண்டு 1927- நவம்பர் மாதம் 5, 6 தேதிகளில் திருவாளர் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்ற 'சேலம் 3-வது அரசியல் மகாநாட்டில்' 10 தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

அவற்றில் ஆறாவது தீர்மானமே -- "ஆலயங்களில் பூசை செய்யும் உரிமையை சிலர் கைப்பற்றி எல்லா ஜனங்களுக்கும் அவ்விஷயத்திலுள்ள புறப்புரிமையைப் பிடுங்கிக் கொண்டதினால் இந்த அக்கிரமத்தை நிறுத்தவும் ஆலயத்தில் பூஜை செய்யவும் அதற்காகக் கோயிலுக்குள் போகவும் ஒவ்வொரு இந்துவும் உரிமை பெறச்செய்யவும் இந்துத் தலைவர்கள் முயற்சி செய்ய வேண்டுமென்று இந்த மகாநாடு தீர்மானிக்கிறது." என்பதாகும்.

மாநாட்டு நிகழ்வுகள் குறித்து பெரியாரின் 'குடிஅரசு' இதழில் (13-11-27 பக்கம் - 13) செய்தி வெளியாகி உள்ளது. அச்செய்தி கீழே வெள்ளுரை வடிவிலும், படமாகவும் இணைக்கப் படுகிறது.



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு.மு.க.ஸ்டாலின் அவர்கள் இன்று (14.8.2021) இந்து சமய அறநிலையத் துறையின் சார்பில் அனைத்து சாதியினரும் அர்ச்சகர் ஆகலாம் என்ற அரசாணையின் கீழ் 24 பயிற்சி பெற்ற அர்ச்சகர்களுக்கும், திருக்கோயில்களில் பணிபுரிய தேர்வு செய்யப்பட்ட அர்ச்சகர்கள், பட்டாச்சாரியார்கள், ஓதுவார்கள், பூசாரிகள், காவலர்கள் உள்ளிட்ட பல்வேறு பணியிடங்களுக்கு தேர்வு செய்யப்பட்ட 172 நபர்களுக்கும், கருணை அடிப்படையில் 12 நபர்களுக்கும், என மொத்தம் 208 நபர்களுக்கு பணிநியமன ஆணைகளை வழங்கிடும் அடையாளமாக 75 நபர்களுக்கு பணிநியமன ஆணைகளை வழங்கினார். இந்நிகழ்ச்சியில், மாண்புமிகு நகர்ப்புற வளர்ச்சித் துறை அமைச்சர் திரு.கே.என். நேரு, மாண்புமிகு மருத்துவம் மற்றும் மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் திரு. மா. சுப்பிரமணியன், மாண்புமிகு இந்து சமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சர் திரு. பி.கே. சேகர்பாபு, சட்டமன்ற உறுப்பினர்கள் திரு.த. வேலு மற்றும் திரு.எ.எம்.வி. பிரபாகர ராஜா, தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார், திருப்பெருந்திரு சாந்தலிங்க மருதாசல அடிகள், முனைவர் தவத்திரு குமரகுருபர சுவாமிகள், ஆன்மீக பேச்சாளர்கள் திரு. சுகி சிவம், திருமதி தேச மங்கையர்க்கரசி, சுற்றுலா, பண்பாடு மற்றும் அறநிலையங்கள் துறை முதன்மைச் செயலாளர், இந்து சமய அறநிலையத் துறை ஆணையர் மற்றும் அரசு உயர் அலுவலர்கள் கலந்து கொண்டனர். https://cms.tn.gov.in/sites/default/files/press_release/pr140821d.jpg



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு.மு.க.ஸ்டாலின் அவர்கள் இன்று (14.8.2021) இந்து சமய அறநிலையத் துறையின் சார்பில் அனைத்து சாதியினரும் அர்ச்சகர் ஆகலாம் என்ற அரசாணையின் கீழ் 24 பயிற்சி பெற்ற அர்ச்சகர்களுக்கும், திருக்கோயில்களில் பணிபுரிய தேர்வு செய்யப்பட்ட அர்ச்சகர்கள், பட்டாச்சாரியார்கள், ஓதுவார்கள், பூசாரிகள், காவலர்கள் உள்ளிட்ட பல்வேறு பணியிடங்களுக்கு தேர்வு செய்யப்பட்ட 172 நபர்களுக்கும், கருணை அடிப்படையில் 12 நபர்களுக்கும், என மொத்தம் 208 நபர்களுக்கு பணிநியமன ஆணைகளை வழங்கிடும் அடையாளமாக 75 நபர்களுக்கு பணிநியமன ஆணைகளை வழங்கினார். இந்நிகழ்ச்சியில், மாண்புமிகு நகர்ப்புற வளர்ச்சித் துறை அமைச்சர் திரு.கே.என். நேரு, மாண்புமிகு மருத்துவம் மற்றும் மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் திரு. மா. சுப்பிரமணியன், மாண்புமிகு இந்து சமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சர் திரு. பி.கே. சேகர்பாபு, சட்டமன்ற உறுப்பினர்கள் திரு.த. வேலு மற்றும் திரு.எ.எம்.வி. பிரபாகர ராஜா, தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார், திருப்பெருந்திரு சாந்தலிங்க மருதாசல அடிகள், முனைவர் தவத்திரு குமரகுருபர சுவாமிகள், ஆன்மீக பேச்சாளர்கள் திரு. சுகி சிவம், திருமதி தேச மங்கையர்க்கரசி, சுற்றுலா, பண்பாடு மற்றும் அறநிலையங்கள் துறை முதன்மைச் செயலாளர், இந்து சமய அறநிலையத் துறை ஆணையர் மற்றும் அரசு உயர் அலுவலர்கள் கலந்து கொண்டனர். https://cms.tn.gov.in/sites/default/files/press_release/pr140821c.jpg



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு.மு.க.ஸ்டாலின் அவர்கள் இன்று (14.8.2021) இந்து சமய அறநிலையத் துறையின் சார்பில் அனைத்து சாதியினரும் அர்ச்சகர் ஆகலாம் என்ற அரசாணையின் கீழ் திருக்கோயில் அர்ச்சகர் பயிற்சி பள்ளியில் பயின்று தேர்வு செய்யப்பட்ட 24 அர்ச்சகர்களுக்கு பணிநியமன ஆணைகளை வழங்கினார். அதனைத் தொடர்ந்து, மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களுடன் அர்ச்சகர்கள் குழு புகைப்படம் எடுத்துக் கொண்டனர். இந்நிகழ்வின்போது, மாண்புமிகு நகர்ப்புற வளர்ச்சித் துறை அமைச்சர் திரு.கே.என். நேரு, மாண்புமிகு மருத்துவம் மற்றும் மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் திரு. மா. சுப்பிரமணியன், மாண்புமிகு இந்து சமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சர் திரு. பி.கே. சேகர்பாபு, சட்டமன்ற உறுப்பினர்கள் திரு.த. வேலு மற்றும் திரு.எ.எம்.வி. பிரபாகர ராஜா, தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார், திருப்பெருந்திரு சாந்தலிங்க மருதாசல அடிகள், முனைவர் தவத்திரு குமரகுருபர சுவாமிகள், சுற்றுலா, பண்பாடு மற்றும் அறநிலையங்கள் துறை முதன்மைச் செயலாளர், இந்து சமய அறநிலையத் துறை ஆணையர் மற்றும் அரசு உயர் அலுவலர்கள் உடனிருந்தனர். https://cms.tn.gov.in/sites/default/files/press_release/pr140821b.jpg

நவம்பர் மாதம் 5, 6 தேதிகளில் திருவாளர் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்ற

# சேலம் 3-வது அரசியல் மகாநாடு.

சேலம் ஜில்லா 3-வது அரசியல் மகாநாட்டின் தலைவர் அவர்களையும் மற்றைய அரசியல் தலைவர்களையும் பிரதிநிதிகளையும் சிறப்புடன் வரவேற்பதற்காக வேண்டிய ஏற்பாடுகள் 2 நாள் முன்னிருந்தே நடைபெற்றது. நகர் முழுதும் வளைவுகளாலும் தோரணங்களாலும் அலங்காரமாய் சிங்காரிக்கப்பட்டிருந்தது. மகாநாட்டுத் தலைவர் திரு. வி. ஓ. சிதம்பரம் பிள்ளை அவர்களை காலை 9 மணிக்கு சேலம் டவுன் செவ்வாய்ப்பேட்டை தேர் நிலையிலிருந்து முதல் அக்கிராகாரம் கடை வீதி வழியாய் பாண்டு வாத்தியங்களுடன் ஊர்வலமாய் அழைத்து வரப்பட்டது. தலைவர் திரு. சிதம்பரம் பிள்ளை அவர்களும் வரவேற்பு கமிட்டித் தலைவர் திரு. தம்மண்ண செட்டியார் அவர்களும் முன்னணியிலும் ஈரோடு குடிஅரசு ஆசிரியர் திரு. ஈ. வெ. ராமசாமி நாயக்கர் அவர்கள் திரு. ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அவர்கள் டாக்டர் வரதராஜுலு நாயுடு அவர்கள் பின்னணியிலும் இரண்டு மோட்டார்களில் வரவும், முன்னால் மாணவர்கள் உள்பட பல வாலிப தொண்டர்கள் அணிவகுத்து வழி விலக்கவும், பிரபலஸ்தர்கள் புடைசூழவும், ஊர்வலம் சுமார் 3000 ஜனங்களடங்கிய பெருங் கோஷ்டியாய் ஜே கோஷங்களுடன் புறப்பட்டு வந்தது. ஊர்வலம் 11 மணிவரையில் நடைபெற்றது. பின்னர் தலைவர்கள் ஜாகைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள்

### எலெக்ட்ரி தியேட்டரில் மகாநாடு ஆரம்பம்:

மகாநாடு பகல் 2 மணிக்கு ஆரம்பம் என்றிருந்தாலும் மகாநாடு ஆரம்பமாக மாலை 3 மணி ஆய்விட்டது. தலைவர் வருவதற்கு முன்னர் கொட்டகையில் பிரதிநிதிகளும் விசிட்டர்களும் நிறைந்து விட்டார்கள். தலைவர் ஜயகோஷத்துடன் வரவேற்கப்பட்டு ஆசனத்திலமர்ந்தார். மேடையில் பல இடங்களிலிருந்தும் வந்த வரவேற்புகமிட்டி அங்கத்தினர்களும் தலைவர்களும் நிறைந்திருந்தார்கள், அவர்களில் மேற்கண்டவர்கள் முக்கியஸ்தர்கள், திரு பிஞ்சல சுப்பிரமணிய செட்டியார் ராவ்சாகிப் எல்லப்ப செட்டியார் எம் எல், ஸி. திரு. ஆர். கே. ஷண்முகம் செட்டியார், எம். எல். ஏ, திரு. ஈ. வெ. ராமசாமி நாயக்கர் டாக்டர் வரதராஜுலு நாயுடு, திரு. தெண்டபாணிபிள்ளை, திருவாளர்கள் டி, எஸ், ராஜகராஜ் பி ஏ பி எல், கே. நரசிம்மய்யங்கார் பி ஏ, பி எல், எம் சாமிநாதய்யர் பி ஏ, பி எல், கே சிவ சங்கர முதலியார் டாக்டர் ரங்கய்ய நாயுடு பி. இராஜமாணிக்கம் பண்டாரம், டி வி பங்காரு செட்டியார், எ கே சுந்தரய்யசெட்டியார், கே என் அருணாஜலம் செட்டியார், எஸ் பெரியசாமி முதலியார், என் கே சடகோப முதலியார், நாமக்கல் உஸ்மான் சாயபு, புலிமாபசர் ராமமூர்த்தி, ஆத்தூர் அப்துல் அமீத் சாயபு, ஏ வையாபுரி பண்டாரம், பூபதி கந்தசாமி பிள்ளை, எஸ் பி பொன்னுசாமி முதலியார், கே மாரிமுத்து முதலியார், பாப்பாபட்டி சின்னமுத்து முதலியார், ராமசந்திர நாயுடு, பி ஸ்ரீராமலு செட்டியார், பி ஏ. பி எல் சித்தி ராஜு, கோவிந்தசாமி நாயுடு, சிவப்பெருமாள் பிள்ளை, ஒபிளிசெட்டியார், கதிர் செட்டியார் ஜெகநாதசெட்டியார் அங்கமுத்து முதலியார், ஏத்தாபூர் நாராயணசெட்டியார் பி சிவராவ் எம் எல் ஸி, முதலிய முக்கியஸ்தர்கள் வந்தார்கள்.

முனிசிபல் சேர்மனும் வரவேற்பு கமிட்டித் தலைவருமான எஸ் தம்மண்ண செட்டியார் பிரதிநிதிகளை வரவேற்று தம் பிரசங்கத்தை வாசித்தார். மகாநாட்டுக்கு வர முடியாதவர்கள் அனுப்பிய தந்திகளை வாசித்தார்.

பின்னர் டாக்டர் நாயுடு அவர்கள் மகாநாட்டுக்குத் தலைமைவகித்த திரு. வி. ஓ. சிதம்பரபிள்ளை அவர்களைப் பிரேரேபிக்க ராவ்சாகிப் எல்லப்ப செட்டியார் ஆமோதிக்க திருவாளர்கள் வெங்கடாஜல செட்டியார் நாமக்கல் உஸ்மான் சாயபு, எம். சாமிநாதய்யர், ஆர். கே. ஷண்முகம் செட்டியார், ஈ. வெ. ராமசாமி நாயக்கர் இவர்கள் ஆதரிக்க தலைவர் அவர்கள் ஜயகோஷத்தினிடையே பதவியை யேற்று தமது அக்கிராசனப் பிரசங்கத்தை வாசித்தார்.

குறிப்பு:— மற்றைய நடவடிக்கைகளும் அக்கிராசனப் பிரசங்கமும் அடுத்த வாரம் வெளிவரும்.

### நிறைவேறிய தீர்மானங்கள்.

(1) இந்திய சமூக வளர்ச்சிக்கும் சுயராஜ்யம் விரைவில் பெறுவதற்கும், ஜாதி வித்தியாசம் முதலிய சமூக ஊழல்களை ஒழிப்பதில் காங்கிரஸ் தலையிட வேண்டியது அவசியமாயிருப்பதால், அதற்கு அநுகூலமாக காங்கிரஸ் விதிகளை அமைத்து சமூகச் சீர்திருத்தம் செய்ய முயலுவதாக காங்கிரஸ் மெம்பர்கள் வாக்குறுதியளிக்குமாறு செய்யவேண்டுமென்று இந்த மகாநாடு அபிப்பிராயப்படுகிறது,

(2) வரப்போகும் ராயல் கமிஷன் பார்லிமெண்டு மெம்பர்களடங்கிய ஒரு கமிஷனாக இருக்குமென்று கேட்டு இந்த மகாநாடு வருந்துவதுடன் போதுமான அளவுக்கு இந்தியப் பிரதிநிதிகள் கமிஷனில் இல்லாவிட்டால் தேசத்தாருக்கு கமிஷன் திருப்திகரமாயிருக்காதென்றும் இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

3. (அ) கௌஹத்தி காங்கிரஸ் கட்டளைக்கு விரோதமாக சட்டசபை மெம்பர்களுக்கு அகில இந்திய காங்கிரஸ் காரிய கமிட்டியார் உத்தரவுகள் அனுப்பியதை இந்த மகாநாடு வன்மையாகக் கண்டிக்கிறது. (ஆ) சென்னை காங்கிரஸ் கட்சி மெம்பர்களில் சிலர் மந்திரி பதவி ஒப்புக்கொள்வதற்கு அநுகூலமுடையவர்களாகக் காணப்படுவதால், காங்கிரஸ் கட்சியார் உத்தியோகம் ஒப்புக்கொள்ளுவது தேர்தல் வாக்குறுதிக்கு விரோதமானதென்றும், அடுத்த காங்கிரஸ் உத்தியோகம் ஒப்புக்கொள்ளும்படி தீர்மானம் செய்தால் உத்தியோகம் ஒப்புக்கொள்ள விரும்பும் சட்டசபை மெம்பர்களை ராஜிநாமா செய்யச்சொல்லி மீண்டும் தேர்தலுக்கு நிற்குமாறு தூண்ட வேண்டுமென்றும் இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

4. "காமன் வெல்த் ஆப் இந்தியா" மசோதாவைப் பரிசீலனை செய்து அது சர்வஜன சம்மதம் பெற ஏதேனும் திருத்தங்களோ மாற்றங்களோ தேவையாயிருந்தால் அவைகளைக் குறிப்பிடுமாறு காங்கிரஸ் ஒரு கமிட்டியை நியமிக்கும்படி இம்மகாநாடு தீர்மானம் செய்கிறது. இந்த மசோதா விஷயத்தில் டாக்டர் பெசண்டு எடுத்துக்கொண்ட அரிய முயற்சிகளை இம்மகாநாடு மிகவும் பாராட்டுகிறது.

5. (அ) இந்த நாட்டிலுள்ள ஜனங்களை சமூக விஷயங்களில் அடிமையாக வைப்பதற்குக் காரணமாயிருக்கும் வருணாசிரம தர்மத்தைப்பற்றி மகாத்மா தென்னாட்டுப் பிரயாண காலத்தில் பிரசாரம் செய்ததற்காக இம்மகாநாடு வருந்துகிறது.

(ஆ) தீண்டாமை யொழித்தல், பிறப்பினால் உயர்வு தாழ்வுண்டென்னும் உணர்ச்சியை நீக்கல், முதலியவைகளுக்காக எல்லா இந்துக்களும் பிரசாரம் செய்து சுயமரியாதை உணர்ச்சியை விருத்திசெய்ய வேண்டுமென்று இந்த மகாநாடு கேட்டுக்கொள்ளுகிறது. தேவையானால் எங்கும் சத்தியாக்கிரக ஆசிரமங்கள் ஸ்தாபனம் செய்யவேண்டுமென்றும் இந்த மகாநாடு அபிப்பிராயப்படுகிறது.

(6) ஆலயங்களில் பூசை செய்யும் உரிமையை சிலர் கைப்பற்றி எல்லா ஜனங்களுக்கும் அவ்விஷயத்திலுள்ள புறப்புரிமையைப் பிடுங்கிக்கொண்டதினால் இந்த அக்கிரமத்தை நிறுத்தவும் ஆலயத்தில் பூஜை செய்யவும் அதற்காகக் கோயிலுக்குள் போகவும் ஒவ்வொரு இந்துவும் உரிமை பெறச்செய்யவும் இந்துத் தலைவர்கள் முயற்சிசெய்ய வேண்டுமென்று இந்த மகாநாடு தீர்மானிக்கிறது.

(7) தமிழ்நாடு மாகாண காங்கிரஸ் கமிட்டியார் கங்காணி சபைகள் ஸ்தாபித்து காங்கிரசில் ஆட்கள் சேரமுடியாமல் தடைசெய்திருப்பதையும் ஒரு கட்சியார் தம் கட்சியாருக்கு மட்டும் ஜில்லா தாலூகா கமிட்டிகளில் ஆதிக்கமுண்டாகுமாறு சூழ்ச்சி செய்து வருவதையும் இம்மகாநாடு கண்டிக்கிறது.

(8) வகுப்பு வேற்றுமைகளும் ஜாதி வித்தியாசங்களும் இருக்கும்வரை எல்லா சமூகத்தாருக்கும் உத்தியோகமும் மற்றும் பதவிகளும் சமமாகக் கிடைக்கும்படி தகுந்த ஏற்பாடு செய்ய வேண்டுமென்று இந்தமகாநாடு தீர்மானிக்கிறது.

(9) சேலம் ஜில்லாவில் ஒரு பகுதிக்கு மேட்டூர் தேக்கத்திலிருந்து நீர்ப்பாசனத்துக்காக தண்ணீர் விட்டுக்கொடுக்கவேண்டுமென்று இந்த மகாநாடு தீர்மானிக்கிறது.

(10) கிராமங்களில் அதிகப்படியான பாடசாலைகளும் சித்த வைத்திய சாலைகளும் ஸ்தாபிக்கவேண்டியதும் எல்லா ஆரம்பப் பள்ளிக்கூடங்களிலும் ஆதிதிராவிடக் குழந்தைகளுக்கு இலவசமாக கல்வி கற்பிக்க வேண்டியதும் மிகவும் அவசியமென்று இந்த மகாநாடு சர்க்காருக்கு வற்புறுத்துகின்றது.

## சேலம் 3-வது அரசியல் மகாநாடு.

குடி அரசு
13-11-27
பக்கம் - 13

ஆண்டு 1927-

நவம்பர் மாதம் 5, 6 தேதிகளில் திருவாளர் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்ற
'சேலம் 3-வது அரசியல் மகாநாடு'

சேலம் ஜில்லா 3-வது அரசியல் மகாநாட்டின் தலைவர் அவர்களையும் மற்றய அரசியல் தலைவர்களையும் பிரதிநிதிகளையும் சிறப்புடன் வரவேற்பதற்காக வேண்டிய ஏற்பாடுகள் 2 நாள் முன்னரிருந்தே நடைபெற்றது. நகர்முழுதும் வளைவுகளாலும் தோரணங்களாலும் அலங்காரமாய் சிங்காரிக்கப்பட்டிருந்தது. மகாநாட்டுத் தலைவர் திரு. வி. ஓ. சிதம்பரம் பிள்ளை அவர்களை காலை 9 மணிக்கு சேலம் டவுன் செவ்வாய்ப்பேட்டை தேர் நிலையிலிருந்து முதல் அக்கிராரம் கடைவீதி வழியாய் பாண்டு வாத்தியங்களுடன் ஊர்வலமாய் அழைத்து வரப்பட்டது தலைவர் திரு. சிதம்பரம் பிள்ளை அவர்களும் வரவேற்பு கமிட்டித் தலைவர் திரு. தம்மண்ண செட்டியார் அவர்களும் முன்னணியிலும் ஈரோடு குடிஅரசு ஆசிரியர் திரு. ஈ. வெ. ராமசாமி நாயக்கர் அவர்கள், திரு. ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அவர்கள், டாக்டர் வாதராஜலு நாயுடு அவர்கள் பின்னணியிலும், இரண்டு மோட்டார்களில் வரவும், முன்னால் மாணவர்கள் உள்பட பல வாலிப தொண்டர்கள் அணிவகுத்து வழி விலக்கவும், பிரபலஸ்தர்கள் புடைசூழவும், ஊர்வலம் சுமார் 3000 ஜனங்களடங்கிய பெருங் கோஷ்டியாய் ஜே. கோஷங்களுடன் புறப்பட்டு வந்தது. ஊர்வலம் 11 மணிவரையில் நடை பெற்றது, பின்னர் தலைவர்கள் ஜாகைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள்.

எலெக்டிரி தியேட்டரில் மகாநாடு ஆரம்பம்:
மகாநாடு பகல் 2 மணிக்கு ஆரம்பம் என்றிருந்தாலும் மகாநாடு ஆரம்பமாக மாலை 3 மணி ஆய்விட்டது, தலைவர் வருவதற்கு முன்னர் கொட்டகையில் பிரதிநிதிகளும் விசிட்டர்களும் நிறைந்து விட்டார்கள், தலைவர் கரகோஷத்துடன் வரவேற்கப்பட்டு ஆசனத்திலமர்ந்தார். மேடையில் பல இடங்களிலிருந்தும் வந்த வரவேற்புகமிட்டி அங்கத்தினர்களும் தலைவர்களும் நிறைந்திருந்தார்கள். அவர்களில் கீழ்க்கண்டவர்கள் முக்கியஸ்தர்கள், திரு பிஞ்சல சுப்பிரமணிய செட்டியார், ராவ்சாகிப் எல்லப்ப செட்டியார் எம்.எல்.சி., திரு. ஆர். கே. ஷண்முகம் செட்டியார் எம்.எல்.ஏ., திரு. ஈ. வெ. ராமசாமி நாயக்கர், டாக்டர் வாதராஜுலு நாயுடு, திரு. தெண்டபாணிபிள்ளை, திருவாளர்கள் டி. எஸ். ஜெகராஜ் பி.ஏ.பி.எல்., கே.

நரசிம்மய்யங்கார் பி.ஏ.பி.எல்., எம்.சாமிநாதய்யர் பி.ஏ.பி.எல்., கே. சிவ. சங்கர முதலியார், டாக்டர் ரங்கய்ய நாயுடு, பி. இராஜமணிக்கம் பண்டாரம், டி.வி.பங்காரு செட்டியார், எ. கே. சுந்தரய்ய செட்டியார், கே.எஸ். அருணாஜலம் செட்டியார், எஸ். பெரியசாமி முதலியார், என். கே. சடகோப முதலியார், நாமக்கல் உஸ்மான் சாயுபு, புரொபசர் ராமமூர்த்தி, ஆத்தூர் அப்துல் அமித் சாயபு, ஏ.வையாபுரி மண்டாரம், பூபதி கந்தசாமி பிள்ளை, எஸ்.பி.பொன்னுசாமி முதலியார், கே.மாரிமுத்து முதலியார், பாப்பாபட்டி சின்னமுத்து முதலியார், சர்மசந்திர நாயுடு, பி. ஸ்ரீராமலு செட்டியார் பி.ஏ.பி.எல்., சித்தி ராஜு, கோவிந்தசாமி நாயுடு, சிவப்பெருமாள் பிள்ளை, ஒபிளி செட்டியார், கதிர் செட்டியார், ஜெகநாத செட்டியார், அங்கமுத்து முதலியார், ஏத்தாபூர் நாராயணா செட்டியார், பி. சிவராவ் எம்.எல்.சி, முதலிய முக்கியஸ்தர்கள் வந்தார்கள்.

முனிசிபல் சேர்மனும் வரவேற்பு கமிட்டித் தலைவருமான எஸ்.தம்மண்ண செட்டியார் பிரதிநிதிகளை வரவேற்று தம் பிரசங்கத்தை வாசித்தார். மகாராட்டுக்கு வரமுடியாதவர்கள் அனுப்பிய தந்திகளை வாசித்தார்.

பின்னர் டாக்டர் நாயுடு அவர்கள் மகாநாட்டுக்குத் தலைமைவகித்த திரு. வி. ஒ. சிதம்பரபிள்ளை அவர்களைப் பிரேரேபிக்கராவ் சாகிப், எல்லப்ப செட்டியார் ஆமோதிக்க, திருவாளர்கள் வெங்கடாஜல ரெட்டியார், நாமக்கல் ஊஸ்மான் சாயபு, எம். சாமிநாதய்யர், ஆர். கே. ஷண்முகம் செட்டியார், ஈ. வெ. ராமசாமி நாயக்கர் இவர்கள் ஆகரிக்க தலைவர் அவர்கள் கரகோஷத்தினிடையே பதவியை யேற்று தமது அக்கிராசனப் பிரசங்கத்தை வாசித்தார்.
குறிப்பு:- மற்றய நடவடிக்கைகளும் அக்கிராசனப் பிரசங்கமும் அடுத்த வாரம் வெளி வரும்.

**நிறைவேறிய தீர்மானங்கள்:**

(1)

இந்திய சமூக வளர்ச்சிக்கும் சுயராஜ்யம் விரைவில் பெறுவதற்கும், ஜாதி வித்தியாசம் முதலிய சமூக ஊழல்களை ஒழிப்பதில் காங்கிரஸ் தலையிட வேண்டியது அவசியமாயிருப்பதால், அதற்கு அநுகூலமாக காங்கிரஸ் விதிகளை அமைத்து சமூகச் சீர்திருத்தம் செய்ய முயலுவதாக காங்கிரஸ் மெம்பர்கள் வாக்குறுதியளிக்குமாறு செய்யவேண்டுமென்று இந்த மகாநாடு அபிப்பிராயப் படுகிறது.

(2)

வரப்போகும் ராயல் கமிஷன் பார்லிமெண்டு மெம்பர்களடங்கிய ஒரு கமிஷனாக இருக்குமென்று கேட்டு இந்த மகாநாடு வருந்துவதுடன் போதுமான அளவுக்கு இந்தியப் பிரதிநிதிகள் கமிஷனில் இல்லாவிட்டால் தேசத்தாருக்கு கமிஷன் திருப்திகரமாயிருக்கா தென்றும் இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

(3)

(அ) கௌகத்தி காங்கிரஸ் கட்டளைக்கு விரோதமாக சட்டசபை மெம்பர்களுக்கு அகில இந்திய காங்கிரஸ் காரிய கமிட்டியார் உத்தரவுகள் அனுப்பியதை இந்த மகாநாடு வன்மையகாக் கண்டிக்கிறது.

(ஆ) சென்னை காங்கிரஸ் கட்சி மெம்பர்களில் சிலர் மந்திரி பதவி ஒப்புக்கொள்வதற்கு அனுகூலமுடையவராகக் காணப்படுவதால், காங்கிரஸ் கட்சியார் உத்தியோகம் ஒப்புக்கொள்ளுவது தேர்தல் வாக்குறுதிக்கு விரோதமான தென்றும், அடுத்த காங்கிரஸ் உத்தியோகம் ஒப்புக்கொள்ளும்படி தீர்மானம் செய்தால் உத்தியோகம் ஒப்புக் கொள்ள விரும்பும் சட்டசபை மெம்பர்களை ராஜிநாமா செய்யச்சொல்லி மீண்டும் தேர்தலுக்கு நிற்குமாறு தூண்ட வேண்டுமென்றும் இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

(4)

"காமன் வெல்த்து ஆப் இந்தியா" மசோதாவைப் பரிசீலனை செய்து அது சர்வஜன சம்மதம் பெற ஏதேனும் திருத்தங்களோ மாற்றங்களோ தேவையாயிருந்தால் அவைகளைக் குறிப்பிடுமாறு காங்கிரஸ் ஒரு கமிட்டியை நியமிக்கும்படி இம்மகாநாடு தீர்மானம் செய்கிறது. இந்த மசோதா விஷயத்தில் டாக்டர் பெசண்டு எடுத்துக்கொண்ட அரிய முயற்சிகளை இம்மகாகாடு மிகவும் பாராட்டுகிறது.

(5)

(அ) இந்த நாட்டிலுள்ள ஜனங்களை சமூக விஷயங்களில் அடிமையாக வைப்பதற்குக் காரணமாயிருக்கும் வருணாசிரம தர்மத்தைப்பற்றி மகாத்மா தென்னாட்டுப் பிரயாண காலத்தில் பிரசாரம் செய்ததற்காக இம்மகாகாடு வருந்துகிறது.

(ஆ) தீண்டாமை யொழித்தல், பிறப்பினால் உயர்வு தாழ்வுண்டென்னும் உணர்ச்சியை நீக்கல், முதலியவைகளுக்காக எல்லா இந்துக்களும் பிரசாரம் செய்து சுயமரியாதை உணாச்சியை விருத்தி செய்ய வேண்டுமென்று இந்த மநாநாடு கேட்டுக்கொள்ளுகிறது. தேவையானால் எங்கும் சத்தியாக்கிரக ஆசிரமங்கள் ஸ்தாபனம் செய்யவேண்டுமென்றும் இந்த மகாநாடு அபிப்பிராயப் படுகிறது.

(6)

ஆலயங்களில் பூசை செய்யும் உரிமையை சிலர் கைப்பற்றி எல்லா ஜனங்களுக்கும் அவ்விஷயத்திலுள்ள புறப்புரிமையைப் பிடுங்கிக்கொண்டதினால் இந்த அக்கிரமத்தை நிறுத்தவும் ஆலயத்தில் பூஜை செய்ய வும் அதற்காகக் கோயிலுக்குள் போகவும் ஒவ்வொரு இந்துவும் உரிமை பெறச்செய்யவும் இந்துத் தலைவர்கள் முயற்சி செய்ய வேண்டுமென்று இந்த மகாநாடு தீர்மானிக்கிறது.

(7)

தமிழ்நாடு மாகாண காங்கிரஸ் கமிட்டியார் கங்காணி சபைகள் ஸ்தாபித்து காங்கிரசில் ஆட்கள் சேரமுடியாமல் தடைசெய்திருப்பதையும் ஒரு கட்சியார் தம்

கட்சியாருக்கு மட்டும் ஜில்லா தாலுகா கமிட்டிகளில் ஆதிக்க முண்டாகுமாறு சூழ்ச்சி செய்து வருவதையும் இம்மகாநாடு கண்டிக்கிறது.

(8)
வகுப்பு வேற்றுமைகளும் ஜாதி வித்தியாசங்களும் இருக்கும்வரை எல்லா சமூகத்தாருக்கும் உத்தியோகமும் மற்றும் பதவிகளும் சமமாகக் கிடைக்கும்படி தகுந்த ஏற்பாடு செய்ய வேண்டுமென்று இந்தமகாநாடு தீர்மானிக்கிறது.

(9)
சேலம் ஜில்லாவில் ஒரு பகுதிக்கு மேட்டுர் தேக்கத்திலிருந்து நீர்ப்பாசானத்துக்காக தண்ணீர் விட்டுக்கொடுக்கவேண்டு மென்று இந்த மகாநாடு தீர்மானிக்கிறது.

(10)
கிராமங்களில் அதிகப்படியான பாடசாலைகளும் சித்த வைத்திய சாலைகளும் ஸ்தாபிக்கவேண்டியதும் எல்லா ஆரம்பப் பள்ளிக் கூடங்களிலும் ஆதிதிராவிடக் குழந்தைகளுக்கு இலவசமாக கல்வி கற்பிக்கவே ண்டியதும் மிகவும் அவசியமென்று இந்த மாநாடு சர்க்காருக்கு வற்புறுத்துகின்றது.

## 22 • எல்லாச் சாலைகளும் தீட்சை பூமியை நோக்கி...

• • • முனைவர் சிவ. இளங்கோ

**அண்ணல் அம்பேத்கர் பௌத்தம் தழுவிய நாள் 1956 ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம், 14 ஆம் நாள்.**



**புத்தருடன் அம்பேத்கருக்கு ஏற்பட்ட புரிதல்:**

அண்ணல் அம்பேத்கரின் சிறுவயதில் ராமாயணமும், மகாபாரதமும் தினமும் இரவில் படிக்கும் படி அவரது தந்தையார் உத்தரவிட்டிருந்தார். தந்தை சொல் கேட்டு அப்படியே செய்து வந்தார் அம்பேத்கர். மாணவப் பருவத்தில் அவர் மிக நன்றாகப் படித்து வகுப்பினில் தேறியதற்காக அவரது தந்தையின் நண்பர் தாதா கெலுஸ்கர் என்பவர், அவர் எழுதிய 'புத்தரின் வரலாறு' என்ற நூலை அம்பேத்கருக்குப்

பரிசளித்தார். அந்த நூலை முழுவதுமாக ஆர்வத்துடன் வாசித்த அம்பேத்கருக்கு, அவருடைய மனதில் ஏற்கனவே பொங்கிக் கொண்டிருந்த உணர்வுகளுக்குப் பெரும் வடிகால் அமைந்த நிறைவு ஏற்பட்டது. நாள்தோறும் ராமாயணமும், மகாபாரதமும் படித்து வந்தாலும் அம்பேத்கர் அந்த இதிகாசங்களில் உள்ள பெரும்பாலான கதாபாத்திரங்களை விரும்பவில்லை. அவற்றில் ஆதிக்கமும், உயர் சாதி வெறியும் இருப்பதை உணர்ந்தார். அதுவும் கிருஷ்ணரின் நடவடிக்கைகள் தொடர்ந்த குற்றச்செயல்களாகவே அவருக்குப் பட்டன. அதேபோல் ராமனின் நடவடிக்கைகளும் மனித சமுதாயத்திற்கு நல்ல எடுத்துக்காட்டாக விளங்கவில்லை என்றும் அம்பேத்கர் கருதினார்.

மதக் கோட்பாடுகள் என்ற பெயரில் நம்மைச் சுற்றியிருக்கும் தவறான வழிகாட்டுதலிலிருந்து மனித சமுதாயம் விடுபடவும், மீளவும் புத்தரின் தம்மம் ஒன்றே வழி என்று அம்பேத்கர் உணர்ந்தார். புத்தர் கூறிய நல்ல அறிவுரைகள் தான் 'தம்மம்' என்ற பொதுவான சொல்லாக அறியப்படுகிறது.

**- வாழ்க்கையில் தூய்மையைக் கடைப்பிடிப்பது;**
**- வாழ்வில் நிறைவடைவது;**
**- புலன் உணர்வுகள் மீது போதுமான கட்டுப்பாடு (நிப்பானம்);**
**- ஆசையைத் துறந்து வாழ்வது;**
**- அனைத்துக் கூட்டுப் பொருட்களும் நிலையற்றவை என உணர்வது;**
**- நல்ல செயற்பாட்டினை ஒழுக்க நியதியின் கருவி என்று உணர்வது**
**(தம்மம்: நூல் 3: பகுதி 3: ப: 195 - 210)**

ஆகிய இவையெல்லாம் எல்லோராலும் கடைப்பிடிக்கக் கூடிய தம்மம் ஆகும். ஆகவே புத்தர் காட்டிய தம்மத்தின் வழி நடப்பது ஒன்றே மனிதனை மனிதனாக உணர்வதற்குச் சரியான கருவியாகும் என்று அம்பேத்கர் கருதினார்.

**இந்துவாகப் பிறந்திருந்தாலும் இந்துவாகச் சாக மாட்டேன்:**

கௌதம புத்தர் ஒருவரே மாறிவரும் நவீன உலகத்திற்கு வழிகாட்டக்கூடிய ஒளியை அளித்திருக்கிறார் என்பதை அம்பேத்கர் உணர்ந்திருந்தார். வருங்கால உலகத்திற்கான வழிகாட்டுதல் அனைத்தும் புத்த நெறியில் இருப்பதை அவர் கண்டார். இனிவரும் காலங்களில் அறிவியல் சார்ந்து வாழும் மனிதர்களுக்கு மதம் என்ற ஒன்று அவசியம் என்று கருதப்பட்டால், அவர்கள் புத்தரின் தம்மத்தை மட்டுமே ஏற்றுக்கொள்ள முடியும் என்றும் அம்பேத்கர் கருதினார். இவை எல்லாம், இந்தியாவில் உள்ள அனைத்து மதக் கோட்பாடுகளையும் கற்றறிந்த பின்னால், தனக்கு ஏற்பட்ட ஒரு தீர்க்கமான முடிவு என்று அம்பேத்கர் கூறினார்.

மதம் என்பது அதிகாரத்திற்கான ஓர் அடிப்படை என்பதை இந்திய வரலாறு நிரூபித்திருக்கிறது. இந்துக்கள் மதம் என்று அழைப்பது சட்டமாக ஆக்கப்பட்டுள்ள வகுப்புவாரி நீதி நெறிகளைத் தான். இவற்றைப் பரப்புவதைத் தண்டிக்கப்பட வேண்டிய குற்றமாக்க வேண்டுமானால், வேத, சாஸ்திர, புராணங்கள் புனிதமானவையோ, அதிகாரப் பூர்வமானவையோ அல்ல என்று சட்டப்பூர்வமாகச்

செய்துவிட வேண்டும் என்று அம்பேத்கர் விரும்பினார். இந்துக்கள் இந்தியாவின் மன நோயாளிகள். உயர்ந்த இந்து, தாழ்ந்த இந்து என்று இருக்க முடியும். ஆனால் நல்ல இந்து என்று யாரும் இருக்க முடியாது என்பதையெல்லாம் முன்னமேயே கணித்து இருந்தார் அண்ணல் அம்பேத்கர்.

இந்தியாவைப் பொறுத்தவரையில் சாதியை ஒழிப்பது என்பது, இந்து மதத்தை அழித்து ஒழிக்கும் வழி என்று உறுதிப்படக் கூறினார் அண்ணல் அம்பேத்கர். சாதிக்கும், வர்ணத்திற்கும் உள்ள மத அங்கீகாரம் ஒழிக்கப்பட வேண்டும் என்பதும், சாதியையும் தீண்டாமையையும் கடைப்பிடிப்பது மதக் கடமை என்று கூறச் சாத்திரங்களே உதவுகின்றன என்பதும் அம்பேத்கரின் அறிவுரைகள். சாதிகளின் மதமான இந்து மதத்தைக் கற்றுத் தந்திருக்கிற சாத்திரங்களே நமது முதல் எதிரி என்று அடையாளப்படுத்திய அம்பேத்கர், இந்து மதத்தில் நிலவி வரும் சாதி, தீண்டாமையைச் சுட்டிக்காட்டி, தான் இந்துவாகப் பிறந்திருந்தாலும் இந்துவாகச் சாக மாட்டேன் என்று உறுதி ஏற்று, அதன்படி சாதித்தும் காட்டினார் என்பது இந்திய வரலாற்றில் புத்தருக்கு அடுத்து நிகழ்த்தப்பட்ட ஒரு மாபெரும் புரட்சி.

**தன்மானத்தைக் காப்பதே தீட்சையின் மௌனப் புரட்சி:**

மதம் மாறுவதற்குப் பல்வேறு காரணங்கள் உள்ளன. ஆனால் அம்பேத்கரின் மதமாற்றம் தீண்டாமை என்னும் கொடிய பேயின் கோர நர்த்தனத்தால் விளைந்தது. தீண்டாமை ஒழிக்கப்பட வேண்டும் என்ற நோக்கில், 'தீண்டாமை ஒழிக்கப்பட்டு விட்டது' என்ற வாசகத்தை அம்பேத்கர் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தில் இடம் பெற வைத்தாலும், நடைமுறையில் இந்தியாவில் இன்னும் தீண்டாமை ஒழிக்கப்படவில்லை என்று உலகிற்கு எடுத்துக்காட்டும் வகையில்தான் அவர் பல லட்சம் மக்களோடு பௌத்தம் தழுவினார்.

இனவெறியும், நிறவெறியும் மட்டுமே அறிந்திருந்த மேற்குலக நாட்டினர் 'சாதிவெறி' என்றால் என்ன என்ற கேள்வியுடன் இந்தியாவைத் திடுக்கிட்டு நோக்கினர். ஆனாலும் இன்றளவும் ஐக்கிய நாடுகள் சபைக் கூட்டங்களில் 'சாதிவெறி' விவாதப் பொருளாக வில்லை. அதை விவாதப் பொருளாக ஆக்குவதற்கு இந்தியாவும் விரும்பவில்லை. அதற்குப் பதிலளிக்கும் விதமாக, 'தீண்டாமை ஒழிக்கப்பட்டு விட்டது' என்று இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் உள்ள அம்பேத்கரின் வாசகங்களைத்தான் இந்தியா உலக நாடுகளுக்குச் சுட்டிக் காட்டுகிறது. ஆனால் இந்தியாவில் தீண்டாமையும், சாதிவெறியும் இன்னும் நிலவுகின்றன என்பதை அன்றாடம் வரும் செய்திகள் உறுதிப்படுத்தி வருகின்றன.

இந்தியா ஒரு மதச்சார்பற்ற நாடாக, தீண்டாமையை ஒழித்துவிட்ட ஒரு நாடாகத் தன்னை முன்னிறுத்துவதில் உள்ள கயமைத் தன்மையை உலகுக்கு அம்பலப்படுத்தும் விதமாகத்தான், அம்பேத்கர் இந்து மதத்தை விட்டுப் பௌத்தம் தழுவினார். இதுவே இந்தியப் பூர்வ குடிமக்களின் தன்மானத்தைக் காக்கும் நிகழ்வு என்றும் அம்பேத்கர் கருதினார்.

**தீட்சை ஏற்கும் நாளின் சிறப்பு:**
அண்ணல் அம்பேத்கர் தான் பௌத்தம் ஏற்ற நிகழ்வின் நாளையும், இடத்தையும் புத்தரோடு தொடர்பு உள்ளதாகவும், வரலாற்றுச் சிறப்பு உள்ளதாகவும் அமையுமாறு தேர்ந்தெடுத்தார்.

அசோக மன்னர் (கிமு மூன்றாம் நூற்றாண்டு) கலிங்கத்தின் மீது படையெடுத்து, வென்று, அப் போரில் ஏற்பட்ட உயிரிழப்புகளால் மனம் வருந்தி, அங்கு வந்த ஒரு பௌத்த பிக்குவின் வழி புத்தரின் அறிவுரைகளை ஏற்று, பவுத்தம் ஏற்ற நாள்தான் அக்டோபர் 14 என வரலாறு குறிப்பிடுகிறது.

அசோகர், கலிங்கப் போர் முடிந்த ஒன்பதாவது நாளில் (நவமி-பாலி) போர் ஆயுதங்களைத் தூய்மைப்படுத்தி, இனி அவை போருக்கல்ல; உழவுக்கும், பூசைக்குமான (ஆயுதபூசை) கருவி என்றாக்கி விட்டு, அசோகர், தான் போரில் வென்ற பத்தாவது நாளில் (விஜயதசமி-பாலி) பௌத்தம் தழுவினார்.

வரலாற்றோடும், புத்தருடனும் தொடர்புடைய அந்த நாளையே அம்பேத்கரும் பௌத்தம் தழுவும் நாளாகத் தேர்ந்தெடுத்தார்.

**தீட்சை பூமியின் சிறப்பு:**
ஒரு காலத்தில் இந்தியத் துணைக் கண்டம் முழுவதிலும் தமிழர்களே பரவியிருந்தனர்; தமிழர்களே ஆண்டிருந்தனர். "ஒரு மொழி வைத்து உலகாண்ட வரலாறை" சங்கத்தமிழ் இலக்கியங்கள் (புறநானூறு) பறைசாற்றுகின்றன. அவர்கள் தங்கள் முன்னோர் வழிபாடுகளில், பாம்பை (நாகம்) வைத்து வணங்கி வந்தனர். இதனால் அவர்கள் நாகர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். இந்த நாகர்களே, திராவிடர்கள் என்றும் அழைக்கப்பட்டனர் என்றும், அவர்கள் பேசிய மொழி தமிழ் என்றும் அம்பேத்கர் தன் ஆய்வில் தெரிவித்திருக்கிறார்.

அந்த நாகர்கள் அனைவரும் பௌத்தர்களாகவே உலகியலை அறிந்து வாழ்ந்தனர். பௌத்தத்துக்கும், வைதிகப் பிராமணியத்திற்கும் நடைபெற்ற நீண்ட முடிவிலாப் போரை, அதர்ம யுத்தமாக்கி வைதிகம் வென்றது. அப்படி ஒரு காலத்தில், பௌத்தம் செழித்திருந்த பூமிதான், நாக்பூர் என்று அழைக்கப்படும் நாகபுரி. அதனால் தான் தெற்கையும், வடக்கையும் இணைக்கும் இந்தியத் துணைக் கண்டத்தின் மையத்தில், இந்நாடு முழுவதும் பௌத்தர்களாக இருந்த வரலாற்றை நினைவு கொள்ளும் வகையில் நாகபுரியைத் தேர்ந்தெடுத்தார் அம்பேத்கர்.

நாகபுரியில், 14. 10. 1956 அன்று காலை அண்ணல் அம்பேத்கர் தன் மனைவியுடனும், தன்னைப் பின்பற்றும் பல லட்சம் தொண்டர்களுடனும் புத்தர் சிலையை வணங்கி, வெள்ளைத் தாமரை மலர் தூவி, பௌத்தம் ஏற்றார். புத்த தம்மங்கள் பாலி மொழியில் சொல்லப்பட்டன. அவற்றை அம்பேத்கரும், அவர் மனைவியும் தங்கள் தாய்மொழியான மராத்தி மொழியில் கூறி பௌத்தம் ஏற்றனர். அதற்கு அடையாளமாக அம்பேத்கர் 22 உறுதி மொழிகளையும் அப்போது ஏற்றார். அவற்றை

அம்பேத்கர் ஒவ்வொன்றாக சொல்லச் சொல்ல, மற்ற அனைவரும் அப்படியே திரும்பவும் மொழிந்து பௌத்தம் ஏற்றனர்.



பௌத்தம் தழுவியதற்கு அடையாளமான 22 உறுதி மொழிகளில் பத்தொன்பதாவது உறுதிமொழியாக, **"மனித நேயத்துக்கு முரணான, சமத்துவம் இல்லாத, கேடுகெட்ட இந்து மதத்தை விட்டொழித்து, இன்றுமுதல் மேன்மைமிகு பௌத்தத்தைத் தழுவிக் கொள்கிறேன்"** என்று அம்பேத்கர் அமைத்த வாசகம் தான் அவர் பவுத்தம் தழுவியது குறித்து உலகிற்கு அளிக்கும் செய்தி.

**மத மாற்றமல்ல; சமூக விடுதலை:**
அண்ணல் அம்பேத்கருக்கு ஒரு மாபெரும் கனவு இருந்தது. அது, உண்மையை உணர்ந்த, அறிவார்ந்த, சமத்துவச் சமுதாயம் அமைய வேண்டும் என்பதுதான். இதே கனவு தான் புத்தருக்கும் இருந்தது. பின்னர் அது சங்கமாக உருப்பெற்றது.

அம்பேத்கருக்கு அந்தக் கனவு இன்னும் விரிந்தது. அந்தக் கனவுலகத்தில் அனைவரும் சமம்; பிறப்பு, பாலினம் என்று பாகுபாடு இல்லாமல் அனைவருக்கும் கல்வி; அதற்கான கட்டமைப்பு வசதிகள்; அனைவருக்கும் மருத்துவ வசதி; பொதுமக்கள் பயன்பாட்டிற்கான சமுதாயக் கூடங்கள்; உயர்கல்விக்கான நூல் நிலையங்கள்; தொழில் கல்லூரிகள்; பிக்குகளுக்கான பயிற்சி முகாம்கள் என்று நாடு முழுவதும் இருக்க வேண்டும் என்பதே அம்பேத்கரின் கனவு. ஆனால் இதை அரசாங்கம் செய்கிறதோ இல்லையோ அம்பேத்கரின் கனவான தீட்சை பூமியில் அவர் செய்தார். அதற்காக ஓர் அறக்கட்டளையை நிறுவி, நூறு ஏக்கர் நிலத்தில் மேற்குறிப்பிட்ட வசதிகளை உருவாக்க அம்பேத்கர் திட்டமிட்டார். அவையெல்லாம் இன்று நனவாகி நிற்கின்றன.

அம்பேத்கர் பௌத்தம் ஏற்றது வெறும் மதமாற்ற நிகழ்வல்ல. அது சமூக விடுதலையின் ஓர் அடையாளமாகும். புத்தரின் புரட்சி எப்படி உலகையே மாற்றத்திற்கு உள்ளாக்கியதோ, உள்ளாக்கி வருகிறதோ அதேபோலவே அதே வழியில் அம்பேத்கர் செய்த புரட்சியானது, மானுட விடுதலைக்கு வித்திட்ட மகத்தான புரட்சி. மானுட இனம், அனைத்தையும், துக்கம் உட்பட, விட்டு விடுதலையாக வேண்டுமானால் புத்தர், திருவள்ளுவர், அம்பேத்கர் காட்டிய அறிவு (புத்த) வழியில் செல்வதே அனைவரின் கடமை. அதுவே பிறவிப் பெருங்கடலை நீந்த வைக்கும் அற வழியுமாகும்.

**மதமாற்றம் ஏற்படுத்திய விளைவுகள்:**
இந்தியாவின் உயிர்ப்பு என்ற ஒன்றை ஒற்றைச் சொல்லில் சொல்வதானால், அது புத்தரின் தம்மம் என்றே சொல்லமுடியும். அதைத் தமிழில் அறம் என்று திருவள்ளுவர் மொழிகிறார். ஒரு காலத்தில் பௌத்தத்தை அழித்த வைதீகர்கள் கூட இதைச் சொல்லத் தயங்குவதில்லை. என்னதான் சமணத்திலிருந்து கிளைத்ததாக 'அறம்' இருந்தாலும், கௌதம புத்தரால் வடிவமைக்கப்பட்ட நாணயமாக, அது எளிய மக்கள் எல்லோரிடமும் சேர்ந்தது. இதை இந்தியாவிலேயே முழுமையாக உணர்ந்தவரில் அண்ணல் அம்பேத்கரைத் தவிர வேறு அறிவாளியும், அரசியல்வாதியும் இல்லை.

அம்பேத்கருக்கு முன்னதாகவும், அவருக்கடுத்தும் தனிமனித வழியிலும், இயக்கக் கோட்பாட்டிலும், அரசியல் முறைகளிலும், கலைப் படைப்புகளிலும் புத்தரையும் அவரது அறத்தையும் போற்றி வளர்த்தவர்கள் தமிழ்நாட்டில் அயோத்திதாசப் பண்டிதரும், தந்தை பெரியாரும், அறிஞர் அண்ணாவுமே. அயோத்திதாசர் 'தமிழ் பௌத்தம்' என்ற புதிய பாதையை வகுத்தார்.

அயோத்திதாசர் காலத்திற்குப் பிறகு அவர் தோற்றுவித்த பௌத்த சங்கமும், பெரியாரின் சுயமரியாதை இயக்கமும் ஒன்றாக இயங்கிய காலமும் இருந்தது. புத்தர் விழாக்களில் கலந்து கொண்ட பெரியார், அண்ணல் அம்பேத்கருடன் பர்மாவில் நடைபெற்ற உலகப் பௌத்த சங்க மாநாட்டில் கலந்துகொண்டார்.

1940 களில், அரசியல் பயணமாக பம்பாய், டெல்லி, லாகூர் வரை சென்ற பெரியாரும், அண்ணாவும் காசி வரை சென்று வாரணாசி, புத்த கயாவுக்கும் சென்று வந்தனர். அங்கு புத்தர் சிலையைப் பார்த்து, "பார்ப்பனியத்தை விரட்டிய உங்கள் புரட்சியை வைதீகம் நாடு கடத்தி விட்டதே" என்ற மௌனமாக வினவுகிறார் அண்ணா. அதற்குப் புத்தரின் மௌனமான புன்னகையே பதிலானது. "வைதிகத்தின் வைரிகள்" காலந்தோறும் தோன்றுவார்கள் என்பதாகப் புத்தரின் புன்னகைக்குப் பொருள் கொள்கிறார் அண்ணா.

அந்தப் பொருளின் வடிவம் தான் பெரியாரும், அம்பேத்கரும். அந்த அறம்தான் அண்ணாவை வழிநடத்தியது. அவரது அரசியல் வெற்றிகளுக்கும், சாதனைகளுக்கும் அந்த அறமே காரணம்.

அதனால்தான் அண்ணல் அம்பேத்கர் 1956 ஆம் ஆண்டில் புத்த மதம் தழுவிய போது அவரை வரவேற்றுப் பாராட்டுகிறார்; வாழ்த்துகிறார்; வணங்குகிறார் அண்ணா. அதைத் திராவிட நாடு இதழில் (21.10.1956) இப்படி எழுதுகிறார் அண்ணா.

"டாக்டர் அம்பேத்கர் இந்து மதத்தின் உள்ளடக்கத்தை நன்கு கற்றிருப்பவர். அவர் கற்காத இந்து மதத் தொடர்புடைய வடமொழி, வேத ஆகம நூல்கள் இல்லை என்றே சொல்லலாம். இந்திய அரசியல் சட்டங்களை உருவாக்கக் கூடிய அளவிற்குச் சட்ட நூல் பயிற்சி பெற்றிருப்பவர்.

அத்தகைய ஒரு பேராசிரியர், இந்து மதத்தை உதறித் தள்ளிவிட்டு மூன்று லட்சம் மக்களுடன் புத்த நெறியை மேற்கொண்டார் என்பது சாதாரணமானவர்கள் இந்து மதத்தை வெறுத்து ஒதுக்கி விட்ட சம்பவம் போல் கருதக்கூடியது அல்ல.

டாக்டர் அம்பேத்கரின் மதமாற்றச் சம்பவம் உலக மக்களின் சிந்தனையைத் தூண்டத் தவறி விடாது. சட்டப்படி தீண்டாமை இந்தியத் துணைக் கண்டத்தில் ஒழிக்கப்பட்டுவிட்டது என்ற விதியைக் கொண்டுள்ள இந்திய அரசியல் சட்டம் அதற்குரிய விடையைத் தராது. உலக அமைதிக்குப் பாடுபடுவதாகக் கூறிவரும் நேருவின் நாட்டில், ஒரே நாளில் 3 லட்சம் பேர் இந்து மதத்தைத் துறக்கும் அளவிற்கு, இன்னமும் தீண்டாமையின் கொடுமை இருந்து வருகிறது என்றுதான் உலக மக்கள் முடிவு கட்டுவர்.

அந்தக் கருத்தை மாற்ற நேருவின் பஞ்சசீலப் பேச்சும், இந்திய அரசியல் சட்டச் சமரசப் பூச்சும், இந்தியத் தேசிய ஏடுகளின் தூற்றல் கணைகளும், பயனற்றவையாகும்.

தீண்டாமை, பாராமை, நெருங்காமை, பிறப்பினால் உயர்வு, தாழ்வு போன்ற மிகமிகக் கொடிய தொற்று நோய்க்கிருமிகள் குடியேறியுள்ள மாளிகை, தங்கத்தால் ஆக்கப் பட்ட அரண்மனையாக இருந்தாலும், டாக்டர் அம்பேத்கர் போன்றவர்கள் நீண்ட நாள் அங்கு வாழ ஒப்ப மாட்டார்கள். வெளியேறித்தான் தீருவர்.

டாக்டர் அம்பேத்கரின் இந்த மதமாற்றம் நல்லறிவாளர்கள் அனைவருடைய பாராட்டுகளுக்கும் உரியதாகும்." என்று கருத்தோவியம் தீட்டினார் அண்ணா.

நன்றி: புதிய கோடாங்கி

## 23 • வாழ்வை வளமாக்கும் வாசிப்புப் பழக்கம்!

• • • முனைவர். ஔவை அருள்

அண்மைக்காலமாக, நம்மிடையே புதிய நூல்களை வாங்கும் பழக்கமும், நூலகங்களில் நூல்களை எடுத்து வாசிக்கும் பழக்கமும் குறைந்து வருகின்றன. அறிவியல் வளர்ச்சியால் அச்சுத்துறையில் புதியதொரு புரட்சியே மலர்ந்தது. நம்மிடத்தில் உடனே அது தொடர்பான மிகப்பெரிய எதிர்பார்ப்பும் ஆர்வமும் வளர்ந்தன. ஆனால், அந்த மகிழ்ச்சி நிலையானதானதாக அமையவில்லை.

மின்னணு ஊடகம் வந்து அச்சு ஊடகத்தின் பயன்பாட்டைக் குறைத்தது. பெரும்பாலான செய்தித்தாள்களும், பருவ இதழ்களும் தொடர்ந்து நடைபோட முடியாமல் சோர்வடைந்துள்ளன. சில நிறுவனங்கள் அச்சிடும் பணியையே ஏறத்தாழ நிறுத்திவிட்டன. மக்களிடத்தில், வாசிப்புப் பழக்கம் குறைந்த அளவில்தான் இருந்து வருகிறது என்று பலர் கண்டுள்ளனர்.

வாசிப்புப் பழக்கம் குறைந்து வருவதற்கு சில காரணங்கள் உள்ளன. பெற்றோர்களுக்கு வீட்டில் புத்தகங்களை எடுத்துப் படிக்கும் பழக்கம் இல்லாததால், பிள்ளைகளும் அப்படியே அமைந்து விடுகின்றனர். இணையவழித் தோற்றங்களும் வாசிப்புப் பழக்கத்தை வற்றச் செய்துவிட்டன.

தொலைக்காட்சிப் பெட்டி ஒன்றே போதும் என்று பெரும்பான்மையானோர் கருதுகின்றனர். ஆனால், செய்தித்தாள்களுக்கும் இதழ்களுக்கும் மாற்றாக தொலைக்காட்சி அமைய முடியாது என்பதே உண்மை.

'உடலுக்கு உடற்பயிற்சி போலவே வாசிப்பு என்பது நம் மனதிற்கும் அறிவுக்குமான பயிற்சியாகும்' என்று ரிச்சர்ட் ஸ்டீல் என்பவர் கூறினார். வாசிப்பு ஒரு முழுமையான மனிதனை உருவாக்குகிறது" என்பது பிரான்சிஸ் பேகனின் கருத்தாகும். அனைத்துத் தகவல்களும் கிடைக்கும் ஒரே இடம் நூலகம். நூலகம் இவ்வுலகத்தை நம் கண்முன்னே கொண்டு வந்து நிறுத்தும்.

'புத்தகங்கள், வாழ்க்கை குறித்த நம் கண்ணோட்டத்தை முற்றிலும் மாற்றி, வெற்றி எனும் நெடிய பாதையை நோக்கி நம்மை அழைத்துச் செல்கின்றன. காலம் எனும் பெருங்கடலில் நம்மைக் கரை சேர்க்கும் கலங்கரை விளக்குதான் புத்தகங்கள்' என்றார் எட்வின் பெர்சி . 'பிறர் தன்னை ஏமாற்றும்போது, புத்திசாலி மனிதன் புத்தகங்களின் துணையை நாடுகிறான்' என்பது ஆண்ட்ரூ லாங்கின் கூற்றாகும்.

நமக்கு அவ்வப்போது ஏற்படும் பிரச்னைகளுக்குத் தீர்வு அளிப்பதற்கும், நம் பொழுதை நல்ல முறையில் கழிப்பதற்கும் புத்தகங்கள் உதவுகின்றன. நூல்கள்

வாயிலாக ஒருவர் பெறும் அறிவு அவரை பிறருடன் திறம்பட உரையாடச் செய்வதுடன், சமுதாயத்தில் அவருடைய நிலையை உயர்த்தவும் செய்கிறது. வாசிப்பு நம் அறிவுக்கு வளமூட்டுகிறது என்பதை வெளிப்படையாக நாம் காணலாம்.

எனவே முனைப்புடன் ஆர்வம் ததும்பப் படிப்பது மிகவும் அவசியமானதாகும். இயல்பான ஒரு பேச்சாளராக, உரையாடும் திறமை கொண்டவராக நாம் உருவாக வேண்டும். ஒருவர் தீவிர வாசிப்புப் பழக்கத்தைக் கொண்டிருக்க வேண்டும். பேருந்துகளிலும், தொடர்வண்டியிலும் புத்தகங்களைப் படிப்பது கண்களுக்கு கேடு விளைவிக்கும்.

சில நாட்கள், நமக்கு சோர்வுடைய நாளாகத் தோன்றும். நல்ல புத்தகங்கள், இந்த மனநிலையை மாற்ற உதவும். ஒரு திரைப்படத்தைப் பார்ப்பதைக் காட்டிலும், ஒரு புத்தகத்தைப் படிப்பதன் மூலம் நம் மனம் புத்துணர்வு அடையும். மேலும், நாம் படிப்பது சிறந்த புத்தகமாக அமையுமானால், அதனை எத்தனை முறை வேண்டுமானாலும் படிக்கலாம். தற்போது, அனைத்து வயதினருக்கும் ஏற்ற நூல்கள் ஏராளமாக உள்ளன.

மனிதர்களுக்கு மன அழுத்தம் கூடியுள்ள இன்றைய காலகட்டத்தில், புத்தக வாசிப்பு அவர்கள் மனத்திற்கு ஆறுதல் அளிக்கும். இங்கிலாந்தில் உள்ள சசக்ஸ் பல்கலைக்கழகம் நடத்திய ஆய்வின்படி, நாளொன்றுக்கு ஆறு நிமிடம் படித்தால், நம் மன அழுத்தம் 68 விழுக்காடு குறையும் என்று தெரியவந்துள்ளது.

புத்தகங்களை வாசிக்கும் பழக்கத்தால், நம் மூளை சுறுசுறுப்புடன் செயல்படுவதுடன், நினைவாற்றல் திறனும் அதிகரிக்கும். இதனால் மறதி நோய் ஏற்படாமல் தடுக்கப்படுகிறது.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே திருக்குறளில் இலங்கு நூல், நுண்ணிய நூல், உரைசான்ற நூல் என்று படிக்கும் நூல்களைப் பாராட்டிக் குறிக்கப்பட்டுள்ளது. தொடர்ந்து புதிய நூல்களை ஆர்வத்துடன் நாம் படிப்பதனால் நம் தனிமை, வெறுமை நீங்கி விடுகின்றன.

உலகமே நிலைகுலைந்து அழிந்த நேரத்தில் தன் தனிமையைப் போக்குவதற்காக திருவாசகத்தை சிவபெருமான் எடுத்துக்கொண்டார் என்று சுந்தரனார் கூறுகிறார்.
கடையூழி வரும் தனிமை கழிக்க அன்றோ அம்பலத்தின்
உடையான் உன் திருவாசகத்தில் ஒரு பிரதி கருதியதே (மனோன்மணீயம்)

'எனக்குத் தனிமை என்பதே தெரியாது; ஏனென்றால் என்னைச் சுற்றிலும் நிலையான நண்பர்கள் புத்தக வடிவத்தில் என்னோடு எப்போதும் உரையாடிக்கொண்டிருக்கிறார்கள் என்று இராபர்ட் சதே பாடியுள்ளார். பண்புள்ள நண்பனிடத்தில் பழகுவது ஒரு நூலைப் படிப்பது போல என்பது திருக்கு.

தமிழ்த்தாத்தா உ.வே.சா.வின் கைப்பிடித்து ஓர் இளைஞர் மாடிக்கு அழைத்துச்செல்லும்போது படிக்கட்டுகளைக் காட்டி 'படி' 'படி' என்றானாம். உ.வே.சா. சிரித்துக்கொண்டே, 'ஆம், படி, படி... படித்தால்தான் மேலே செல்லலாம்' என்றாராம்.

தன் வரலாற்று நூல்களைப் படிப்பது மிகவும் பயனளிக்கும். அவை ஒருவரின் வாழ்வில் புதிய இலக்குகளை உருவாக்கும். அவற்றைப் படிப்பதன் மூலம், வாழ்ந்து மறைந்த அறிஞர்களைப் பற்றி பல அரிய செய்திகளை அறிந்துகொள்ளலாம்.

அனைவராலும் அயல்நாட்டுப் பயணம் மேற்கொள்ள இயலாது. ஒரு பயண நூல், பல நாடுகளைப் பற்றிய அரிய பல தகவல்களை நமக்கு அளிக்கும். பல காட்சிகளை நம் கண்முன்னால் கொண்டு வந்து நிறுத்தும்.

வேண்டாத நடைமுறைகள் நிறைந்துள்ள இன்றைய நிலையில், புத்தகங்களைப் படிக்கும் பழக்கம் ஒன்றே நம் வாழ்வை வளம்பெறச் செய்யும். வாசிப்புப் பழக்கம் வாழ்க்கை குறித்த நம்பிக்கையளிக்கும் சிந்தனையை உருவாக்கும். பெருந்தலைவர்களின் வாழ்க்கை நம்முள் ஒரு தாக்கத்தை ஏற்படுத்தும்.

வாசிப்புப் பழக்கம் நம் வாழ்க்கையை மாற்றி நமக்கு புதுவித மகிழ்ச்சியளிக்கும். சிறந்த வாழ்க்கை முறை அமைய, புத்தகங்களை வாசிக்கும் பழக்கம் இன்றியமையாததாகும்.

வாசிப்பு என்பது நாம் நாளும் செய்யும் உடற்பயிற்சி போன்றது மட்டும் இல்லை. நம்மை சிறப்பான வாழ்க்கையை நோக்கி அழைத்துச் செல்லும் ஒரு தெளிவான பழக்கமாகும். வாசிப்புப் பழக்கம் இல்லாததால், நாம் எவற்றையெல்லாம் இழந்தோம் என்று பலர் அறிவதில்லை.

நூல்களின் விலை உயர்வால், வாசிக்கும் பழக்கம் குறைந்து வருகிறது என்று சிலர் கூறலாம். புத்தகங்களுக்கான தேவை குறைவதால், சில புத்தகங்களின் விலை உயர்ந்துள்ளது என்று மாற்றிச் சொல்லவும் இடமுண்டு.

எனினும், சில நல்ல புத்தகங்கள், உரிய விலையில் கிடைக்கின்றன. நூலகங்களையும் நாம் நாடலாம். பிறர் படித்த நல்ல புத்தகங்களையும் குறைந்த விலையில் பெறலாம் . அயல்நாட்டு நூல்களின் இந்தியப் பதிப்பு குறைவான விலையில் விற்கப்படுகின்றன.எனினும், சிறிய நகரங்களிலும், சிற்றூர்களிலும் உள்ள பள்ளி நூலகங்கள், தகுதியான நூலகர்களின்றி பெயரளவில் மட்டுமே இயங்குகின்றன. இதனால், மாணவர்களுக்கு, வகுப்பில் நடத்தப்படும் பாடங்கள் குறித்த கூடுதல் தகவல்களை நூலகத்தில் திரட்ட வாய்ப்பில்லாமல் போகிறது.

‘கல்வியறிவில் நாம் மேலும் உயர்ந்ததாக வேண்டும். வெற்றிகரமான எழுத்தறிவுத் திட்டங்களால், மூத்த வயதினரிடையே எழுத்தறிவு நம் நாட்டில் அதிகரித்துள்ளது. ஆயினும், சமுதாயத்தில் உள்ள அனைத்துக் குழந்தைகளுக்கும் கல்வி அளிப்பதற்கான தேவை பெரிதாக உயர்ந்துள்ளது.

மேலும், ஆக்கப்பூர்வமான சமுதாய மாற்றத்திற்கான நம் பங்களிப்பையும் அதிகரித்துள்ளது’ என்று தேசியக் கல்விக் கொள்கை குறிப்பிட்டுள்ளது.

ஒரு தலைமுறையில் முதன்முதலாகப் படிப்பவருக்குப் பொதுவாக படிக்கும் பழக்கம் குறைவாக இருக்கும். சமூகக் கல்வித் திட்டங்களுக்கான வெற்றி, வாசிப்புப் பழக்கத்தையே சார்ந்துள்ளது. வாசிப்புப் பழக்கம் குறைந்தால் மனிதர்களின் வாழ்க்கைத் தரமும் குறையும்.

தொழில் நுட்ப வளர்ச்சியால், புத்தகம் வாசிக்கும் பழக்கத்தை முற்றிலுமாக அழிக்க முடியாது. மின்னணு புத்தகங்களும் தற்போது பயன்பாட்டில் உள்ளன. பெற்றோர்கள் கல்வியறிவு பெற்றவர்களாக இருந்து, கல்வி முறை நூலகம் சார்ந்ததாக இருந்தால் மட்டுமே இன்றைய தலைமுறையினரிடம் புத்தகங்களை வாசிக்கும் பழக்கத்தை உருவாக்க முடியும். அப்படிச் செய்வதுதான் சமுதாயத்திற்கான முன்னேற்றமாக மலரும்.

நான் தாய்வான் நாட்டிற்குச் சென்றிருந்த பொழுது, அங்கிருந்த நூலகத்திற்குச் சென்றேன். அப்போது நேரம் இரவு பதினொரு மணி. அந்நேரத்திலும் பல இளைஞர்கள் ஆர்வமுடன் புத்தகங்களைப் படித்துக்கொண்டிருந்ததைக் கண்டு நான் வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தேன்.

என்னை அழைத்துச் சென்ற நண்பர் சொன்னார், ‘உலகத்திலேயே இந்த நூலகம்தான் 24 மணி நேரமும் இயங்கிக் கொண்டிருக்கும்’. நாட்டின் வளத்திற்கு பொருளாதாரம் மட்டுமன்று, நூலாதாரமும் இன்றியமையாதது.

கட்டுரையாளர்:
முனைவர் ஔவை அருள்
இயக்குநர், மொழிபெயர்ப்புத்துறை, தமிழக அரசு.

நன்றி: தினமணி

## 24 • வாசிப்பு: நான்கு எழுத்து மந்திரம்

• • • *முனைவர் ஸ்ரீரோகிணி*



வேட்டையாடி மாமிசத்தைச் சாப்பிட்டுக் கொண்டிருந்த வேளையில் நெருப்பைப் பயன்படுத்தத் தொடங்கிய காலத்தில் வாழ்ந்த மனிதர்கள் முதலில் எப்போது பேசத் தொடங்கினார்கள்? மனிதர்கள் மட்டுமே மொழியைப் பயன்படுத்தும் உயிரினமாக இருக்கிறார்கள். விலங்குகளிடம் இருந்து நம்மை தனித்துவமாக்கிக் காட்டுவதும் அதுதான், உரையாடுவதற்கான இந்தத் திறன்தான் பரிணாம வளர்ச்சியில் முக்கியமான நிலைமாறுதலாகக் கருதப்படுகிறது. வாழ்க்கை நிலையில் மாறுதலை ஏற்படுத்தியதில் மற்றவற்றைக் காட்டிலும், உண்மையான அம்சம் இதுதான்.

கதைகளை விவரித்துக் கூறுவதற்கும், சம்பிரதாயங்களை உருவாக்குவதற்கும் நிறைய மொழி அறிவு நமக்குத் தேவைப்பட்டது என்று பேராசிரியர் டாலர்மேன் கூறுகிறார். பேசுவதற்கு ஆரம்பக்கட்ட முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டதைத் தொடர்ந்து, பல நூறாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் அநேகமாக அதற்கான முயற்சிகள் உருவாகியிருக்க வேண்டும். இந்தப் பேரிடர்க் காலத்தில் காகிதம் புரட்டும் சதவீதம் அதிகரித்துள்ளது. திரும்பப் பழைய நிலைக்கு வந்துள்ளது வழக்கொழிந்து போன பழைய பழக்கங்களில் ஒன்றான புத்தக வாசிப்பும். மேலறிஞர்கள் பலர் ஆய்வின்படி இன்னும் பல இடத்தில் இளைய தலைமுறையினர் இந்த வாசிப்புத் திறனை அதிகரிக்கவில்லை என்றே கூற வேண்டும்.

நமக்குக் கிடைக்கும் நாட்குறிப்பு புத்தகத்தில் முகவரிகள் தொலைபேசி எண்கள் இவற்றோடு நம் அன்றாட நிகழ்வுகளை நினைவலைகளாக எழுதும் பழக்கம் அடியோடு மறக்கப்பட்டு விட்டது. நம் நினைவலைகளைப் பதிவு செய்வது வேண்டாம் நமக்கு வேண்டியவர்களின் முகவரிகள் தொடர்பு எண்கள் இவற்றை எழுதி வைக்கும் பழக்கம் இன்றும் தேவைப்பட்டாலும் கைத்தொலைபேசியில் தொடர்பு எண் இருந்தால் போதும் மற்ற விபரங்கள் அவ்வப்போது கேட்டுப் பெற்றுக் கொள்ளலாம் என்று யாரிடமும் எந்த விபரங்களும் இருப்பதில்லை. தொலைபேசி தொலைந்து விட்டது என்றால் அவருடன் அத்தனை தொடர்புகளும் தொலைந்து போய்விடும்.

நாற்பது ஐம்பது வயதைத் தாண்டியவர்களுக்குப் புத்தகம் வாசித்தல் என்பது இயல்பான ஒன்று 1960 மற்றும் 70களில் பிறந்தவர்களுக்கு வெளியில் சென்று விளையாடுவது வானொலி கேட்பது,தொலைக்காட்சி பார்ப்பது, அதுவும் குறிப்பிட்ட சில நேரங்களுக்கு மட்டும் திரைப்படங்கள் பார்ப்பது, இவற்றோடு புத்தகம் படிப்பது என்பது அதிகச் செலவில்லாத பொழுதுபோக்கு. ஆனால் அப்போது பெற்றோர்களுக்கு நம் பிள்ளைகள் கண்ட புத்தகங்களைப் படித்துக் கெட்டுப் போய்விடுவார்கள் என்ற மற்ற பொழுது போக்குகளுக்குக் கொடுத்த அனுமதி புத்தகம் படிக்கும் போது கொஞ்சம் தணிக்கையோடு இருக்கும். பள்ளிகளிலும் பொது இடங்களிலும் வீட்டிலும் புத்தகங்கள் சஞ்சிகைகள் போன்றவை குழந்தைகளுக்கும் பதின்ம வயதினருக்கும் ஆயிரம் தடைகளுக்குப் பிறகே கிடைக்கும். அவர்களுக்கு என்ன தேவை என்பதைத் தீர்மானிப்பது இவர்களை. குழந்தைகள் மற்றும் பதின்ம வயதினருக்கான கதைகள் தமிழில் மிகக் குறைவே.

சில குழந்தை பத்திரிகைகள் இருந்தன ஆனால் இவற்றின் மூலம் குழந்தைகளுக்கு என்ன கிடைத்தன என்று கேள்வி எழுகிறது. அப்போதைய குழந்தைகளின் உலகம் பேதைமையும் அப்பாவித்தனமும் நிறைந்தது அவர்களுக்கு எது நன்மை தரும் இது தீமை என எடுத்துச் சொல்லும் நீதிநெறி கதைகள் வாழ்க்கையில் மாறாத துன்பங்களுக்குப் பின் மகிழ்ச்சியான வாழ்க்கை பெரும் அனாதைச் சிறுவர்கள், வஞ்சிக்கப்பட்ட இளவரசிகள், அழகிய பெண்கள், இடையில் உதவி செய்யும் தேவதைகள், இறுதியில் அவளைக் காப்பாற்றி திருமணம் செய்துகொள்ளும் ஆண், அழகான இளவரசன் இவை குழந்தைகளுக்கு மட்டுமல்ல பெரியவர்களுக்கும் பிடித்த கதைகள். பல கதைகள் நாவல்கள் நாடகங்கள் திரைப்படங்கள் என இந்தக் கரு வெவ்வேறு சூழல்களில் வடிவங்களில் இன்றும் வந்து கொண்டிருக்கின்றன.

**எண்ணும் எழுத்தும் கண் எனத்தகும்:**

மனித உறுப்புகளில் கண் சிறப்பிடம் பெறுகிறது. அந்தக் கண்ணுக்கு இணையாகக் கல்வியை ஔவையார் குறிப்பிட்டுள்ளார். நமது முகத்தில் இரண்டு கண்கள் இருக்கின்றன. அந்த இரண்டு கண்களுக்கு இணையாகக் கருதத் தக்கவை எண்ணும் எழுத்தும். அப்படி சிறுவயதில் ஆசிரியர்கள் மற்றும் பெற்றோர்கள் வலியுறுத்தினால் தொடங்கப்படும் வாசிப்புப் பழக்கம் வயது ஆக ஆக இயல்பான ஆர்வத்தினால் தொடரவேண்டும். ஆனால் நெருக்கடியான கல்விச்சூழல் புத்தகங்கள் படிப்பதை விட அதிகச் சுவாரஸ்யங்கள் தரும் ஊடகங்கள், தொலைக்காட்சி, இணையம், கைத்தொலைபேசி முகநூல், படவரி (இன்ஸ்டாகிராம்) போன்ற பல ஊடகம் சார்ந்த வசதிகளினால் பொழுது முழுவதும் வேறு எதற்குமே நேரம் இல்லாமல் போய்விடுகிறது.

நகைச்சுவைக்காகச் சொன்னாலும் நம் அக்கம்பக்கத்தினர் யார் என அறியாது, அமெரிக்காவில் உள்ள முகநூல் நண்பர்களுக்கு வணக்கம் வாழ்த்தும் சொல்வதுதான் இன்றைய நிலைமை. வாசிப்பது மற்றும் நண்பர்களுடன் ஆழ்ந்த நட்பு கொள்வது போன்றவை இல்லாமல் மேம்போக்கான நட்பு தேவை காண வாசிப்பு என வாழ்க்கை தொடர்கிறது. ஆனால் உளவியலாளர்களும் சமூக

ஆர்வலர்களும் வாழ்க்கை அனுபவங்கள் பெற்று பெரியவர்களும் மீண்டும் மீண்டும் வலியுறுத்திச் சொல்லும் இரண்டு விடயங்கள், படிப்பதற்கு நல்ல புத்தங்கள் மனம் விட்டுப் பேசி பழக நண்பர்கள் கண்டிப்பாக மனித வாழ்க்கைக்கு வேண்டும், இவை இரண்டும் தனிமையைப் போக்கும் அதுமட்டுமல்லாது வாழ்நாள் இறுதிவரை துடிப்போடு வாழ்க்கையை வாழவைக்கும்.

மருத்துவர்கள் அறிவியலாளர்கள் மேலாண்மைத் துறையில் உள்ளவர்களுக்கு வாசிப்பு என்பது வாழ்நாள் முழுக்க தொடரும் என்றாலும் அவர்கள் வாசிப்பு தொழில் சார்ந்து இருக்கும். கல்வித்துறையில் மொழி கற்பிக்கும் பேராசிரியர்கள் ஆசிரியர்கள் தங்களுக்கு வரையறுக்கப்பட்ட பாடத்திட்டத்தைத் தாண்டி மாணவர்களுக்கு வாசிப்பின் சுவையைச் செய்தாலும் அவர்களுக்குத் தெரிந்த இலட்சியவாத இலக்கியங்கள் கதைகள் போன்றவற்றோடு அதை நிறுத்திக் கொள்கிறார்கள். புனிதப் பிம்பங்களாக வலம் வரும் கதை நாயகர்களைப் படிப்பதற்குத் தற்கால இளைஞர்களுக்குச் சலிப்பு ஏற்படுகிறது. அவர்களைச் சுற்றி நடப்பதைப் பார்த்து பலவற்றையும் அறிந்து கொள்கின்றனர் அவர்களுக்கு லட்சிய வாதங்களை முன்வைக்கும் இலக்கியங்கள் போலித்தனமாக தோன்றுகிறது.

நவீனகால இடையூறுகளைத் தாண்டி படிக்க முற்படும் இளைஞர்களுக்கு நாம் எத்தகைய வாசிப்பை பழக்கப்படுத்த வேண்டும் என்பது ஒரு சவாலாகவே இருக்கிறது. வாழ்க்கையில் படிப்பதற்கும் அவற்றைச் சுவைப்பதற்கும் ஏராளமான புத்தகங்களும் அவை சார்ந்த அனுபவங்களும் நிறைந்து கிடக்கின்றன. இவற்றைப் படித்து உணர்ந்து முடிக்க ஒரு வாழ்நாள் போதாது.வாசிப்பு இந்த நான்கு எழுத்து மந்திரம் உலகத்தையே திருப்பிப் போடும் வல்லமை மிக்கது. வாசிப்பை நேசித்துச் சுவாசிப்போம்.

நன்றி: பிரான்சு தமிழ் நெஞ்சம் மாத இதழ்



தமிழ்ப் பணிச் செம்மல்.முனைவர் ஸ்ரீரோகிணி
உலகத் தமிழ் ஆராய்ச்சியாளர்
தலைவர் - SB,TRG
துபாய், அமீரகம்
srirohini.mr@gmail.com

## 25 • ஆதி இந்தியர்கள் - வாசிப்பும் விமர்சனமும்

• • • முனைவர் க.சுபாஷிணி

**நூல்: ஆதி இந்தியர்கள்**
**நூலாசிரியர்: டோனி ஜோசஃப்**
**வாசிப்பும் விமர்சனமும்: முனைவர்.க.சுபாஷிணி**




பொதுவாகவே நான் வாசிக்கின்ற நூல்களில் வரலாற்றிற்கும் சமூகத்திற்கும் மிக முக்கியமானதாக நான் கருதுகின்ற நூல்களைப் பற்றி சிறு விமர்சனமாக அந்த நூல் கூறும் செய்திகளை எழுதி வைத்து, நூல் எவ்வகையில் எனது சிந்தனையைத் தாக்கியிருக்கின்றது என்ற கருத்தையும் இணைத்து அதன் வெளிப்பாடாக தோன்றுகின்ற கருத்துக்களையும் பதிவது வழக்கம். டோனி ஜோசஃப் எழுதி ஆங்கிலத்தில் வெளிவந்த நூல், தமிழ் மொழிபெயர்ப்பாக 'ஆதி இந்தியர்கள்' என்ற தலைப்பில் வெளிவந்தது. சென்ற ஆண்டு வாசித்து முடித்த பின்னர் உடனே நூல் சொல்லும் சில தகவல்களைக் குறிப்பாக ஒரு விமர்சனம் எழுத வேண்டும் என நினைத்திருந்தேன். காலம் தள்ளிப் போய்விட்டது. அதனால் என்ன? இப்போது சற்று நேரம் ஒதுக்கி எழுதலாம் என்று என்று நினைக்கிறேன்.

இன்று தமிழகத்தில் நடைபெறுகின்ற அகழாய்வுகள் - கீழடி, ஆதிச்சநல்லூர்-சிவகளை, கொற்கை, பொற்பனைக்கோட்டை, கொடுமணல் என மிகச் சிறப்பாகப் பணிகள் முன்னெடுக்கப்படுகின்றன. இத்தகைய தொல்லியல் அகழாய்வுகளில் கிடைக்கின்ற பலப்பல சான்றுகள் தமிழ்நாட்டின் மனிதகுல நாகரிகத்தை

மேன்மேலும் விரிவாகவும் ஆழமாகவும் பார்க்கும் பார்வையை நமக்கு இதனால் சாத்தியப்படுத்துகின்றன. நூலுக்குள் செல்வதற்குள் நம்மைச் சுற்றி அடிக்கடி எழுப்பப்படுகின்ற சில கேள்விகளைக் கவனிப்போமே.

- இந்தியாவில் நீண்டகாலமாக வாழ்ந்த மனிதர்கள் யார்?
- குறிப்பாக தென்னிந்தியப் பகுதிகளில் வாழ்ந்த மனிதர்கள் இங்கேயே தோன்றியவர்களா? அல்லது வேறு நிலப்பகுதிகளிலிருந்து வந்து குடியேறியவர்களா?
- உலகின் மூத்த குடி எது?

என்பது போன்ற பலப்பல கேள்விகள் மீண்டும் மீண்டும் எழுந்து நம் அறிவையும் கவனத்தையும் தாக்கிக் கொண்டிருக்கின்றன.

இந்த மேற்குறிப்பிட்ட கேள்விகளைக் கேட்க முற்படும் போது மனிதகுலத்தைப் பற்றி அறிவியல் சான்றுகள் கூறும் செய்திகளைச் சற்றேனும் அறிந்திருக்க வேண்டியது அவசியமாகின்றது.

இன்று மனிதர்கள் எனச் சொல்லிக்கொள்ளும் நாம் அனைவரும் ஹோமோ சேப்பியன் சேப்பியன் வகை இனம். அது ஜப்பானியராக இருக்கட்டும், ஜெர்மானியராக இருக்கட்டும், தமிழராக இருக்கட்டும், செவ்விந்தியராக இருக்கட்டும், ஆஃப்கானிஸ்தான்காரர், நியூஸிலாந்து, அமெரிக்கர் என யாராயினும்.. அவர்கள் இந்த ஹோமோ சேப்பியன் சேப்பியன் வகை இனம் தான்.

இந்த இனம் மட்டும்தான் மனித இனமா என்றால்... இல்லை என்கிறது உலக அறிவியல், அகழாய்வு, மரபணுவியல் ஆய்வுகள். வேறு என்னென்ன இனங்கள் இருந்தன எனத் தேடி ஆராய்ந்து பார்க்கும் போது மேலும் சில மனித இனங்கள் இந்தப் பூமியில் வாழ்ந்து அழிந்து போன செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன. உதாரணமாக Homo erectus, Homo floresiensis, Homo habilis, Homo heidelbergensis, Homo neanderthalensis போன்றவை இவற்றுள் அடங்கும். ஜெர்மனியில் சில ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்த்தப்பட்ட அகழாய்வில் Homo steinheimensis என்ற ஒரு வகை இனத்தையும் ஆய்வாளர்கள் தொல் அகழாய்வில் கண்டு பிடித்தனர். ஆனால் இவ்வகை அனைத்துமே முற்றிலும் அழிந்து விட்டன.

வாழ்க்கை என்பது, அது தாவரமாகட்டும், நுண்கிருமியாகட்டும், மிருகங்களாகட்டும்... அதன் பரிணாம வளர்ச்சியில் வந்த நம் மனிதகுலமாகட்டும்... எல்லோருக்குமே வாழ்க்கை ஒரு போராட்டம் தான்!

இந்த மனிதகுல வாழ்க்கை போராட்டத்தில் எஞ்சி நிற்பது ஹோமோ சேப்பியன் சேப்பியன் வகை மட்டுமே. ஆகவே ஆய்வாளர்கள் இந்த மனித இனமாகிய நம்மை நவீன மனிதர்கள் என்றும் அடையாளப்படுத்துகின்றனர் (Modern Human).

இந்த நவீன மனிதர்கள் இந்த உலகில் தோன்றிய காலமாக 160,000லிருந்து 90,000 ஆண்டுகள் காலகட்டம் என்றும் அவர்கள் தோன்றிய நிலப்பகுதி ஆப்பிரிக்கா என்றும் ஆய்வுகள் தெரிவிக்கின்றன. இந்த அறிமுகத்துடன் நூல் வாசிப்பிற்குள் செல்வோமே..!

--- 2 ---

நூலின் பார்வை முழுமையாக இன்றைய நில எல்லை அடிப்படையிலான இந்திய தொல் வரலாற்றில் நவீன மனிதர்கள் யார்? அவர்கள் எங்கிருந்து வந்தார்கள்? எப்படி நிலை பெற்றார்கள் என்ற செய்தியைக் கூறுகிறது.

நான்கு அத்தியாயங்கள் நூலில் உள்ளன. அவை 1) முதல் இந்தியர்கள் 2) முதல் உழவர்கள் 3) முதல் நகரவாசிகள் அதாவது ஹரப்பர்கள் 4) இறுதியாகக் குடியேறியவர்கள்-ஆரியர்கள் என்ற நான்கு மைய விசயங்களை ஆராய்கின்றன. இதற்குத் துணையாக இந்திய தொல் வரலாற்றில் நவீன மனிதர்களைப் பற்றிய ஒரு சுருக்கமான காலவரிசை விளக்கமும், முடிவுரையாக எப்படிச் சரியான கோணத்தில் வரலாற்றைப் பார்ப்பது என்ற வழிகாட்டுதலும், பின்னிணைப்பாக கங்கர்-ஹக்ரா பள்ளத்தாக்குச் செய்திகளும் வழங்கப்பட்டிருக்கின்றன.



நூலின் தொடக்கப்பகுதிகள் கீழ்க்காணும் செய்திகளை விவரிக்கின்றன.

ஆப்பிரிக்காவிற்கு வெளியே ஹோமோ சேப்பியன் சேப்பியன் என்ற நவீன மனிதன் வெளியே மேற்கொண்ட வெற்றிகரமான மனித இடப்பெயர்ச்சி இன்றைக்கு ஏறக்குறைய 70 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது. இவர்களே இன்று உலகம் முழுவதும் பரவி இருக்கின்ற மனிதர்கள். ஆப்பிரிக்காவிலிருந்து இடம் பெயர்ந்தாலும் இன்று பல்வேறு இனங்களாக வளர்ச்சி கண்டிருக்கிறது இந்த ஹோமோ சேப்பியன் சேப்பியன் மனித குலம்.

அப்படி வெளியேறியவர்களில் இன்றைக்கு ஏறக்குறைய 65 ஆயிரம் ஆண்டுகள் காலகட்டத்தில் அவர்களில் சிலர் இன்றைய இந்தியாவை வந்தடைந்தனர். இவர்கள் ஏற்கனவே இருந்த ஏனைய ஹோமோ வகை மனிதர்களை எதிர் கொண்டிருந்தாலும் அந்த மனித குலம் அழிந்து ஹோமோ சேப்பியன்ஸ் சேப்பியன்ஸ் வகை மனிதகுலம் மட்டுமே இன்று நிலைபெற்றிருக்கிறது.

ஏறக்குறைய அதே காலகட்டத்தில் அதாவது 60 ஆயிரத்திலிருந்து 40 ஆயிரம் ஆண்டுகள் காலகட்டத்தில் ஆப்பிரிக்காவிலிருந்து வெளியேறியவர்கள் ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் பல்வேறு பகுதிகளில் நகரத் தொடங்கி வாழத் தொடங்கினர். ஏறக்குறைய 40 ஆயிரம் ஆண்டுகள் காலகட்டத்தில் ஐரோப்பாவில் இருந்த ஹோமோ நியாண்டர்தால் வகை மனிதகுலம் ஹோமோ சேப்பியன் தாக்கத்தால் வலுவிழந்து பூண்டோடு அழிந்தார்கள்.

ஏறக்குறைய 40 ஆயிரத்திலிருந்து 20 ஆயிரம் ஆண்டுகள் காலகட்டத்தில் இந்தியாவிற்குக் குடிபெயர்ந்த நவீன மனிதர்கள் முதல் இந்தியர்கள் என அழைக்கப்படுகின்றனர். நுண்கல் தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தத் தொடங்கி படிப்படியாக மத்திய மற்றும் கிழக்குப் பகுதி இந்தியாவில் மிக வேகமாக மக்கள் தொகை பெருக்கத்தை உருவாக்கினர்.

கிமு 5500 லிருந்து 2600 வரையிலான காலகட்டத்தை முந்தைய ஹரப்பா காலகட்டம் என்றும்,
கிமு 2600 லிருந்து 1900 வரையிலான காலகட்டத்தை முதிர் ஹரப்பா காலகட்டம் என்றும்
வரலாற்று ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றார்கள். ஆப்பிரிக்காவிலிருந்து சீனாவுக்கு இடம்பெயர்ந்தவர்கள் பின்னர் அங்கேயே தங்கி மக்கள் தொகை அதிகரித்ததால் கிமு 2000 காலகட்டத்தில் தொடர்ந்து இரண்டு முறை மத்தியத்தரைக்கடல் பகுதிக்கும் சிந்து சமவெளிப்பகுதிக்கும் இடைப்பட்ட இடத்தில் பெரும் எண்ணிக்கையில் வெவ்வேறு இடங்களுக்கு இடம்பெயர்ந்தார்கள்.

இதே காலகட்டத்தில் அதாவது கிமு 2000 லிருந்து கிமு1000 காலகட்டத்தில் மத்திய ஆசியாவிலிருந்து ஸ்டெப்பி புல்வெளி பகுதிகளைச் சேர்ந்த மேய்ப்பாளர்கள் பலமுறை தெற்காசியப் பகுதிகளுக்கு வந்தடைந்தனர். 17.6.2017இல் 'தி இந்து'

நாளிதழில் வெளிவந்த 'How Genetics is Settling the Aryan Migration Debate' என்ற தலைப்பிலான நூலாசிரியரின் கட்டுரை 'தங்களை ஆரியர்கள் என்று அழைத்துக் கொண்ட இந்திய-ஐரோப்பிய மொழிகளைப் பேசிய மக்கள் ஏறத்தாழ 4000 ஆண்டுகளுக்கு முன்பு மத்திய ஆசியாவிலிருந்து இந்தியாவிற்குள் வந்தனர் என்ற கோட்பாட்டிற்கு டிஎன்ஏ சான்றுகள் எப்படி ஆதரவளிக்கின்றன என்பதை விளக்கியிருப்பதையும் இவ்வாய்வு 2018ம் ஆண்டு மார்ச் மாதத்தில் உலகெங்குமுள்ள 92 அறிவியலறிஞர்கள் இணைந்து எழுதி வெளியிட்ட 'Genomic Formation of South and Central Asia' எனும் ஆய்வறிக்கை உறுதி செய்திருப்பதையும் நூலாசிரியர் குறிப்பிடுகின்றார்.

கிமு1900 லிருந்து 1300 வரை பிந்தைய ஹரப்பா காலகட்டம் என அழைக்கப்படுகின்றது. நீண்டகால வறட்சி மக்கள் பல்வேறு பகுதிகளுக்கு இடம் பெயரக் காரணமானது; ஹரப்பா நாகரிகம் மறைவிற்கு இதுவும் ஒரு காரணமானது.

மேற்கூறப்பட்டுள்ள தகவல்களை நூலாசிரியர் பட்டியலாக்கி இன்னும் விரிவாக அறிமுகப் பகுதியில் வழங்குகிறார். இது ஆப்பிரிக்காவிலிருந்து நவீன மனிதகுலம் வெளியேறி இடம் பெயர்ந்து பல்வேறு பகுதிகளுக்கு இடம் பெயர்ந்த பல்வேறு இனங்களாக பரிணாம வளர்ச்சி பெற்ற நிகழ்வுகளை வாசிப்போர் புரிந்து கொள்ள எளிமையாக அமைகிறது.

இடம்பெயர்ந்து கொண்டே இருப்பது மனித குலத்தின் இயல்பு. அதன் வெளிப்பாடாகத்தானோ என்னவோ... இன்றும் கூட நாம் ஓரிடத்தில் கல் போலக் கிடக்காமல் மற்றோரிடத்திற்குப் பயணம் சென்று கொண்டேயிருக்கின்றோம்.

--- 3 ---

பொதுவாகவே மனித குலம் (ஹோமோ) என்று நாம் கூறும் போது நமது சிந்தனையில் தோன்றுவது உருவத்தால் நம்மை ஒத்த, ஆனால் இன்றைக்குப் பன்னெடுங் காலங்களுக்கு முன்னர் வாழ்ந்த நம் மூதாதைய தொல் மனிதர்கள் என்ற எண்ணம்தான். ஆனால் இது உண்மை அல்ல. இந்தப் பூமியில் வெவ்வேறு மனித குலங்கள் வாழ்ந்திருக்கின்றன. ஆனால் இப்போது எஞ்சியிருப்பது நவீன மனிதர்கள் என நாம் கூறும் ஹோமோ சேப்பியன்ஸ் சேப்பியன்ஸ் என்ற வகை மனிதர்கள் தான்.

நமது மூதாதையர்கள் இந்த உலகில் தோன்றி நகர்ந்து இனப்பெருக்கம் செய்து ஏனைய மனித குலத்தை அழித்து ஒழித்து வெற்றிகரமாக இந்த இனத்தைத் தக்க வைத்துக் கொண்டனர். இந்த நவீன மனிதர்களுக்கு முன்னரே வாழ்ந்தவர்களைப் பற்றியும் சில தகவல்களை இந்த நூல் கூறுகிறது.

உதாரணமாக ஹோமோ ஹேபிலிஸ், ஹோமோ எரெக்டஸ், ஹோமோ நியாண்டர்தாலென்சிஸ் போன்ற மனிதர்கள் இந்த உலகில் வாழ்ந்து முற்றிலுமாக

அழிந்து விட்டனர். இவர்களுள் ஹோமோ எரெக்டஸ் வகையினர் பெரும்பாலும் ஆப்பிரிக்கா மற்றும் ஆசியப் பகுதிகளில் வாழ்ந்த தொல் மனித இனம். ஹோமோ நியாண்டர்தாலென்சிஸ் வகை மனிதர்கள் பெரும்பாலும் ஐரோப்பாவிலும் தென்மேற்கு ஆசியாவிலும் மத்திய ஆசியாவிலும் வாழ்ந்தவர்கள். இப்படி மேலும் சில வகைகள் உண்டு. மேலும் வெவ்வேறு வகை மனித இனங்கள் வாழ்ந்ததற்கான தடையங்களும் அவ்வப்போது தொல்லியல் அகழாய்வுகளில் நமக்குத் தெரிய வருகின்றன.

கடந்த நூறு ஆண்டுகளில் படிப்படியாக மரபணுவியல் ஆய்வு என்பது பெரும் வளர்ச்சியைக் கண்டுள்ளது. கணினித் தொழில்நுட்ப வளர்ச்சியும் இந்த ஆய்வுகளுக்குத் துணை நிற்கின்றன. குறிப்பிடத்தக்க வகையில் கடந்த 30 ஆண்டுகளில் விரிவான ஆய்வுகள் உலகமெங்கிலும் தொல் மனிதர்கள் தொடர்பாக நடத்தப்பட்டுள்ளன. ஹோமோ சேப்பியன் சேப்பியன் வகை மனிதரான நமது மூதாதையர்கள் கிட்டத்தட்ட மூன்று லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு பரிணாம வளர்ச்சி அடைந்து இன்றைய ஆப்பிரிக்கப் பகுதியில் வாழ்ந்து, இன்றைக்கு ஏறக்குறைய 70 ஆயிரம் ஆண்டுகள் காலகட்டத்தில் இடம்பெயர்ந்து வெளியேறி இனப்பெருக்கத்தின் வழியாக இன்றைய உலக மாந்தர்களை உருவாக்கியிருக்கின்றார்கள்.



நியாண்டர்தால் மனிதர்கள் ஐரோப்பாவில் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்திருந்தார்கள். அவர்களது எச்சங்கள் இன்று ஐரோப்பாவின் ஜெர்மனி போன்ற பல நாடுகளில் குகைகள் உள்ள பகுதிகளில் ஏராளமாகக் கிடைக்கின்றன. இந்த நியாண்டர்தால் வகை மனிதர்களுடன் நமது மூதாதையர்களான ஹோமோ

சேப்பியன் சேப்பியன் வகை மனித குலம் புணர்ச்சிக் கலப்பில் வெற்றி அடைந்திருக்காது என்ற எண்ணம் நீண்ட காலம் இருந்தது. ஆனால் இந்த எண்ணம் 2010ஆம் ஆண்டில் வெளிவந்த ஆய்வறிக்கைகள் வழி மாற்றம் கண்டது. இன்றைய நவீன மனிதர்கள் சிலரிடம் இருக்கும் மரபணுக்களில் நியாண்டர்தால் மரபணுக்கள் உள்ளன என்பதை ஆய்வுகள் வெளிப்படுத்தின என்பதையும் நூலாசிரியர் குறிப்பிடுகின்றார்.

ஆப்பிரிக்காவிலிருந்து இடம்பெயர்ந்த இந்த ஹோமோ சேப்பியன்ஸ் வகை மனிதர்கள், அங்கிருந்து இன்றைய கிழக்காசியா பகுதி வரை வந்து பிறகு அங்கிருந்து ஆஸ்திரேலியா செல்ல எடுத்துக்கொண்ட காலம் 5000 ஆண்டுகள். இந்தக் காலகட்டத்திலும் பல மரபணு திரிபுகள் ஏற்பட்டிருக்கின்றன.

3,85,000 ஆண்டுகளுக்கு முன்பு இன்றைய தமிழகத்தின் அத்திரம்பாக்கம் பகுதியில் கண்டெடுக்கப்பட்ட 'பண்டைய மனிதர்களின்' (ஹோமோ சேப்பியன்கள் அல்ல) கற்கருவிகள் அவர்கள் கற்கருவிகளைத் தயாரித்துப் பயன்படுத்தும் அளவிற்கு வளர்ச்சியடைந்ததைக் காட்டுவதை நூலாசிரியர் குறிப்பிடுகின்றார். இந்தப் பண்டைய மனித இனம் எது என்றறிய போதுமான மனித எலும்புக்கூட்டு எச்சங்கள் கிடைக்கப்படவில்லை என்றே ஆய்வுகள் வெளிப்படுத்துகின்றன. மிக ஆழமான தொல்லியல் அகழாய்வுகள் மற்றும் தமிழகத்தின் மலைப்பகுதிகள், மலையடிவாரங்கள், குகைப்பகுதிகளில் தொல்லியல் ஆய்வுகளை விரிவாக்கினால் பண்டைய மனிதர்களின் தொல் படிமங்கள் கிடைக்க வாய்ப்புள்ளது. இந்த அடிப்படையில் ஆய்வாளர்கள் கவனம் செலுத்த வேண்டியது அவசியமாகின்றது.

நூலாசிரியர் முன்னுரையில் கூறும் ஒரு செய்தி கவனத்தில் கொள்ளத்தக்கது. அதாவது, "தொன்று தொட்டு இன்று வரை எந்த ஒரு குழுவோ இனமோ அல்லது சாதியோ 'தூய்மையான' ஒன்றாக இருந்து வரவில்லை". இங்குத் தூய்மை என்பது 'இனக்கலப்பு' என்ற பொருளில் கொள்ளப்பட வேண்டும்.

1871ஆம் ஆண்டில் சார்ல்ஸ் டார்வின் நவீன மனிதர்கள் அதாவது ஹோமோ சேப்பியன் சேப்பியன் ஆகிய நமது மூதாதையர்கள் ஆப்பிரிக்காவிலிருந்து தோன்றியிருக்கக்கூடும் என்று தன் ஆய்வை வெளியிட்டார். இது உலக சிந்தனையில் பெறும் தாக்கத்தை உருவாக்கிய கருத்தாக அமைந்தது.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக ஹோமோ சேப்பியன்களாகிய நமது மூதாதையர்களிடையே பெரும் எண்ணிக்கையில் இனக் கலப்புகள் நடந்து முடிந்து விட்டன என்பதையும் நாம் எல்லோருமே ஆப்பிரிக்காவிலிருந்து இன்றைக்கு 70 ஆயிரம் ஆண்டுகள் காலச் சூழலில் வெளியேறி இடம் பெயர்ந்து தனித்தனி இனங்களாக வளர்ச்சியடைந்து பிறகு அந்த வெவ்வேறு இனங்களுக்கிடையே கலப்புகள் ஏற்பட்டு பரிணமித்திருக்கும் ஒரு கலவை தான் நாம் என்பது மரபணுவியல் ஆய்வுகள் வெளிப்படுத்தும் உண்மைகளாகின்றன.

--- 4 ---

இன்றைக்கு ஏறக்குறைய 65,000 ஆண்டுகள் காலகட்டத்தில் நவீன மனிதர்கள் இந்தியாவை அடைந்த போது அவர்கள் சிறு குழுக்களாக இந்தியாவின் கடற்கரையோரப் பகுதிகள் வழியாக இடம்பெயர்ந்து, சில பகுதிகளில் தங்கி வாழ்ந்து, மீண்டும் இடம்பெயர்ந்து, என்ற வகையில் கடந்து சென்றிருக்கக்கூடும்.

முதன் முதலாக ஆப்பிரிக்காவிலிருந்து வெளியேறிய நவீன மனிதர்களின் நேரடி வாரிசுகள் என்று தேடினால் அந்தமான் தீவுகளில் இருக்கும் ஓங்கே பழங்குடியினரை நாம் குறிப்பிட்டுச் சொல்லலாம். இன்று நம் கண்முன்னே இருக்கும் முதன் முதலாக ஆப்பிரிக்காவிலிருந்து வெளியேறிய நவீன மனிதர்களின் நேரடி வாரிசுகள் இவர்கள் என்று மரபணுவியல் ஆய்வுகள் உறுதி செய்திருக்கின்றன என்பதை நூலாசிரியர் குறிப்பிடுகின்றார்.



ஓங்கே இனத்தவர்களைப் போல அந்தமான் தீவில் வசிக்கும் ஜரவா மக்களும் இன்றைக்கு ஏறக்குறைய 55,000 ஆண்டுகள் கால வாக்கில் இடம்பெயர்ந்தவர்கள். இவர்கள் தெற்கு மற்றும் மத்திய அந்தமான் பகுதியில் வசிக்கின்றனர். மிகக் குறைந்த எண்ணிக்கையிலான மக்கள் தொகையே இன்று இருக்கின்றனர்.

இன்றைய இந்திய நிலப்பகுதியில் நமது மூதாதையர்களான தொல் மனிதர்கள் பல்வேறு காலகட்டங்களில் உட்புகுந்திருக்கின்றனர். ஒரே நேரத்தில் எல்லா இடங்களுக்கும் பரவலாக்கம் என்றில்லாமல் பல்வேறு காலகட்டங்களில் அவர்கள் ஆப்பிரிக்காவிலிருந்து வெளியேறி குழுக்களாக வந்து சேர்ந்திருக்க வேண்டும். இவர்களுள் பண்டைய மனிதர்கள் வட இந்தியாவை விட தென்னிந்தியாவில் அதிக எண்ணிக்கையில் இருந்திருக்கக்கூடும் என நூலாசிரியர் தன் கருத்தைக் குறிப்பிடுகின்றார். நமது மூதாதையர்களான நவீன மனிதர்கள் கடற்கரையோரமாக தங்கள் நகர்வை ஏற்படுத்திக்கொண்டே ஏனைய தொல் மாந்தர்கள் இருந்த பகுதிகளில் அவர்களோடு கடும் தாக்குதலில் ஈடுபட்டு அவர்களை வீழ்த்தி புதுப் புதுப் பகுதிகளுக்குப் பரவியிருக்க வேண்டும்.

இந்தியாவின் இன்றைய நவீன மனிதகுலம் இந்தியாவிற்குள் நுழைந்த போது அங்கு ஏற்கனவே காலூன்றி இருந்த ஏனைய தொல் மாந்த இனங்களை ஒழித்துக் கட்டிவிட்டு நிலைபெற்றது. தெற்காசியாவில் பண்டைய மனிதர்களின் புதைப் படிமம் ஓர் இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. 1982 ஆம் ஆண்டில் நர்மதை ஆற்றுப் பள்ளத்தாக்குப் பகுதியில் ஓரளவு முழுமையான மண்டையோடு கிடைத்தது என்றும் அது ஹோமோ ஹெய்டல்பர்ஜன்சிஸ் வகை என்றும் ஆய்வில் அறியப்பட்டது.

நூலின் இரண்டாம் அத்தியாயம் `விவசாயம் உழவர்கள்` என்ற கோணத்தில் விரிவாக அலசுகிறது. தெற்காசியாவில் மேற்கொள்ளப்பட்ட வேளாண் பரிசோதனைகளில் பழமையானது மெஹெர்கர் என்ற கிராமத்தில் தொடங்கியது. இப்பகுதி இன்றைய பாகிஸ்தானில் உள்ள பலுசிஸ்தான் பகுதியில் உள்ள போலன் கணவாய் அடிவாரத்தில் அமைந்திருக்கும் கிராமம். கிமு 7000லிருந்து கிமு 2600 வரை மக்கள் வாழ்ந்த ஒரு நிலப்பகுதி இது. தெற்காசியாவில் வேளாண்மை எவ்வாறு தொடங்கிப் பரவியது என்பது குறித்த ஆய்வுக்கு இந்த ஆய்வு உதவியது. இதன் அடிப்படையிலேயே ஹரப்பா நாகரிகம் தொடர்பான ஆய்விற்கும் இது வித்திட்டது என்றும் நூலாசிரியர் குறிப்பிடுகிறார்.

பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த ஓர் ஆய்வுக் குழுவினர் இப்பகுதியில் அகழாய்வு செய்த போது கண்டறியப்பட்ட அனைத்து வீடுகளும் பல அறைகளைக் கொண்டவையாக இருந்தன என்றும், கைகளால் தயாரிக்கப்பட்ட செங்கற்களைக் கொண்டு அவை அமைக்கப்பட்டிருந்தன என்றும், மேலும் விரிவாக பல தகவல்களை இந்த அத்தியாயத்தில் மெஹெர்கர் வாழ்விடப் பகுதி பற்றி அறிந்து கொள்ள முடிகிறது.

மத்திய யூப்ரடீஸ் பகுதியில் முர்ரேபிட் என்ற இடத்திற்கு அருகே அகழாய்வுகளில் கிடைத்த சான்றுகளின் படி அங்கு வசித்து வந்தவர்கள் சுமார் 11,000 ஆண்டுகளுக்கு

முன்பே கோதுமையையும் 'ரை' எனப்படும் புல்லரிசியையும் சாகுபடி செய்திருந்தனர் என்றும் கிமு 10,700 ஆம் ஆண்டு வாக்கிலேயே 'ரை' சாகுபடி செய்யப்பட்ட அறிகுறிகள் தோன்றியதையும் நூலாசிரியர் குறிப்பிடுகின்றார். மெஹெர்கர் தொடர்பான விரிவான அலசல், அங்கு மேற்கொள்ளப்பட்ட விவசாய முறைகள், தட்பவெப்பநிலை ஆகியன பற்றிய செய்திகள் இப்பகுதியில் நன்கு ஆராயப்படுகின்றன.

இந்த அத்தியாயம் மேலும் ஒரு முக்கிய செய்தியை விரிவாக ஆராய்கிறது. தற்காலத்து இந்திய மக்கள் குழுவின் ஒட்டுமொத்த மரபணு தொகுதியையும் வரிசைப்படுத்தி இந்திய மக்களின் வரலாற்றை மறு நிர்ணயம் செய்யும் நோக்கத்தில் 2009ஆம் ஆண்டிலும் 2013ஆம் ஆண்டிலும் நிகழ்த்தப்பட்ட இரண்டு ஆய்வுகளை இப்பகுதி மிக விரிவாக ஆராய்கிறது. முதல் ஆய்வின் தலைப்பு Reconstructing Indian Population History. இரண்டாவது ஆய்வின் தலைப்பு Genetic Evidence for Recent Population Mixture in India. இந்த இரண்டு ஆய்வறிக்கைகளுமே கீழ்க்காணும் விஷயங்களை வலியுறுத்துகின்றன :

1) இந்தியாவில் இருக்கும் அனைத்து மக்களும் கலப்பினத்தைச் சேர்ந்தவர்களே; கலப்பு விகிதாச்சாரத்தில் மட்டுமே வேற்றுமை இருக்கிறது

2) இந்திய மக்களின் பரம்பரை குறைந்தபட்சம் இரண்டு குழுக்களோடு தொடர்பு கொண்டுள்ளது 1) முதல் இந்தியர்கள் 2) மேற்கு யுரேசியர்கள்.

இந்த ஆய்வின் முடிவுகள் எப்படிப்பட்ட எதிர்வினைகளை எதிர்கொண்டன என்பதை டேவிட் ரைட் 2018-ஆம் ஆண்டில் வெளியிட்ட 'Who we are and How we got தேரே' என்ற நூலில் விவரிக்கும் செய்தியையும் நூலாசிரியர் இப்பகுதியில் வழங்கி அதனை விவரிக்கின்றார். மிகச் சுவாரசியமானதும் முக்கியமானதுமான செய்தி என்னவென்றால், இந்த ஆய்வறிக்கையின் படி தென்னிந்திய மூதாதையர் முதல் இந்தியர்களின் வம்சாவளியினர் ஆவர் என்ற பதிலே!

ஜாக்ரோஸ் மலைப் பகுதியைச் சேர்ந்த ஈரான் வேளாண் குடியினரின் தொடர்புகள், மரபணு ரீதியிலான பங்களிப்புகள், சிந்து சமவெளிப் பகுதியில் இம்மக்களது தாக்கம் ஆகிய கூறுகள் முக்கிய கவனத்தோடு இப்பகுதியில் ஆராயப்படுகின்றன. இதன் தொடர்ச்சியாக, தெற்காசியாவின் வடமேற்குப் பகுதியில் ஒரு காலகட்டத்தில் ஈரானிய வேளாண் குடியினர் பெரும் எண்ணிக்கையில் இப்பகுதிக்கு இடம்பெயர்ந்துள்ளனர்; அவர்களுடைய மரபியல் சுவடுகள் இன்றைய இந்தியர்களிடம் அளக்க முடியாத விதத்தில் பதிந்து போய் உள்ளன.

இந்த அத்தியாயத்தின் இறுதிப் பகுதியில் பின் குறிப்பாக ஒரு முக்கிய செய்தியை ஆசிரியர் குறிப்பிடுகின்றார். அதாவது கிமு 1900 ஆண்டு வாக்கில் ஹரப்பா நாகரிகம் வீழ்ச்சி அடைந்த போது அதைக் கட்டி எழுப்பிப் பல நூற்றாண்டுகள் பேணிக்காத்தவர்கள் இந்தியத் துணைக் கண்டத்தின் பல பகுதிகளுக்கும் பரவினர்; குறிப்பாக, கிழக்கு மற்றும் தெற்குப் பகுதிகளுக்கு அவர்கள் சென்றனர்!

`முதல் நகரவாசிகள்: ஹரப்பர்கள்` என்ற தலைப்பில் அமைந்த மூன்றாவது அத்தியாயம் ஹரப்பா நாகரிகம் பற்றிய ஆர்வமுள்ளவர்களுக்கு விரிவான செய்திகளைத் தருகின்ற பகுதியாக விளங்குகிறது. இப்பகுதியில் கூறப்படுகின்ற சில முக்கிய செய்திகளைக் குறிப்பாகக் காண்போம்.

- ஹரப்பா நாகரிகத்தை மேற்காசியர்கள் மெலுஹா என்றே அழைத்தனர்.'
- மெசப்பட்டேமியா முத்திரைகளில் இடம்பிடித்திருக்கும் எருமை மாடு, சிந்து சமவெளியை வசிப்பிடமாகக் கொண்டிருந்த ஒரு விலங்கு.
- மெசப்பட்டேமியா நாகரீகத்திற்கும் ஹரப்பா நாகரீகத்திற்கும் இடையே வர்த்தக பரிவர்த்தனைகள் நிகழ்ந்திருக்கின்றன என்பதை தொல்லியல் ஆய்வுகள் வெளிப்படுத்துகின்றன.
- யூப்ரடிஸ்-டைகிரிஸ் ஆகிய இரண்டு ஆறுகளுக்கு நடுவே இருந்த மெசப்பட்டேமியாவில் (அதாவது இன்றைய ஈராக்) சுமேரியர்கள் வாழ்ந்துவந்தனர். ஊருக் போன்ற மெசப்பட்டேமிய நாகரிகத்தின் முதல் நகரங்களைச் சுமேரியர்கள் கட்டி எழுப்பினர்.
- ஹரப்பா நாகரிகம் தனித்துவமிக்க ஒரு நாகரீகம்.
- ஹரப்பா நாகரீகத்தில் மிகச்சிறப்பாக வடிவமைக்கப்பட்டிருந்த நகரங்களைக் கொண்டிருந்தனர்.
- நகரங்களின் தெருக்கள் நேர்த்தியாக அமைக்கப்பட்டிருந்தன.
- வீடுகள் எல்லா சமயங்களிலும் வடக்கு-தெற்கு அல்லது கிழக்கு-மேற்கு திசையைப் பார்த்தபடி வரிசையாகக் கட்டப்பட்டிருந்தன.
- அவர்களது நீர் மேலாண்மை தொழில்நுட்பம் மிக நவீனமாக இருந்தது.
- சமீபத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகள் ஹரப்பாவில் உள்ள அனைத்து வீடுகளிலும் கழிவறைகள் இருந்ததை உறுதி செய்துள்ளன.
- ஹரப்பாவிற்கு வரும் வர்த்தகர்கள் மற்றும் விருந்தினருக்கு வசதியாக பொது குளியல் மேடைகளும் அமைக்கப்பட்டிருந்தன.
- அகழாய்வுகளில் லட்சக்கணக்கான பெண்கள் அணியும் வளையல்கள் கிடைத்தன.
- அகழாய்வில் கிடைத்திருக்கின்ற முத்திரைகளில் 60 சதவீத முத்திரைகளில் ஒற்றைக் கொம்பு விலங்கு உருவம் பொறித்தவை கிடைத்துள்ளன. இது அரச முத்திரையாக இருக்கலாம்.
- அந்த மாபெரும் நகரத்தின் எல்லா பகுதிகளிலும் பொருட்களை எடை போடுவதற்கு ஒரே வழி முறைதான் பின்பற்றப்பட்டது. தரப்படுத்தப்பட்ட கனச்சதுர எடைக் கற்கள் பயன்படுத்தப்பட்டன.

சிந்துவெளி நாகரிகம் அல்லது ஹரப்பா நாகரிகம் செழித்திருந்த நிலப்பகுதிகளில் எந்த மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழி பேசப்பட்டது என்ற கேள்வி தொடர்ந்து சவாலாக இருக்கும் ஒன்று. ஹரப்பா எழுத்து வரிவடிவத்தின் அடிப்படை மொழி முதல்நிலைத் திராவிட மொழியாக இருக்கலாம் என்று பெரும்பாலான வரலாற்று ஆசிரியர்களும் மொழியியலாளர்களும் ஆதரிப்பதை நூலாசிரியர் குறிப்பிடுகிறார்.

இப்பகுதியில் மெசப்பட்டேமியா மொழிகள், அதிலும் குறிப்பாக, ஈல மொழி பற்றி ஆய்வாளர்கள் கவனத்தைக் குவிக்க வேண்டும் என்பதை நூலாசிரியர் சுட்டிக் காட்டுகின்றார். இந்திய மக்கள் தொகையில் ஐந்தில் ஒரு பங்கு மக்களால் திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிகள் பேசப்படுகின்றன. உலகிலேயே ஆறாவது பெரிய மொழிக் குடும்பமாக அமைந்திருக்கின்றது திராவிட மொழிக் குடும்பம். திராவிட மொழிகளுக்கும் ஈல மொழிக்கும் உள்ள தொடர்பை ஆராய வேண்டியதன் அவசியத்தை நூலாசிரியர் குறிப்பிடுகின்றார். அதில் குறிப்பாக பிற்கால ஈல மொழி திராவிட மொழிக் குடும்பத்தின் பிராகுயி மொழியை ஒத்திருந்தது என்ற செய்தியையும் சுட்டிக்கட்டுகின்றார்.



இதில் மேலும் சுவாரசியமான ஒரு செய்தி என்னவென்றால் பெஹிஸ்டன் கல்வெட்டுகளின் புதிரை விடுவிப்பதில் முக்கிய பங்காற்றிய எட்வின் நாரிஸ் என்னும் மொழியியலாளர், ஈல எழுத்து வரிவடிவம் தமிழ் எழுத்து வரிவடிவத்தோடு அதிகமாக ஒத்துப் போகிறது என்பதை 1853 ஆம் ஆண்டிலேயே கண்டுபிடித்தார் என்ற செய்தி. இதுகுறித்து மேலும் பலர் இத்தொடர்புகளைப் பற்றி ஆராய்ந்த செய்திகளையும் மெக் ஆல்பியன் 1981 ஆம் ஆண்டில் எழுதிய Proto Elamo Dravidian: The Evidence and its Implications என்ற ஆய்வறிக்கையைத் தனிக் கவனத்தோடு நூலாசிரியர் குறிப்பிடுகின்றார்.

இதன் தொடர்ச்சியாக கல்வெட்டியலாளரான ஐராவதம் மகாதேவன், பேராசிரியர் அஸ்கோ பர்போலா ஆகியோர் ஹரப்பா மொழியைப் படிக்கத் தொடங்குவதற்கான

புதிய கண்ணோட்டங்களைக் குறிப்பிட்ட செய்திகள் அமைகின்றன. அதில் மிக முக்கியமாக ஆய்வாளர் ஐராவதம் மகாதேவன் 2015 ஆம் ஆண்டில் நிகழ்த்திய சொற்பொழிவில் கூறப்பட்ட கருத்துக்களை நூலாசிரியர் முக்கியமாகக் குறிப்பிடுகின்றார்.

1) ஹரப்பர்கள் வேத காலத்தைச் சேர்ந்த ஆரியர்கள் பேசிய மொழிக்கு எதிரான மொழியைப் பேசினர்.

2) சிந்து சமவெளிப் பகுதியில் கிடைத்த வரி வடிவங்களின் மொழி திராவிட மொழியின் தொடக்கக் கால வடிவங்களில் ஒன்று

3) சிந்து சமவெளி நாகரிகம் ஆரியர்களுக்கு முந்தியது என்பதற்கு ஏராளமான சான்றுகள் இருக்கின்றன

4) சிந்து சமவெளி நாகரிக முத்திரைகளில் பல விலங்குகள் இடம் பெற்றிருந்த போதும் குதிரைகள் மட்டும் இடம் பெறவில்லை.

5) சிந்து சமவெளி நாகரிக முத்திரைகளில் புலி பரவலாக இடம்பெற்றிருந்தது.

6) சிந்து சமவெளி நாகரிகம் பெரும்பாலும் நகர்ப்புற நாகரீகமாக இருந்தது.

சிந்துவெளியில் பேசப்பட்ட திராவிடமொழிகள் தென்னிந்தியாவை அடைந்த காலம் எது என்ற கேள்வி முக்கியமானது. கிமு 2500 ஆம் ஆண்டு வாக்கிலேயே திராவிடமொழிகள் தென்னிந்தியாவை அடைந்து விட்டன. தென்னிந்தியாவிற்குத் திராவிட மொழிகளை முதன்முதலாக கொண்டுவந்தவர்கள் ஹரப்பாவின் மேய்ப்பாளர்களாக இருந்திருக்க வேண்டும் என்பதையும் நூலாசிரியர் விவரிக்கின்றார். தென்னிந்திய மூதாதையரோடு அவர்களுக்கு ஏற்பட்ட கலப்பு இன்றைய தென்னிந்திய மக்கள் தொகையின் பெரும் பங்களிப்பிற்குக் காரணமாகியிருக்கின்றது.

இந்தியர்கள் பேசும் மொழிகள் 4 முக்கிய மொழிக்குடும்பங்கள் பற்றியும் நூல் வரிசையாகப் பட்டியலிடுகிறது.

1. இந்திய-ஐரோப்பிய மொழிக் குடும்பம் (முக்கால்வாசி இந்தியர்கள் இதைப் பேசுகின்றனர்)

2. திராவிட மொழிக் குடும்பம் (ஐந்தில் ஒரு பங்கு இந்தியர்கள் பேசுகின்றனர்)

3. ஆஸ்திரோ ஆசிய மொழிக் குடும்பம் (1.2 சதவீத இந்திய மக்கள் பேசுகின்றனர்)

4. திபெத்திய பர்மிய மொழிக் குடும்பம் ( 1 சதவீதத்திற்கும் குறைவான இந்தியர்கள் பேசுகின்றனர்)

சிந்துவெளி நாகரிகத்தை சரஸ்வதி நாகரிகம் என அழைப்பது ஆய்வு ரீதியாக பொருத்தமானதாக இருக்காது, ஏனெனில் கக்கர்- ஹக்ரா ஆறுகளை சரஸ்வதி என அழைப்பதில் இருக்கும் சர்ச்சைகள் இதற்கு வலு சேர்க்கவில்லை என்பதையும் நூலாசிரியர் கூறி இக்கருத்தாக்கத்தைத் தகர்க்கின்றார்.

இந்த நூலின் இறுதி அத்தியாயமாக வருவது `இறுதியாக குடியேறியவர்கள்:ஆரியர்கள்` என்ற தலைப்பிலான பகுதி. உணர்ச்சிகளைக் கிளர்ந்தெழச் செய்யும் கேள்வியாக இன்றளவும் இருப்பது இந்திய-ஐரோப்பிய மொழி பேசியவர்களது இந்தியாவிற்கான வருகையைப் பற்றிய காலம், அதன் தாக்கம், அவை ஏற்படுத்திய விளைவுகள் என்பது தொடர்பானவை.



இதற்கு முக்கியக் காரணம்;
1) இந்தியக் கலாச்சாரம் என்பது ஆரிய சமஸ்கிருத அல்லது வேத கலாச்சாரத்தைச் சார்ந்தது அல்ல என்பது,
2) இந்திய ஐரோப்பிய மொழி பேசியவர்கள் எப்போது இந்தியாவிற்கு வந்தனர் என்று கேட்பது.. எப்போது நாம் நம்முடைய கலாச்சாரத்தில் பல்வேறு கூறுகளை இறக்குமதி செய்தோம்... அல்லது இரண்டறக் கலக்கும் வகையில் உள்வாங்கிக்கொண்டோம் என்று கேட்பதற்குச் சமமானது,
என்ற இரண்டு காரணங்களை நூலாசிரியர் குறிப்பிடுகின்றார்.

சற்று நமது சமகாலச் சூழலைச் சிந்திப்போம்...
நமது அன்றாட வாழ்வியலைச் சுற்றிக் கட்டமைக்கப்பட்டிருக்கின்ற சடங்குமுறைகள், வழிபாட்டு முறைகள், நம்பிக்கைகள், மூடப் பழக்க வழக்கங்கள் என ஒவ்வொன்றாக எடுத்துப் பட்டியலிட்டு அவற்றை நாம் ஆராயத் தொடங்கினால் தமிழர் பண்பாட்டின் அடிநாதமாக இருக்கின்ற இயற்கை சார்ந்த வாழ்வியல்

கூறுகளிலிருந்து வெகுதூரம் பெயர்ந்து ஆரியர்களின் வைதீக பாரம்பரியத்தையும் பண்பாட்டையும் ஒவ்வொரு சிறு சிறு கூறுகளாக உள்வாங்கிக் கொண்ட உண்மையை நாம் உணர முடியும். பேச்சளவில் ஆரியத்தையும் சமஸ்கிருதத்தையும் வெறுத்து ஒதுக்கித் தள்ளி வைப்பவர்கள் கூடத் தங்களது அன்றாடக் குடும்பச் சடங்குகள், வழிபாட்டுக் கூறுகள் ஆகியவற்றில் அப்பண்பாட்டுக் கூறுகளை இயல்பாக உள்வாங்கிக் கொண்டு அவற்றைக் கடைபிடித்து வருவதைக் கண்கூடாகக் காண முடிகிறது. இது இன்றைய நிதர்சனமான நகைமுரண்!

இந்திய ஐரோப்பிய மொழிகளைப் பேசிய தங்களை ஆரியர்கள் என்று கூறிக் கொண்டவர்கள் எங்கிருந்து இந்திய நிலப்பகுதி வந்தார்கள் அவர்கள் எப்போது இங்கு வந்தனர்? இதுவே மையக் கேள்வி.
தற்போது இந்திய மக்களில் முக்கால்வாசிப்பேர் ஹிந்தி, குஜராத்தி, பஞ்சாபி, மராத்தி போன்ற இந்திய ஐரோப்பிய மொழிகளைப் பேசுகின்றனர். உலக மக்களில் இதே மொழிக் குடும்பத்தைச் சார்ந்த 40 சதவிகிதத்தினர் ஆங்கிலம், ஸ்பானிஷ் பிரெஞ்சு, ஈரான், ரஷ்யன், ஜெர்மன் ஆகிய மொழிகளைப் பேசுகின்றனர். இந்தியத் துணைக்கண்டம் தான் இந்து ஐரோப்பிய மொழிக் குடும்பத்தின் கிழக்கு எல்லையாக இருக்கிறது. இந்தியாவிற்குக் கிழக்கே இந்திய-ஐரோப்பிய மொழியைப் பேசும் நாடுகள் இல்லை. இந்த நிலையில் இந்த இந்தோ ஐரோப்பிய மொழிக் குடும்பம் எப்படி இந்தியாவின் ஆதிக்க மொழியாக மாறியது என்ற கேள்வியை முன்வைக்கின்றார் நூலாசிரியர். இந்த மொழி இந்த நிலத்தில் தோன்றாதது, கடந்த ஒரு காலத்தில் இந்தியாவிற்குள் வந்திருக்க வேண்டும் என்று தன் பதிலையும் இரண்டு வெவ்வேறு சாத்தியக்கூறுகளை விளக்கி விவரிக்கின்றார்.

ஒரு நூற்றாண்டுக்கு மேலாக உலகளாவிய பல அறிஞர்களையும் சோர்வடையச் செய்துகொண்டிருந்த ஆரியர்களின் இடப்பெயர்ச்சி தொடர்பான கேள்விக்கு மரபணுவியல் ஆய்வுகள் விடை கண்டுள்ள செய்தியை மரபியல் கூறுகளை விளக்கி அறிவியல்பூர்வமாக நூலாசிரியர் இப்பகுதியில் இந்திய ஐரோப்பிய மொழிகளைப் பேசியவர்கள் இந்தியாவுக்கு இடம்பெயர்ந்தது தொடர்பான கேள்விக்கு முற்றுப்புள்ளி வைத்த ஆய்வு 2018 மார்ச் 31 அன்று வெளியான The Genomic Formation of South and Central Asia என்ற தலைப்பு கொண்ட அறிக்கையாகும். (ஆர்வமுள்ளோர் இணையத்திலிருந்து வாசிக்கலாம்).

--- 7 ---

இறுதியாகக் குடியேறியவர்கள் ஆரியர்கள் என்ற இறுதி அத்தியாயத்தில் மேலும் சில பகுதிகளைக் காண்போம்.

ஸ்டெப்பி புல்வெளியில் இருந்த மேய்ப்பாளர்கள் இன்றைய வடக்கு ஆப்கானிஸ்தான், தெற்கு உஸ்பெகிஸ்தான், தஜிகிஸ்தான் பகுதிகளில் பரவியிருந்த நாகரிகங்களின் மீது எந்தத் தாக்கத்தையும் விளைவிக்காமல் தெற்கு நோக்கிச்

சென்று தெற்காசியாவை அடைந்து அங்கு ஹரப்பா நாகரீகத்தைச் சேர்ந்த மக்களுடன் இனக்கலப்பில் ஈடுபட்டனர். இதன் விளைவாக இந்தியாவில் இன்று இருக்கும் இரண்டு முக்கிய பரம்பரையில் ஒன்றான வட இந்திய மூதாதையர் என்ற பிரிவு உருவாக இவர்கள் காரணமாகினர்.

தென்னிந்திய மூதாதையர் என்போர் அதே காலகட்டத்தில் ஹரப்பா நாகரிகத்தைச் சேர்ந்த மக்கள் தெற்குப் பகுதி இந்தியாவிலிருந்த முதல் இந்தியர்களுடன் மேற்கொண்ட இனக்கலப்பால் உருவானவர்கள். இந்த ஸ்டெப்பி புல்வெளி மேய்ப்பாளர்கள் யம்னயா என்று அழைக்கப்படுகின்றார்கள்.



யார் இந்த யம்னயா மக்கள் என்ற கேள்வி தற்சமயம் மனிதகுல ஆய்வுலகில் ஆர்வத்துடன் பேசப்படும் ஒரு கேள்வியாக அமைகிறது. இவர்கள் அடிப்படையில் கி.மு 50,000லிருந்து 30,000 ஆண்டுகளுக்கு இடையிலான காலகட்டத்தில் ஆப்பிரிக்காவிலிருந்து வெளியேறி ஸ்டெப்பி புல்வெளிப் பகுதிகளில் குடியேறியவர்கள். ஏனைய மக்களுடன் இருந்து தூரமும் புவியியல் தடைகளும் அவர்களைப் பிரித்ததால் மரபியல் ரீதியில் முற்றிலுமாக வேறுபட்டவர்களாக இவர்கள் பரிணாம வளர்ச்சி அடைந்தனர்.

யம்னயா மக்களின் தனிப்பட்ட பண்பாட்டுக் கூறுகளாக இறந்து போன ஒருவரை ஒரு மரப்பெட்டியில் போட்டுப் புதைத்து அந்த இடத்தில் கல்லாலும் மண்ணாலும் மேடெழுப்பி கல்லறை மேடுகளை உருவாக்கும் பண்பும், குதிரைகள் பூட்டிய சக்கரங்கள் கொண்ட வண்டிகள் அமைத்தல் என்ற பண்பும் முக்கியத்துவம் பெறுகின்றன. ஸ்டெப்பி புல்வெளி பகுதிகளில் குதிரைகள் பூட்டிய வண்டிகள்

அவர்கள் நெடுந்தூரம் பயணம் செய்யவும், தண்ணீரைச் சுமந்து வரவும் புதிய பகுதிகளுக்குப் பயணம் செய்து அங்குப் பெண்களைக் கவர்ந்து அப்பகுதிகளில் இனப்பெருக்கத்தின் வழியாக தங்கள் எண்ணிக்கையையும் ஆளுமையை விரிவாக்கம் செய்தமை போன்றவற்றைக் கூறலாம்.

யம்னயா மக்கள் கிமு 3,000 ஆண்டு வாக்கில் முதலில் ஐரோப்பாவில் நுழைந்தனர். 'கயிற்றுப் பதிவுப் பாண்டம்' (Corded ware culture) பண்பாட்டுடன் யம்னயா குழு தொடர்புப் படுத்தப்படுவதையும் காண்கிறோம். உதாரணமாக ஜெர்மனியில் கிடைத்த பண்டைய மனிதர்களின் டிஎன்ஏ ஆய்வுகளின்படி இப்பண்பாட்டைச் சார்ந்தோரில் 75 சதவீதத்தினர் யம்னயா பரம்பரையினர் என்பது தெரிய வந்தது. ஐரோப்பாவில் யம்னயா பரவலாக்கம் மத்திய தரைக்கடல் பகுதியில் வழக்கிலிருந்த பெண் தெய்வ வழிபாட்டை மாற்றி வன்முறையின் வடிவமாகத் திகழ்கின்ற சீயஸ் போன்ற ஆண் போர் கடவுளர் உருவாக்கத்திற்கு அடித்தளம் அமைத்தது; இதன் தொடர்ச்சியாக ஆணாதிக்கச் சமூகமாக இது மாறியது என்பதையும், இதன் தாக்கம் ஐரோப்பா முழுமைக்கும் பரவியது என்பதையும் காண முடிகிறது.

இதில் மிக முக்கியமாகக் கருத வேண்டிய ஒன்று, 'இடம் பெயர்ந்தவர்கள் உருவாக்கிய புதிய கலாச்சாரங்களில் வன்முறையைக் கொண்டாடுகின்ற, ஆண்களை மையப்படுத்துகின்ற போக்கு மிகவும் தூக்கலாக இருந்தது என்பது. இதற்குச் சான்றாக, அகழாய்வுகளில் கிடைத்த கல்லறைகளில் பெரும்பாலும் ஆண் எலும்புக்கூடுகளே காணப்பட்டன என்றும், அவை பெருங்காயங்களுடன் இருந்தன என்றும் அவற்றின் அருகில் போர்க்கோடாரிகள் இருந்தன' என்பதையும் நூலாசிரியர் குறிப்பிடுகின்றார். யம்னயா மக்களின் இடப்பெயர்ச்சி ஆண்களை மையமாகக் கொண்டிருந்தது. யம்னயா மக்களிடம் மண்பாண்டங்கள் செய்யும் பாரம்பரியம் இருக்கவில்லை. அவர்கள் ஓரிடத்தில் தங்காமல் வெவ்வேறு இடங்களுக்குத் திரிந்து கொண்டிருந்தமையால் அவர்களுக்கு உடையாத, எளிதில் எடுத்துச் செல்லக்கூடிய பொருட்கள் தேவைப்பட்டன. ஆனால் கயிற்றுப் பதிவுப் பாண்டப் பண்பாட்டைச் சேர்ந்த பெண்களை இவர்கள் கவர்ந்ததால் மண்பாண்டங்கள் செய்யும் கலை இவர்கள் பண்பாட்டில் இடம்பெறத் தொடங்கியது. இதனை விவரிக்கும் வகையில் யம்னயா இனத்தின் ஆரம்பக்காலக் கல்லறைகளில் கிடைக்காத மண்பாண்டங்கள் பிந்தைய கல்லறை அமைப்புகளில் கிடைப்பதை ஆசிரியர் விளக்குகிறார்.

Population Genomics of Bronze Age Eurasia என்ற தலைப்பிலான 2015ம் ஆண்டு கட்டுரை வழங்கும் இடப்பெயர்வு தகவல்களையும் இப்பகுதியில் நூலாசிரியர் விவரிக்கின்றார். தங்களை ஆரியர்கள் என அழைத்துக் கொண்ட இந்திய-ஐரோப்பிய மொழி பேசிய இந்த ஸ்டெப்பி புல்வெளி மேய்ப்பாளர்கள் இந்தோ-ஈரானியர் என்றும் அழைக்கப்படுகின்றனர். அவர்கள் இறுதியில் ஈரானிலும், இந்தியாவிலும் நிரந்தரமாகக் குடியேறினர் என்றும், ஜொராஸ்டிரிய மதத்தின் முக்கிய புனித நூலான அவெஸ்தாவிலும் ரிக் வேதத்தில் வெளிப்படுகின்ற

கலாச்சாரங்கள் மற்றும் தொன்மக்கதைகளில் ஏராளமான ஒற்றுமைகள் இருப்பதையும் நூலாசிரியர் சுட்டிக் காட்டுகின்றார்.

2017ம் ஆண்டில் வெளிவந்த A Genetic Chronology for the Indian Subcontinent Points to heavily sex-biased Dispersals என்ற கட்டுரையைக் குறிப்பிட்டு இந்திய-ஐரோப்பிய மேய்ப்பாளர்கள் சமுதாயங்களில் பரவலாகக் காணப்படுகின்ற ஆணாதிக்க அமைப்பு முறை, திருமணமானதும் மணப்பெண்ணை மணமகன் குடும்பத்திற்கு அனுப்பி வைக்கும் கலாச்சாரம், தந்தை வழி உறவு முறை போன்றவற்றோடு பொருந்துவதையும் குறிப்பிடுகின்றார். இதனை நோக்கும் போது இன்று தமிழ்ச்சமூகம் உள்வாங்கிக் கொண்ட முக்கிய சமூக அமைப்பாக உள்ள மணமகள் கணவன் வீட்டிற்கு அனுப்பும் முறை, ஆரியப் பண்பாட்டைத் தமிழ்ப் பண்பாடும் உள்வாங்கிக் கொண்டதோ என்ற ஐயத்தை எழுப்புகிறது. இது, நமது சமூக வாழ்வியல் கூறுகளையும் தமிழர்கள் மீளாய்வு செய்ய வேண்டியதன் அவசியத்தை வெளிப்படுத்துகிறது!

--- 8 ---

ஆதி இந்தியர்கள் யார் என்ற கேள்விக்கு விடைதேடும் முயற்சியை எளிதாக விவரிக்க நூலாசிரியர் டோனி ஜோசஃப் நாம் சாப்பிடும் பீட்சாவை ஓர் உதாரணமாக எடுத்துக் கொள்கிறார்.

1. பீட்சாவின் அடித்தட்டு - 65,000 ஆண்டு வாக்கில் ஆப்பிரிக்காவில் இருந்து வெளியேறி, மத்தியக் கிழக்கு ஆசியா வழியாக வந்து, இந்தியக் கடற்கரையோர நிலப் பகுதிகளின் வழியாக தென்னிந்தியா வரை வந்து, பிறகு கிழக்கு நோக்கிச் சென்று இந்தியா முழுமைக்கும் பரவியவர்கள். இவர்களே பூர்வகுடி மக்கள் என்று அறியப்படுபவர்கள்.

2. அடுத்து, ஜாக்ரோஸ் மலைப்பகுதி மேய்ப்பாளர்கள் பலுசிஸ்தான் வந்தடைந்து, அங்கிருந்த முதல் இந்தியர்களோடு இனக்கலப்பில் ஈடுபட்டபோது பீட்சாவின் அடித்தட்டின் மீது பரப்பப்பட்ட சாஸ் போன்று என எடுத்துக் கொள்ளலாம். இவர்கள் ஹரப்பா நாகரீகத்தை உருவாக்கியவர்கள்.

3. பொ.ஆ.மு 2000ப் பிறகு ஆரியர்கள் இப்பகுதிக்கு வந்தபோது அந்த அடித்தட்டின் மேல் ஏற்கனவே பூசப்பட்ட தக்காளி சாஸின் மீது தூவப்பட்ட சீஸ் போல அவர்களை எடுத்துக்கொள்ளலாம். அவர்களை வட இந்தியாவில் அதிகமாகவும் தென்னிந்தியாவில் குறைவாகவும் பீட்சாவின் மீது உள்ள தக்காளி சாஸின் மீது தூவப்பட்டது போல உருவகப்படுத்திக் கொள்ளலாம்.

4. அதே காலகட்டத்தில் வெளியிலிருந்து இந்திய நிலப் பகுதிக்குள் வந்த ஆஸ்திரோ ஆசிய மொழிகள் பேசும் மக்கள், திபெத்திய பர்மிய மொழிகள் பேசிய மக்கள், கிரேக்கர்கள், யூதர்கள், பார்சிகள், சிரியர்கள், முகலாயர்கள், போர்த்துக்கீசியர்கள், ஆங்கிலேயர்கள், பிரெஞ்சுக்காரர்கள், என பலப்பல சீஸ் வகைகளும் இந்தப் பீட்சா தட்டின் மேல் தூவப்பட்ட வகையில் உருவகம் செய்கிறார். இப்படி பல்வேறு காலகட்டங்களில் இந்த பீட்சா அடித்தட்டின் மேல் இருக்கின்ற தக்காளி சாஸின் மேல் படிப்படியாக தூவப்படுகின்ற சீஸ்களாக இந்தியாவிற்குள் வந்து சேர்ந்த,

இங்கேயே தங்கிவிட்டவர்கள் இனக்கலப்பில் ஈடுபட்டு இந்தியர்களாக உருவானதை இவ்வகையில் பீட்சா ஒன்றை உதாரணமாக எடுத்துக் கொண்டு பீட்சா உருவகத்தைப் பயன்படுத்துகிறார் நூலாசிரியர்.
இது இந்திய நிலப்பகுதிக்குள் மக்கள் இடப்பெயர்ச்சியையும், குடியேற்றத்தையும் எளிதாக விளக்குகின்றது எனலாம்.



பொ.ஆ.மு. 150 வாக்கில் பதஞ்சலி எழுதிய மகாபாஷ்யம் என்ற நூலில் ஆரியர்களின் பூமி எது என்று கேள்வி எழுப்பி,  கலாக்கா காடுகள், கங்கை ஆறும் யமுனை ஆறும் சந்திக்கும் இடத்திற்கு அருகில் இருந்திருக்க வேண்டுமென்றும், பரியாத்திரை மலைகள் அதாவது விந்தியமலைகளாக இருக்க வேண்டும் என்றும் குறிப்பிடுகின்றார்.

பொ.ஆ.மு 500 ஆம் ஆண்டு வாக்கில் இந்தியாவில் தோன்றிய மகத நாடும் மகதப் பேரரசும்  வரலாற்றில் முக்கியத்துவம் பெறும் ஓர் அரசு. பொ.ஆ.மு 7ஆம் நூற்றாண்டுக்கும் பொ.ஆ.மு 5ஆம் நூற்றாண்டுக்கும் இடையே இங்கிருந்துதான் புத்த மதமும் சமண மதமும் தோன்றின.  இவை ஏற்கனவே இருந்த ஆரிய மதத்தின் அடிப்படையான வேத நூல்களையும், சடங்குகளையும், சமூகத்தில் நிலவிய பழக்க வழக்கங்களையும் கேள்வி கேட்டன. முதல் இந்தியப் பேரரசான மௌரியப் பேரரசு பொ.ஆ.மு 322 -180ல் இப்பகுதியில்தான் தோன்றியது.

ஆரியர் பண்பாட்டை விளக்கும் நூலாசிரியர் கீழ்க்கண்ட வகையில் குறிப்பிடுகின்றார்.
- அர்ச்சகர்களுக்குத் தாராளமாக தானம் வழங்குவது
- பெரிய பலிச் சடங்குகள்
- ஆட்சியாளர்களுக்கும் பிராமணர்களுக்கும் இடையே நெருக்கமான சார்புடைய உறவு

மௌரியப் பேரரசைப் பற்றி விவரிக்கும் நூலாசிரியர், ஆய்வாளர் புரோன்க்ஹார்ஸ்ட் கூறும் கீழ்க்காணும் செய்திகளைப் பதிகிறார். அவை:
- மௌரியப் பேரரசை ஆண்ட எந்த அரசருக்கும் பிராமணர்களிடத்திலும் அவர்களுடைய கோட்பாடுகள் மீதும் எவ்விதமான ஈடுபாடும் இருக்கவில்லை
- மகத நாட்டின் தொடக்கக் கால அரசர்களாகிய பிம்பிசாரர், அஜாதசத்ரு ஆகியோர் தங்களுடைய மதத்தைச் சேர்ந்தவர்கள் என்று புத்த மதத்தினர் கூறுகின்றனர்; இதையே ஜைன மதத்தினரும் கூறுகின்றனர்.
- பொ.ஆ.மு 350ஆம் ஆண்டுவாக்கில் அப்பகுதியை ஆண்ட நந்த பேரரசர்கள் ஜைன மதத்தைப் பெரிதும் ஆதரித்தனர்.
- நந்தர்களைத் தூக்கி எறிந்த சந்திரகுப்த மவுரியர் நந்தர்களைப் போலவே பிராமணர்களிடத்திலும் எந்தவிதமான ஈடுபாடும் காட்டவில்லை
- சந்திரகுப்த மவுரியர் ஜைன மதத்திற்கு மாறி ஒரு ஜைன துறவியாக இருந்தார்
- அவருடைய மகன் பிம்பிசாரர் பிராமணர்கள் அல்லாத சமய இயக்கங்களை, குறிப்பாக, ஆசீவகச் சமய இயக்கத்தை ஆதரித்தார்
- அவருடைய மகனான அசோகர் புத்த மதத்தைத் தழுவினார்
- அவருக்கு அடுத்து வந்தவர்கள் ஆசீவகத்தில் அதிகம் ஆர்வம் காட்டினர்
- மௌரியப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின் வந்த கங்கர்கள் பிராமணர்களாக இருந்த காலகட்டத்தில்தான், பொ.ஆ.மு 185 வாக்கில், பிராமணர்கள் சமூகத்தில் தாங்கள் எதிர்பார்த்த இடத்தை அடையத் தொடங்கினர்.

மனுதர்ம சாத்திரம் பொ.ஆ.மு. 3ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது என்பதை இங்கு கவனிக்க வேண்டும்.

பொ.ஆ.மு 6-2ஆம் நூற்றாண்டு காலகட்டம் இந்திய வரலாற்றில் முக்கியத்துவம் பெறுகின்ற காலமாகக் கருதப்படுகிறது.உபநிடதங்கள் இயற்றப்பட்டன.உலகிலேயே முதன் முதலாக மதப் பரப்பாளர்கள் மூலமாக மதங்கள் பரப்பிய பௌத்தமும் சமணமும் தோன்றின.சமணம் இந்தியாவின் பல இடங்களுக்குக் கொண்டு சென்று சேர்க்கப்பட்டது.புத்த மதம் கிழக்காசிய நாடுகளிலும் உலகின் ஏனைய பிற பகுதிகளுக்கும் கொண்டு சென்று சேர்க்கப்பட்டது.

இவை மட்டுமன்றி, சங்கத்தமிழ் இலக்கியங்கள் படைக்கப்பட்ட பொற்காலமாகவும் தமிழ் மன்னர்களின் அரசுகள் தோன்றி வளர்ந்து, உழவும் வணிகமும் விரிவாக்கம் பெற்ற காலமாகவும் இது திகழ்ந்தது என்பதையும் நாம் குறிப்பிட வேண்டும்.



நம்மைச் சுற்றி மீண்டும் மீண்டும் எழுப்பப்படுகின்ற ஒரு முக்கிய கேள்வி, எப்போது சாதி அமைப்பு என்பது இந்திய சூழலில் வலுப்பெற்றது என்பதாகும். இதற்கான பதில் தருவதாக அமைகிறது நூலின் முடிவுரை பகுதி.

- பொ.ஆ 1ஆம் நூற்றாண்டு வரை சாதியக் கட்டமைப்புடன் கூடிய சமூகநிலை இந்தியாவில் இல்லை.
- பொ.ஆ 2ஆம் நூற்றாண்டில் சமூகத்திற்குள் புகுத்தப்பட்ட சமூக அடுக்கு அதிகார அமைப்பு இந்த சாதி அமைப்பு.
- இந்தச் சாதி அமைப்பு மக்களைச் சிறு சிறு துண்டுகளாகப் பிரித்துள்ளது; இது மிக முக்கியமாக ஒரு பாதிப்பை இந்திய சமூகத்தில் வழங்கியிருக்கின்றது. அது என்னவெனில், ஒரு சமுதாயத்தில் உள்ள தனிநபர்களின் ஆற்றல்களை முழுமையாக பயன்படுத்தும் திறனை சமுதாயம் இழக்கின்ற ஒரு நிலையாகும்.
- பொ.ஆ 1ஆம் ஆண்டு வரை இருந்த சமூக பண்பாட்டுச் சூழலில் இதற்கு அடுத்த நூற்றாண்டில் மிகப்பெரிய மாற்றத்தை ஏற்படுத்திய சாதி சமூக கட்டமைப்பு புகுத்தப்பட்டு படிப்படியாக அது உறுதி செய்யப்பட்டது
- புத்தமதம் அது தோன்றிய பூமியிலேயே தோற்கடிக்கப்பட்ட பின்பும் பல நூற்றாண்டுகள் படிப்படியாக வலுவிழந்தாலும் தொடர்ந்து நீடித்துக் கொண்டே இருந்தது.
- பொ.ஆ 2ஆம் நூற்றாண்டை ஒட்டி இந்தியாவில் சாதி அமைப்பு முறை தோன்றி சமண பௌத்த மத தத்துவங்களுக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்தியதைக் காண்கின்றோம். ஆதிசங்கரரின் படைப்புகளிலிருந்து தர்க்கரீதியான விவாதங்கள் மற்றும் வன்முறை மூலமாக கருத்து மோதல்கள் தொடர்ந்தன என்பதையும் காணமுடிகிறது.

- சாதி சமூக கட்டமைப்பு ஏற்படுத்திய பிரச்சனைகளை எதிர்த்து அம்பேத்கர் தனக்கும் தன்னைப் பின்பற்றியவர்களுக்கும் புத்தமதத்தைத் தேர்ந்தெடுத்தது ஒரு சமுதாயம் எவ்வாறு கட்டமைக்கப்பட வேண்டும் என்பது குறித்த கருத்து முரண்பாடுகள் தொடர்ந்து இன்று வரை தொடர்வதைக் காட்டுகிறது.
- அதேவேளை அம்பேத்கருக்கும் மகாத்மா காந்திக்கும் இடையே ஏற்பட்ட சித்தாந்த ரீதியான கருத்து முரண்பாடுகள் ஒரு சமுதாயம் எப்படி இருக்க வேண்டும் என்பது குறித்த ஆரியத்தின் பழமைவாதம் கொண்டிருந்த கருத்துகளுக்கும் மகத நாட்டின் முற்போக்கு வாதம் கொண்டிருந்த கருத்துகளுக்கும் இடையே ஏற்பட்ட மோதலை ஒத்ததாக காண வைக்கின்றது என்று நூலாசிரியர் குறிப்பிடுகிறார்.

இந்திய கலாச்சாரம் ஒத்த தன்மை கொண்டதல்ல; மாறாக அது பன்முகத்தன்மை கொண்டது. ஒற்றைக் கலாச்சாரம் என்ற கொள்கையை உருவாக்க மேற்கொள்ளும் முயற்சிகள் இன்றும் தொடருகின்றன; அதே சமயம் அவை தோற்கடிக்கப் படுகின்றன.

இந்திய வரலாறு எழுதப்பட்டிருக்கும் முறை தொடர்ந்து கேள்விக்குட்படுத்தப்படவேண்டும்; பெரும்பாலான சமயங்களில் நமது வரலாறு எழுதப்பட்டிருக்கும் முறையை நியாயப்படுத்தும் முயற்சி மட்டுமே நடைபெறுகிறது என நூலாசிரியர் விமர்சிக்கின்றார்.

இந்திய வரலாறு எப்போது தொடங்கியது என்ற கேள்விக்கு 65,000 ஆண்டுகளுக்கு முன்பு நவீன மனிதர்கள் இந்தியா வந்து சேர்ந்த வேளையிலிருந்து தான் அது தொடங்கப்படுகிறது என்கிறார் நூலாசிரியர். வரலாறு திரிக்கப்படாமல் இருக்கவும், அது மக்களுக்குத் தொடர்புடையதாகவும் இருக்க வேண்டும் என்றால், சரியான அடித்தளத்திலிருந்து தொடங்கப்பட வேண்டும் என்பதையும் சுட்டிக் காட்டுகின்றார். அதாவது, இன்றைய மக்களின் மூலாதாரமாக இருந்த மக்களான முதல் இந்தியர்களிடம் இருந்து தான் இந்திய வரலாறு தொடங்க வேண்டும் எனக் குறிப்பிடுகிறார்.

இறுதியாக, இந்தியர்களாகிய நாம் உண்மையில் யார்? என்ற கேள்விக்குப் பல மூலங்களிலிருந்து முகிழ்த்து எழுந்த நாகரிகத்தைச் சேர்ந்தவர்கள் இந்தியர்கள்; ஒற்றை மூலத்திலிருந்து உருவானவர்கள் அல்ல என்ற பதிலை முன்வைக்கின்றார். பலருக்கு இது அதிர்ச்சியை ஏற்படுத்தினாலும் நம்முடைய கலாச்சார தூண்டல்கள், பாரம்பரியங்கள், நடைமுறைகள் ஆகியன விதவிதமான உள்ளூர் பரம்பரைகளிருந்தும் வெளியே இருந்து இடம்பெயர்ந்தவர்களின் வம்சாவளிகளிடம் இருந்தும் பெறப்பட்டவை.
1. 65,000 ஆண்டுகளுக்கு முன் ஆப்பிரிக்காவிலிருந்து கிளம்பி இந்த நிலப்பகுதிக்கு வந்தடைந்த துணிச்சல் மிக்க முன்னோடிகளின் பரம்பரை தான் இன்றும் இந்திய மக்களின் அடிநாதமாக இருந்து வருகிறது.
2. மேற்கு ஆசியாவில் இருந்து வந்த இன்னொரு குழு வேளாண் புரட்சிக்கு வித்திட்டது; ஹரப்பா நாகரீகத்திற்கும் பங்களித்தது.இந்த ஹரப்பா நாகரீகம் தான்

இன்றைய இந்திய கலாச்சாரத்தைச் செழிப்பாக ஆக்கிய திராவிட மொழிகள் புதிய சித்தாந்தங்கள் மற்றும் நடைமுறைகளின் ஊற்றுக்கண்ணாக விளங்குகிறது.
3. மத்திய ஆசியாவிலிருந்து வந்து சேர்ந்த இன்னொரு குழு சமஸ்கிருதத்தின் தொடக்கக்கால வடிவத்தைத் தங்களுடன் கொண்டு வந்தது. அந்த மொழியோடு கூடவே நமது சமுதாயத்தின் அடிப்படையை மறு வடிவமைப்பு செய்த நம்பிக்கைகளையும் நடைமுறைகளையும் அது கொண்டுவந்தது.
4. இதனை அடுத்து இந்தியா மீது படையெடுத்து வந்தவர்கள், வர்த்தகம் செய்ய வந்தவர்கள், என அனைவரும் கலந்து இந்தியா என்று நாம் அழைக்கும் நாகரீகத்திற்குத் தங்கள் பங்களிப்பைக் கொடுத்துள்ளனர்.
முடிவுரையின் இறுதியில் நூலாசிரியர் இப்படிக் கூறுகிறார்,"நாம் அனைவருமே வெளியிலிருந்து இங்கு இடம் பெயர்ந்து வந்தவர்கள் தாம்!"

மிக நீண்ட காலம் நிகழ்த்தப்பட்ட அறிவியல் ஆய்வுகள் வெளிப்படுத்திய சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு இந்த நூல் உருவாக்கப்பட்டுள்ளது. மரபணுவியல் ஆய்வுகள் இந்த நூற்றாண்டின் தொல்லியல் ஆய்வுகளுக்குப் பெரும் துணையாக அமைகின்றன. இந்திய மக்களின் மூதாதையர்களைப் பற்றியும்- நாம் யார் - நமது மூதாதையரின் பண்டைய பண்பாடுகள் - இந்திய சமூகக்கட்டமைப்பில் சாதிய அமைப்பின் தோற்றம், வளர்ச்சி - போன்ற அடிப்படை கேள்விகளுக்கும் தேடல்களுக்கும் சரியான பாதையை அமைக்கின்றது இந்த நூல். ஒவ்வொரு இந்தியரும் வாங்கி வாசித்து தனது தோற்றப்புள்ளியைப் புரிந்து கொள்ள இந்த நூல் ஒரு சிறந்த வழிகாட்டி!

--- *** ---

## 26 • நூல் அறிமுகம்: தமிழா? சம்ஸ்கிருதமா?

• • • மா. மாரிராஜன்

**தமிழா? சம்ஸ்கிருதமா?**
**ஆசிரியர்: முனைவர். கண்ணபிரான் இரவிசங்கர் (கரச|KRS)**
**விலை: ₹180**
**தடாகம் வெளியீடு, முதற் பதிப்பு, ஜனவரி 2021**
**ISBN: 97893888627191**




இரண்டு மொழிகளின் ஒப்பீடு, பழமை, சிறப்பு... இது குறித்த மொழியியல் ஆய்வு நூல்கள் குறித்து ஒரு தேடல். புராணம் மற்றும் இலக்கியம் மேற்கோள் இல்லாமல் சுயசார்பின்றி வரலாறு தொல்லியல்த் தரவுகளுடன் கூடிய நூல் மற்றும் கட்டுரைகளைத் தேடிய ஒரு தேடலில் நண்பரிடம் விசாரித்த போது... "தமிழா ? சம்ஸ்கிருதமா?" நூலை வாசியுங்கள் என்றார். கரச என்று அறியப்படும் பேராசிரியர் முனைவர். கண்ணபிரான் இரவிசங்கர் அவர்கள் எழுதிய நூல்.

தமிழா? சம்ஸ்கிருதமா? நூலின் தலைப்பே கல்வெட்டு வடிவ எழுத்துக்களில் அமைந்து இருப்பது முதல் ஈர்ப்பு. நான் விரும்பும் இலக்கியச் செல்வர் பேரா.வீ.அரசு அவர்களின் அணிந்துரை அளித்திருப்பது அடுத்த ஈர்ப்பு. பொதுவாக மொழிக்கலப்பு என்பது இயல்பான நிகழ்வு. ஆனால், சம்ஸ்கிருத கலப்பு என்பது திட்டமிட்ட சதிச்செயல் என்ற அணிந்துரையே நூலின் உள்ளடக்கத்தை எடுத்துரைக்கிறது.

அடுத்து..
கரச அவர்கள் நுழையும் முன் ஒரு வேண்டுகோள் மற்றோர் ஈர்ப்பு.
"நுழையும் முன்.. வேண்டுகோள்!
இந்த நூலுக்குள் நுழையும் முன், ஓர் அன்பு வேண்டுகோள்:
- வாசிக்கும் போது, உங்களின் தனிப்பட்ட மதப் பிடித்தம் அரசியல் பிடித்தம் எஃதாயினும், சற்றே மறந்துவிடுங்கள் !
- தற்பிடித்தம் கடந்து, தமிழைத் தமிழாக மட்டுமே அணுகிக் காணுங்கள் !

தமிழ்மொழியின் தகைமைகளுள் தலையாவது என்னவென்றால், வேறு எந்த இனத்தின் மொழிக்குள்ளும் தன்னை வல்லடியாகத் திணித்துச் சிதைக்காத அறம் மிக்க மொழி, இத்தமிழ்மொழி!

அதே அறத்தின் சீர்மையை நீங்களும் கைக்கொண்டு, உங்களின் தற்பிடித்தம் கடந்து வாசிக்கவும். உங்களின் பிடித்தம்: இறைவனாக இருக்கட்டும் (அல்லது) உண்மையாக இருக்கட்டும்!
உண்மைத் தேடல்தானே இறைத் தேடல்?
- மனம் ஆரத் தமிழ் உண்மை காண்போம்!
- மனம் ஆறத் தமிழ் உண்மை காண்போம்!
- மனம் மாறத் தமிழ் உண்மை காண்போம்!"

"தற்பிடித்தம் கடந்து, தமிழைத் தமிழாக மட்டும் அணுகிக் காணுங்கள்"
அடடா!!! சுயசார்பு என்று அடிக்கடி நான் பயன்படுத்தும் ஒரு சொல், இங்கே தற்பிடித்தம் என்று ஆரம்பமாகிறதே. நாம் தேடிய நூல் இதுதானோ....?

"நீவிர், தமிழ் போல், வாழ்வாங்கு வாழ்க! வாருங்கள் நூலுக்குள் புகுவோம்!... "

என அழைக்கிறார், நெகிழ்ச்சியுடன் நூலுக்குள் புகுந்தேன்..

முதல் பகுதியில்,
"தமிழ் மொழி, வடமொழியைவிடப் பழமையானதா? ஆதாரம் உள்ளதா?

ஆம்; என விளக்கும் விரிவான விளக்கவுரைகள் மற்றும் அறிவியல் தொல்லியல்த் தரவுகள். என்னிடம் இருக்கும் ஐயங்களுக்குத் தெளிவான விளக்கம் தந்தன.

பிராகிருதம்=பிர + கிருதம் - Raw form
மேம்படாத வடிவம்..

சம்ஸ்கிருதம் = சம்ஸ் + கிருதம் - Refined form
மேம்பட்ட வடிவம்..

மேம்படாத கரடுமுரடான மொழிதானே முதலில் தோன்றியிருக்கும். அதாவது, பிராக்ருதத்தின் "தம்மம்" என்பதுதான் சம்ஸ்கிருதத்தில் "தர்மம்".

புரிய ஆரம்பித்தது. சம்ஸ்கிருதத்தின் மூலம் தெரிய வருகிறது. கரடுமுரடான தமிழி எழுத்துக்களும், மேம்பட்ட தமிழ் எழுத்துக்களும் தமிழே.
தோற்றமும் தமிழே.. வளர்ச்சியும் தமிழே.. வேறு எங்கிருந்தும் எதையும் பெறாமல் சுயம்பு மொழி இது.

நிறைய விளக்கங்கள், அறிவியல் ரீதியான ஆய்வுகள் என்று ஒவ்வொரு மொழியின் வேர்ச்சொல்லுக்குள் புகுந்து அடித்து ஆடுகிறார் ஆசிரியர். ஆசிரியருக்குத் தமிழ், சம்ஸ்கிருதம் உட்பட 12 மொழி தெரியுமாம்!!!!!!!

முழுமையாக வாசித்ததில் ஒரு தெளிவு கிடைத்தது. சம்ஸ்கிருதத்தை விட தமிழ் மொழி பழமையானதா? என்ற கேள்விக்கு; ஆம், என்ற பதிலை
25 பக்கத்தரவுகள் மூலம் வரலாறு அறிவியல், தொல்லியல் ரீதியாக ஆதாரத்துடன் நிறுவுகிறார்.

அடுத்த பகுதி..
"எவருடைய காலத்தில் தமிழ், பிறமொழிக் கலப்பு இல்லாமல் இருந்தது?"

தெளிவான, சரியான ஆய்வியல் வாதம் வைக்கப்படுகிறது. மொத்தத்தில் நான் தேடிய நூல் இதுதான் என்று கூறமுடியாது. நான் தேடிய நூல்களுள் இதுவும் ஒன்று என்று நிச்சயமாகக் கூறலாம்.

## 27 • கடந்த கால சென்னையைக் காட்டும் ஒரு கலைடாஸ்கோப்

• • • முனைவர் தேமொழி

**மெட்ராஸ் 1726**
**பெஞ்சமின் சூல்ட்சே (Benjamin Schultze)**
**ஜெர்மனியில் இருந்து தமிழில் மொழிபெயர்ப்பு:**
**முனைவர் க. சுபாஷிணி**
**காலச்சுவடு பதிப்பகம்**
**பக்கங்கள்: 216**
**ஆகஸ்ட் 2021**
**ISBN: 978-93-91093-97-6**




**கடந்த கால சென்னையைக் காட்டும் ஒரு கலைடாஸ்கோப் – ‘மெட்ராஸ் 1726’ நூல் திறனாய்வுக் கட்டுரை -**

பொது ஆண்டு 1500களுக்குப் பிறகு முதல் அலையில் இந்தியா வந்த ஐரோப்பியர்களது வருகையின் முதன்மை நோக்கமாக இருந்தது சமயம் பரப்புதல் என்றாலும், ஐரோப்பியக் கிறித்துவச் சமயப் பணியாளர்கள் தமிழ் மண்ணில் ஆற்றிய பொதுநலச் சேவைகளும், தமிழ்ப்பணிகளும், கல்விப்பணிகளும் குறிப்பிடத்தக்கவை என்பது மறுக்க முடியாத ஓர் உண்மை. இதைக் கருத்தில், கொண்டு கல்வி அனைவருக்கும் கிடைத்திராத கடந்த சில நூற்றாண்டுகளில்,

தமிழகத்தில் பேதமின்றி அனைவரும் கல்வி பயில தக்க ஏற்பாடுகளையும் கல்விக்கூடங்களையும் உருவாக்கி ஒடுக்கப்பட்டிருந்த பிரிவினருக்குக் கல்வி வழங்கிய ஜெர்மானியச் சமயப்பணியாளர்களுக்கு இந்த நூலைக் காணிக்கை செய்துள்ளார் நூலாசிரியர். போற்றத்தக்கச் செயல் இது. அத்தகைய கிறித்துவ இறைப்பணியாளர்களுள் ஒருவரான பெஞ்சமின் சூல்ட்சே என்பவர் எழுதிய சென்னை நகர் மக்களின் வாழ்வியல் குறிப்புகளின் தொகுப்புதான் காலச்சுவடு பதிப்பகம் மூலம் தமிழ்மரபு அறக்கட்டளையின் முனைவர் க. சுபாஷிணி வெளியிட்டுள்ள 'மெட்ராஸ் 1726' என்ற நூல்.

பெஞ்சமின் சூல்ட்சே எழுதிய 'மெட்ராஸ் ஸ்டாட்' என்ற ஜெர்மானிய மொழி நூல் இந்த 'மெட்ராஸ் 1726' என்ற நூலாக உருவாகியுள்ளது. ஓர் ஐரோப்பியராகத் தன் பார்வையில் சென்னை குறித்துத் தான் அறிந்தவற்றை பெஞ்சமின் சூல்ட்சே மற்ற ஐரோப்பியச் சமயப் பணியாளர்களுக்கு உதவும் நோக்கில் எழுதிய நூல் இது. இதன் மூலம் அக்கால சென்னை மக்களின் வாழ்வியலை, உணவுகளை, பழக்க வழக்கங்களை நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது. நாட்டார் வழக்காற்றியல் ஆய்வாளர் பேராசிரியர் ஆ.சிவசுப்ரமணியன் அவர்கள் முன்னுரையையும், ஜெர்மானிய ஆய்வாளர் பேராயர் ஆனந்த் அமலதாஸ் அவர்கள் அணிந்துரையும் வழங்கி தங்கள் துறைசார் வல்லுநர்கள் பார்வையில் கருத்துக்களை வைத்திருப்பது நூலுக்கு அணி செய்வதாக அமைந்துள்ளது என்பதை மறுக்க முடியாது. ஐரோப்பியரின் எதையும் ஆவணப்படுத்தும் வழக்கம் கடந்த நூற்றாண்டுகளில் இந்தியாவில் வாழ்ந்த சாதாரண மாக்களின் வாழ்வியலைப் பதிவுசெய்துள்ளது. 16ஆம் நூற்றாண்டில் ஐரோப்பியர் வருகை, அவர்கள் கொணர்ந்த அச்சு இயந்திரம் ஆகியவற்றினால் காகித அச்சு ஆவணங்கள் வரலாற்றுத் தகவல்களைத் தந்து உதவின. ஐரோப்பியர் சமயம் பரப்ப, வணிகம் செய்ய, ஆட்சி செய்ய என்ற பல பரிமாணங்களில் இந்தியாவுடன் தொடர்பை வளர்த்துக் கொண்டதால் அவர்களின் ஆவணங்களும் சமயம், தனிமனித செயல்பாடுகள், நிர்வாகம் என்ற பிரிவுகளில் தமிழகத்தின் வரலாற்றுக்குச் சான்றுகள் தந்துள்ளன.

**பெஞ்சமின் சூல்ட்சேயும் அவரது சமயப் பணிகளும்:**

பெஞ்சமின் சூல்ட்சே (Benjamin Schultze, 1689-1760) என்ற ஜெர்மானிய நாட்டவர், 18 ஆம் நூற்றாண்டில் சீர்திருத்தக் கிறித்துவச் சபையின் போதகராக தரங்கம்பாடிக்கு 1719 ல் வந்து தனது 30 ஆம் அகவையில் சமயப் பணியைத் துவக்கினார். அவருடைய நாட்குறிப்புகளில் இருந்த தகவல்கள் இந்த நூலாக உருவாகியுள்ளது. இவரது முன்னோடியான ஜெர்மானிய மதகுரு 'பார்த்தலோமஸ் சீகன்பால்க்' மற்றும் 'க்ருண்டலர்' ஆகியோரின் மறைவுக்குப் பிறகு திருச்சபையின் தலைவர் பொறுப்பேற்றுக் கொண்டு, தமிழ் கற்றுக்கொண்டு அவர்களின் சமயப்பணியை தரங்கம்பாடியில் தொடர்ந்து முன்னெடுத்துச் சென்றவர் பெஞ்சமின் சூல்ட்சே. பின்னர் அங்கிருந்து சென்னையில் இருந்த எஸ். பி. சி. கே (Society for Promoting Christian Knowledge) என்ற கிறித்துவ அறிவை வளர்க்கும் அமைப்பின் சமயப் போதகர் பொறுப்பை ஏற்றுக் கொண்டு, 1726 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் தரங்கம்பாடியில்

இருந்து கடலூருக்குப் படகில் சென்று, பின்னர் அங்கிருந்து கால்நடையாக 1726 ஆம் ஆண்டு மே மாதம் சென்னைக்குச் சென்று சேர்ந்தார்.




பெஞ்சமின் சூல்ட்ஷே

இந்தப் பயணம் குறித்து அவர் எழுதிய குறிப்புகளையும், சென்னையில் அவர் 1726-1742 வரை பள்ளிகள் துவக்கி சமயப்பணிகள் செய்த பொழுது அவர் வாழ்ந்த காலத்தில் இருந்த சென்னை குறித்து, சென்னை மக்கள் வாழ்வியல் குறித்து அவர் அறிந்தவற்றையும் நாட்குறிப்புகளை அடிப்படையாகக் கொண்டு ஜெர்மன் மொழியில் 'மெட்ராஸ் ஸ்டாட்' (மெட்ராஸ் நகரம்) என்று எழுதி 1950 ஆம் ஆண்டு ஜெர்மானிய மொழியில் பெஞ்சமின் சூல்ட்சே வெளியிட்டார். முன்னர் ஆங்கிலத்திலும், தெலுங்கிலும் பெஞ்சமின் சூல்ட்சே அவர்களால் இந்த நூல் வெளியிடப்பட்டுள்ளது. தமது 50 ஆம் வயதுகளில், உடல் நலம் தளர்வுற்ற காரணத்தால், மெட்ராசில் சமயப் பணிகள் தொடர்வதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்து, முறைப்படி பொறுப்பைப் பின் வந்தவரிடம் ஒப்படைத்துவிட்டு, 1743 ஆண்டு ஜனவரி 5 ம் தேதி மெட்ராஸ் திருச்சபையில் கிறிஸ்துமஸ் வழிபாட்டில் பங்கேற்றுவிட்டு (300 ஆண்டுகளுக்கு முன்னர் பண்டைய வழக்கப்படி ஜனவரி 5 ஆம் தேதியன்று கிறிஸ்துமஸ் கொண்டாடப்பட்டது) தாய்நாட்டுக்குக் கப்பல் ஏறுகிறார் பெஞ்சமின் சூல்ட்சே. தாய்நாட்டில் ஒரு 17 ஆண்டுகள் சமயப்பணியில் தம்மை

ஈடுபடுத்திக் கொண்டும், தனது இந்திய வாழ்க்கையில் அறிந்தவற்றைத் தொகுத்து நூல்கள் வெளியிட்ட பின்னர் அவர் தம் 70 ஆம் வயதில் உயிர்நீக்கிறார்.

தரங்கம்பாடியில் இருந்து கடலூருக்குச் செல்லுதல், பிறகு கடலூரில், பரங்கிப்பேட்டையில், சதுரங்கப்பட்டினத்தில் வாழ்க்கை, பின்னர் அங்கிருந்து மெட்ராஸ் என்ற சென்னைக்குச் செல்வது என்று நூல் விரிகிறது. பெஞ்சமின் சூல்ட்சேக்கு மெட்ராசில் கிடைத்த அனுபவங்கள், அவரால் அங்கு திருச்சபை துவக்கப்பட்ட வரலாறு, பின்னர் அங்கிருந்து அவர் மீண்டும் ஜெர்மனிக்குத் திரும்புதல் ஆகிய நிகழ்ச்சிகளை நூலின் முதல் பகுதி 66 பக்கங்களில் விவரிக்கிறது. அதாவது சுருக்கமாக பெஞ்சமின் சூல்ட்சே என்பவர் யார், அவருடைய பணி என்ன, அவரது வாழ்க்கை வரலாறு என்ன என்று அவரை நமக்கு அறிமுகப்படுத்தும் பகுதி இது.

சுவையான தகவல்கள் நிறைந்த பகுதி நூலின் 'உரையாடல்கள்' என்ற இரண்டாம் பகுதி. இது பெஞ்சமின் சூல்ட்சே அவர்கள் எழுதிய குறிப்புகளின் மொழிபெயர்ப்புப் பகுதி. இப்பகுதி 30 தலைப்புகளில் சென்னை மக்களின் அக்கால நடைமுறை வாழ்க்கைக் கூறுகளை உள்ளடக்கியுள்ளது. 1733 மற்றும் 1746 ஆம் ஆண்டுகளில் வரையப்பட்ட சென்னை மாநகரின் வரைபடங்களும் பெஞ்சமின் சூல்ட்சே அவர்களின் ஓவியமும் பின்னிணைப்புகளாக நூலில் கொடுக்கப்பட்டுள்ளது. வரைபடங்களைப் பின்னிணைப்பாக கொடுத்ததற்கு மாறாக, இரண்டாம் பகுதியான உரையாடல் பகுதி தொடங்கும் முன்னர் கொடுத்திருக்கலாம். படத்தையும் அதற்கான விளக்கத்தையும் படித்துவிட்டு உரையாடல்களைப் படிப்பது உதவியாக இருக்கும். அவ்வாறே, பெஞ்சமின் சூல்ட்சே உருவப்படத்தையும் அவரைப் பற்றி விளக்கும் முதல் பகுதியின் தொடக்கத்தில் இணைத்திருந்தால் சிறப்பாகவும் உதவியாகவும் இருக்கும் என்பது எனது கருத்து.

இரண்டாம் பகுதியில் உள்ள 30 உரையாடல்களுக்கும் தனது மொழிபெயர்ப்புடன் உரையாடலின் சூழலையும் கருத்தையும் விளக்கும் பொருட்டு, உரையாடலின் தொடக்கத்தில் 'சூழல்' என்ற பகுதியும், இறுதியில் 'உரையாடல் கூறும் செய்திகள்' என்ற பகுதியும் நூலாசிரியரால் இணைக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. மூல நூலில் இடம் பெறாத இந்த விளக்கப் பகுதிகளைப் படிப்பவருக்குக் கொடுத்துதவிய முறை பாராட்டிற்குரியது.

இந்த நூலின் மூலம் சென்னை குறித்துப் படிப்பவர்கள், அட அப்பொழுதே அப்படியா என்று வியக்கும் பல செய்திகளை மனதில் நிறுத்துவார்கள் என்பதில் ஐயமில்லை. பல்வேறு பண்பாட்டினர் கூடுமிடமாகவும், வணிகத்தின் தலைமை நகராகவும் சென்னை விளங்கியதால் அக்காலத்திலேயே ஒரு பெருநகரம் என்பதன் அறிகுறியாக 1725களில், அதாவது 300 ஆண்டுகளுக்கு முன்னரே சென்னையில் 23 மொழிகள் பேசப்பட்டுள்ள நிலை இருந்திருக்கிறது என்ற வியப்பிற்குரிய செய்தியை பெஞ்சமின் சூல்ட்சே தனது குறிப்பில் பதிவு செய்துள்ளார்.

ஐரோப்பாவில் இருந்து கப்பலில் சென்னை வந்து சேர குறைந்தது ஒரு நான்கு மாதங்களுக்கும் மேலான பயணக் காலம் தேவைப்பட்டுள்ளது. அக்காலத்திலேயே உலகின் எல்லா நாட்டைச் சேர்ந்தவர்களும் சென்னையில் வாழ்ந்திருக்கிறார்கள். துபாஷி என்ற இருமொழி அறிந்தவர்கள் மாதச் சம்பளம் பெறும் மொழிபெயர்ப்பாளர்களாகப் பணிபுரிந்து ஐரோப்பியர்கள் உள்ளூர் மக்களுடன் உரையாட உதவியுள்ளார்கள். வெள்ளையர்கள் செயிண்ட் ஜார்ஜ் கோட்டையின் உள்ளே அமைந்திருந்த வெள்ளையர் நகரிலும், கோட்டைச் சுவருக்கு வெளியே இருந்த கறுப்பர் நகரில் உள்ளூர் மக்களும் வாழ்ந்திருக்கிறார்கள். பல்லக்கு, குதிரை, எருமை, கழுதை, எருது, ஒட்டகம், வண்டி போன்றவற்றை மக்கள் பயணத்திற்காகப் பயன் கொண்டுள்ளார்கள். கழுதை, குதிரை, எருமை, எருது எனத் தங்கள் தேவைக்கேற்ப விலங்குகளை வண்டி இழுக்கப் பயன்படுத்தி உள்ளார்கள். மலைப் பாம்பு, பெருச்சாளி, கிளி, அணில், நாய், எறும்பு, கொசு போன்ற உயிரினங்கள் ஊரில் இருந்துள்ளன.

முத்தியால் பேட்டை மற்றும் பெத்தநாயக்கன் பேட்டை பகுதிகளில் நிறைய தோட்டங்கள் இருந்துள்ளன. உயர் அதிகாரிகளும் மேல்தட்டு மக்கள் போன்றோரும் பயணிக்கும் பல்லக்கு, அதைச் செய்ய ஆகும் செலவு, பல்லக்கு தூக்குவோருக்காக அரசு நிர்ணயித்த அடிப்படை ஊதியம் போன்றவற்றையும் அறிந்து கொள்ளமுடிகிறது. ஐரோப்பியர்கள் ஏறக்குறைய தினமும் பன்றி இறைச்சி சாப்பிட்டுள்ளார்கள். வீட்டு வேலைக்கு வேலைக்காரச் சிறுவர்கள், நீர் கொண்டுவரும் பணிப்பெண்கள், சமையற்காரர், தோட்டக்காரர், குதிரையைப் பராமரிப்பவர் என பல வகைப் பணிகளுக்கும் பணியாளர்கள் ஐரோப்பியர்கள் இல்லத்தில் உதவிக்கு இருந்துள்ளனர். சில சமையற்காரர்கள் களவாடும் பண்புடனும் இருந்துள்ளனர். ஊரில் செல்வந்தர்கள் வீட்டில் அடிமைகளும் கூட இருந்துள்ளனர். பிச்சைக்காரர்களும் அவர்களுக்கு உணவளிப்போரும் சென்னையில் இருந்துள்ளனர்.

அன்றாடச் சமையலுக்கும் மற்றும் வீட்டுத் தேவைகளுக்கும் வேண்டிய பொருட்கள் யாவை, அவை சென்னை நகரில் எங்கெங்கு கிடைக்கும், அவை என்ன விலை இருக்கும் என்று பணிப்பெண்ணுடன் நடத்தும் பல உரையாடல்கள் மூலம் கொடுக்கப்படுகிறது. சரக்கு கிடைக்கும் நிலைக்கு ஏற்ப வணிகர்கள் சந்தையில் பொருளின் விலையை ஏற்றி இறக்குவதும், விலை பேரம் பேசுவதும் அன்றும் வாடிக்கையாக இருந்திருக்கிறது, எந்தப் பொருட்களாக இருந்தாலும், நகைகள் உட்படப் பேரம்தான் (செய்கூலி சேதாரம் போன்றவை இருந்ததா என அறிய ஆர்வம் மேலிடுவதைத் தவிர்க்க முடியவில்லை). புழக்கத்தில் இருந்த நாணயங்களையும் அவற்றின் மதிப்பையும், வடிவத்தையும், அவை உருவாக்கப்பட்ட அக்கசாலைகள் எங்கிருந்தன என்பது வரையிலும் நூலில் குறிப்புகள் கிடைக்கின்றன. மக்களுக்குக் கொசுவலைகள் தேவைப்பட்டுள்ளன. அச்சு வேலை, சரிகை வேலை செய்யப்பட்ட துணிகளையும், பருத்தி பட்டுத் துணிகளையும் உள்ளூர்க் கடைகளில் வாங்கி, உள்ளூர் தையற்காரரிடம் கொடுத்து ஐரோப்பியர்கள் தாங்கள் உடுக்கும் வகை ஆடைகளாகத் தயாரித்து அணிந்திருக்கின்றனர்.

வண்ணார்கள் துணிகளைப் பிரித்தறிய துணிகளில் குறியீடுகள் பயன் படுத்தி உள்ளார்கள். துவைக்க வரும் துணிகளை உரிமையாளருக்குத் தெரியாமல் வாடகைக்குப் பிறருக்குக் கொடுத்துள்ளார்கள். திருமணம் என்று பதின்ம வயது பிள்ளைகளுக்குத் திருமணம் நடத்தி, அந்த விழாவிற்காக ஏராளமான செலவு செய்து, கடமை என்று கருதி 5000 பார்ப்பனர்களுக்கு 5 நாட்களுக்கு வகைவகையாக உணவுகள் படைக்கும் வழக்கம் இருந்திருக்கிறது. வாணவேடிக்கைகளும் இசைக் கச்சேரியும் ஊர்வலமும் திருமண விழாவில் இடம் பெற்றுள்ளன. விழாவில் பரிமாறப்பட்ட உணவுகளின் வகைகளும், கேளிக்கைக்கு விட்ட பட்டாசுகளின் வகைகளும் அவற்றின் விலைகளும், இசைக்கச்சேரி நிகழ்த்திய கலைஞர்களும் அவர்கள் இசைத்த இசைக் கருவிகளின் வகைகளும், அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட ஊதியம் என ஏராளமான மலைக்க வைக்கும் திருமணவிழா குறிப்புகள் மட்டுமல்ல இறப்புச் சடங்குகள் பற்றிய குறிப்புகளும் கூட இடம் பெற்றுள்ளது இந்த நூலில்.

உள்ளூர் மக்கள் ஐரோப்பியர்களை அவர்களது முகத்திற்கு முன்னர் புகழ்ந்து பேசியும், பின்னர் அவர்கள் இல்லாத பொழுது தூற்றுவதும் ஏமாற்றுவதும் வழக்கமாகக் கொண்டவர்களாக இருக்கிறார்கள் என்று ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்று வந்த இந்தியர் ஒருவர் இருநாட்டு மக்களின் பண்புகளை ஒப்பிட்டுக் குறிப்பிடுவதாகவும் காட்டப்படுகிறது. ஊழியர்கள் மற்றொரு ஊழியரைப் பற்றி கோள் சொல்வது, நீதிமன்றத்தில் பொய்யுரைப்பது போன்றவையும் நூலில் பதிவாகியுள்ளது. நீரை விலைகொடுத்து வாங்கும் நிலை, கள்ளச்சந்தை, பதுக்கல் போன்றவற்றைச் சுயநலம் கொண்ட அரசர்களும் அவர்களது அதிகாரிகளுமே செய்து மக்களை வறுமை நிலைக்குத் தள்ளி புலம் பெயர்ந்து ஓட வைத்திருக்கிறார்கள் என அறிய முடிகிறது.

கொடை அளிப்பவர் தங்களுக்குப் புண்ணியம் என்று நோக்கில் மட்டுமே அளிக்கிறார்கள் என்பது போன்ற மக்களின் மனப்பான்மை இன்றும் வழக்கமே. இந்த நூலின் இறுதிப் பகுதியில் உள்ள சில உரையாடல்களில் இந்தியாவில் பல ஆண்டுகளாக வாழும் ஐரோப்பியர் ஒருவர், கப்பலில் வந்திறங்கிய தனது சகோதரர் ஒருவரையும், இங்கு வாழும் ஐரோப்பியரை மணக்க வரும் சகோதரியையும் சந்திக்கிறார். இந்தப் பெரிய அண்ணன் தனது தம்பிக்கும் தங்கைக்கும் இந்திய உணவுவகைகள், உணவுக்காகப் பயன்படும் விலங்குகள் மீன் பறவை வகைகள், மதுபான வகைகள், தமிழ்நாட்டில் பயிராகும் காய் கனிகள், மக்கள் வாழும் வீடுகளின் அமைப்பு, தமிழ்ப்பெண்களின் உயர் பண்புகள், பசுக்களை வணங்கும் வழக்கம், இளவயது திருமணம், குடும்ப வாழ்க்கை, இறப்பு, கைம்பெண்கள் நிலை, ஏற்றுமதி இறக்குமதியாகும் பொருட்கள் அவற்றின் விலை என்று அறியத்தரும் செய்திகள் ஏராளம். அவற்றால் 1700களில் தமிழ்நாட்டு மக்கள் குறித்து நாம் அறிவதும் ஏராளம்... ஏராளம்.

மக்களின் வாழ்வு குறித்து இவ்வளவு விவரங்களை ஓர் அயல்நாட்டார் பதிவு செய்திருக்க, சங்க காலத்திற்குப் பின்னர் வந்த இலக்கியங்களில் இது போன்று பதியப்பட்ட ஒரு நிலை இல்லாது போய், குறைந்தது ஒரு 1500 ஆண்டுகளுக்கு நம் தமிழக மக்கள் எவ்வாறு வாழ்ந்தார்கள், சராசரி மக்களின் வாழ்க்கைமுறை எப்படிப்பட்டது என்ற குறிப்புகள் அதிகம் இல்லாத ஓர் இலக்கிய வெற்றிடம் நெஞ்சைக் கனக்க வைக்கிறது. பெரியார் தமிழ் இலக்கியவாதிகளின் அக்கறையின்மை குறித்தும், எழுதப்பட்ட இலக்கியங்களினால் விளைந்த பயன் குறித்தும் கொண்ட சினமும் புரிகிறது. அன்றைய சங்ககாலப் பட்டினப் பாலை மூலம் காவிரிப்பூம்பட்டினத்து நகர்வளம் மக்கள் வாழ்க்கை முறை அறிந்து கொள்ள உதவினார் கடியலூர் உருத்திரங்கண்ணனார். 18 ஆம் நூற்றாண்டு மதராசபட்டினத்தின் நகர்வளம் மக்கள் வாழ்க்கை முறையை நாம் அறிந்து கொள்ள உதவியுள்ளார் பெஞ்சமின் சூல்ட்சே.

ஓர் இனத்தின் வரலாறு என்பது ஆட்சியாளர்களின் வெற்றி குறித்த வரலாறு மட்டுமல்ல, அவர்கள் காலத்தில் வாழ்ந்த குடிமக்களின் இயல்பு வாழ்வையும் அறியத் தருவதாக வரலாறு இருக்க வேண்டும். இல்லாவிடில் அந்த வரலாறு முழுமையான வரலாறாக அமையாது. பல ஐரோப்பியர்களின் ஆவணக் குறிப்புகளில் கிடைக்கப் பெறும் தமிழக வரலாற்றுச் செய்திகளைத் தவிர்த்து வரலாறு எழுதுவதும் வரலாற்றை முழுமை பெறச் செய்யாது என்ற நோக்கில் தன்னால் இயன்ற வழியில், தான் பெற்ற ஜெர்மானிய மொழி அறிவு மற்றும் ஐரோப்பிய ஆவணப் பாதுகாப்பகங்கள், நூலகத் தொடர்புகளைப் பயனுக்குக் கொண்டுவரும் வகையில் சென்னை மாநகரின் வரலாற்றுத் தகவல் நிறைந்த சிறந்த நூலொன்றை வெளியிட்டுள்ளார் சுபாஷிணி. அதையும் இந்த ஆண்டின் சென்னை நாள் கொண்டாட்டத்தில் வெளியிட்டது மிகவும் பொருத்தம். அடுத்து வரும் ஆண்டுகளில் சென்னை நாள் கொண்டாட்டங்களில் பலர் மெட்ராஸ் 1726 நூல் தரும் வரலாற்றுச் செய்திகளை நினைவுகூர்வார்கள் என்று எதிர்பார்க்கலாம்.

இந்த நூல் கடந்த கால சென்னையைக் காட்டும் ஒரு கலைடாஸ்கோப். 18 ஆம் நூற்றாண்டு மெட்ராஸ் மக்களின் வாழ்க்கை எவ்வாறு இருந்தது என்று இந்த நூலின் மூலம் அறியத் தந்த முனைவர் க. சுபாஷிணி அவர்களுக்குப் பாராட்டுகள்.

நன்றி: சிறகு

## 28 • பண்பாட்டுப் புரிதலில் ஒரு மாற்றுக் கண்ணோட்டம்

• • • முனைவர் ஆனந்த் அமலதாஸ்

“பண்பாடு” என்பது என்ன என்பதைக் கொஞ்சம் அலசிப் பார்க்கலாம். பண்பாடு என்பது ஏதோ ஒருவகையான கட்டிடக்கலை என்று பல கோபுரங்களை மட்டும் எண்ணாமல் அல்லது சித்திரம், சிலைகள், ஆடல் பாடல் கலைகள் என்று குறுகிய கண்ணோட்டத்தோடு பார்க்காமல் விரிந்த அளவில் கணிக்கும் பொழுது அது நமது வாழ்வை அமைக்கும் அடிப்படை கோட்பாட்டைக் குறிக்கும் எனலாம்.

பண்பாடு மாறிக் கொண்டேயிருக்கும். நிலையான பண்பாட்டு அடையாளம் என்று ஏதும் இல்லை. அதன் சில அடையாளங்களைக் குறியிட்டு அப்படியே சிலையாக்கி அருங்காட்சியகத்தில் வைத்து விட்டால் அது செத்தது எனலாம். எப்படி ஒரு மொழி பேசப்படவில்லை யென்றால் அது செத்த மொழி என்போமோ அதுபோலத்தான் பண்பாடும்.

இப்படி பண்பாட்டின் சிறப்பை அடையாளப் படுத்தி ஆராய்ச்சியாளர்கள் அட்டவணை போட்டுக் காட்டுவார்கள். அதில் ஒரு தெளிவு இருக்கும். இது உண்மைதான். ஆனால் அப்படி அவைகளை ஆவணக்கூடங்களில் வைத்து விட்டால் இது பெரிதா, மற்றவர்களுடையது பெரிதா என்ற சர்ச்சைக்கு இட்டுச் சென்று பண்பாட்டின் மோதலில் முடியும். அதைத்தான் சாமுவேல் ஹண்டிங்டன் தனது “பண்பாட்டின் மோதல்” (Clash of Civilisation) என்ற நூலில் குறிக்கின்றார்.

ஆனால் பண்பாடு என்பதை உண்மையில் பிரித்துக் காட்ட முடியும். அதற்குத் தனித்தன்மை உண்டு. அதனால் மற்றவர்களோடு உறவு கொள்ளும் இணைப்புப் பாலம் உடைந்து போகவில்லை. ஏனெனில் அந்தத் தொடர்பு உறவினால் தான் வாழ்கிறது, வளர்கிறது. இது தொடர்நிலை. எடுத்துக்காட்டாக, தமிழ்ப் பண்பாட்டுக்கு என்ன அடையாளம் காட்டலாம்? இளங்கோ அடிகளா? கம்பனா? பாரதியா? பாரதிதாசனா? இவர்களில் யார் தமிழ்ப் பண்பாட்டின் பிரதிநிதி? இவர்கள் ஒவ்வொருவரின் பின்னணி வேறு, சிந்தனை முறை வேறு. ஒவ்வொருவரும் தனித்துவம் கொண்டவர்கள். இருப்பினும் இவர்கள் தமிழ்ப் பண்பாட்டின் தொடர் உறவின் பங்காளிகள்.

இவர்கள் ஒரு வலையில் உள்ள முடிச்சுகள் மாதிரி. ஒவ்வொரு முடிச்சும் முக்கியம். இந்த முடிச்சுகளை எல்லாம் வெட்டிவிட்டால் வலையே பாழடைந்து விடும். ஆனால் ஒவ்வொரு முடிச்சும் தனியாக இருந்தாலும் அதற்கு மதிப்பு இல்லை. அது போலத் தான் பண்பாட்டின் பங்காளிகளும்.

பண்பாடு என்பது ஒரு குறிப்பிட்ட இடத்தில், நிலப்பகுதியில் தான் வளரும். குறிஞ்சி மலரோ, மல்லிகை மொட்டோ தானாக மட்டும் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில், நிலப்பரப்பில்தான் தோன்றும். பண்பாடும் அப்படித்தான். வரலாறு படைப்பவனும் வரலாறு எழுதுபவனும் தனிப்பட்ட மனிதர்கள்தான். ஒட்டுமொத்தமாக எதுவும் எழாது. ஒரு செயற்குழு அமைத்து வரலாறு எழுதுவதில்லை. நமது திணைக்கோட்பாட்டை எடுத்துக்காட்டாய் சொல்லலாம். ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பில் தோன்றியது என்பது அதன் தனித்துவம். அதன் பெருமை.

முரண்பாடான கண்ணோட்டம் கொண்டவர்களானாலும் நாம் எல்லோரும் கூடி வாழ முடியும். ஒரே இனத்தவர் என்பதால் மட்டும் அல்ல, ஒரே சமயத்தவர் என்பதால் அல்ல, மனிதப் பண்புள்ளவர் என்பதால். நம்மிடம் ஏற்றத்தாழ்வு உண்டு. கணக்கியல்படி (Mathematically) நாம் சமமானவர்கள் என்றல்ல. சமத்துவம் என்பது திறமைகளின் அடிப்படையில் அல்ல. நாம் தேடும் சமத்துவம் மனிதனின் தனித்துவ மகத்துவத்தின் மதிப்பின் அடிப்படையில் உள்ளது. மனிதர்களாகிய நாம் சமமானவர்கள் (As persons we are equal). சமுதாய அளவில் ஏற்றத் தாழ்வு இருக்கலாம். இது நிலையானது அல்ல. அது மாற்றத்திற்கு உட்பட்டது. ஆனால் தனிமனிதனின் மதிப்பு, அவன் தனித்துவம் நிலையானது. "சொர்க்க வாசலுக்குமுன் தோட்டியும் சரி தொண்டைமானும் சரி" என்பது தே நோபிலி சுட்டிக்காட்டிய ஒரு பழமொழி. இது சாதி-சமயப் பூசல்களிடையே அவர் கொடுத்த பதில். சமூக வேறுபாட்டை, ஏற்றத்தாழ்வை இயற்கையின் நியதி, கர்மம், தெய்வ பராமரிப்பு என்று பலவிதமாய் விளக்கம் கொடுத்தாலும் அடிப்படை உண்மை நிலை ஒன்றுதான்.

முதலில் நமது அடிப்படைத் தேவைகள் நிறைவுபெற வேண்டும். அவை யாவை? உணவு – உடை – உறையும் வீடு – என்று சொல்வதுண்டு. ஆனால் இவை இருப்பதால் மட்டும் நிறைவான வாழ்வு வந்துவிடாது. மகிழ்ச்சி நிறைந்து வழியாது. ஏனெனில் மனிதன் மனிதனாய் வாழ மனிதனுக்கு இதற்கும் அடிப்படையான தேவைகள் உண்டு. மற்றவர் என்னை ஏற்றுக் கொள்ள வேண்டும்; என்னை மதிக்க வேண்டும்; உறவு கொள்ள இடம் கொடுக்க வேண்டும். அது இல்லாமல் மனிதனாய் வாழ முடியாது. நமது முரண்பாடுகள், எதிர்ப்பு போராட்டங்கள் எல்லாம் இங்குதான் தொடங்குகின்றன. மேல்நிலைக்கு, உயர்படிக்கு ஏற வேண்டும். சமூக அளவில், உணர்ச்சி அளவில், சிந்தனை அளவில், ஆன்மீக அளவில் அது கிடைக்கும் வரை நாம் ஆதங்கத்தோடு அலைந்து கொண்டுதான் இருப்போம்.

ஒரு சமூகத்தில் கூடிவாழும் பொழுது ஓர் அமைப்பு வேண்டும். பல் வேறு பணிகள் செய்ய அதற்கு ஏற்ற ஆட்கள் வேண்டும். உலக வங்கி தொடங்கி, கிராமப் பஞ்சாயத்து வரை ஒருவர் நிர்வாகப் பொறுப்பில் இருக்க வேண்டும். அவருக்கடியில் பல துறைகளில் மற்றவர் பணி செய்ய வேண்டும். இத்தகைய அமைப்பில் மேலினம், கீழினம் என்பதற்கு இடமில்லை. பல்வேறு தொழிலோ பணியோ செய்யலாம், செய்யவும் வேண்டும். அதனால் தனிப்பட்டவரின் மதிப்பும் தனிமனிதனின் தனித்தன்மையும் இழந்துபோகாது.

பண்பாடு என்பது தனிமனிதனின் பெருமையை, சிறப்பை நிலைநாட்ட உதவுவதற்கு இல்லை. அப்படி நடக்கின்றது என்றால் அது ஓர் அபத்தம் (Perversion). தனக்காக போஸ்டர் ஒட்டி, தனது உருவத்தைப் பெரிதாகக் கருதுவதில்தான் பாசிசம் தொடங்குகிறது.

பண்பாடு ஓர் ஊற்று போன்ற பொதுச்சொத்து. அது இதற்கு மாறாக பணி செய்கிறது. இத்தகைய குறுகிய வேலியைத் தாண்டிக் கட்டமைப்புகளை உடைத்தெறிவது, உலகோடு ஒத்து வாழும் நிலைக்கு, தனது சுயநலக் கோட்பாட்டுக்கு வெளியே வாழ இடம் தேடுகிறது. தனிப்பட்டவர் தளத்திலிருந்து பொதுத் தளத்தைத் தேடுவது.

ஊற்றுச்சுனை போன்ற பொதுச்சொத்துக்கு விளம்பரம் தேவையில்லை. பிரச்சாரம் செய்து ஆட்கள் சேகரிக்க வேண்டியதில்லை. கோஷம் எழுப்பத் தேவையில்லை. மதிப்பீடுகள் வேறு, பொதுச் சொத்து (Resources) வேறு. மதிப்பீடுகள் ஆட்களைச் சேகரிக்கும். போதகர்கள் வேண்டும். சமய மதிப்பீடுகளை நிலை நாட்டுவது போல் ஆகிவிடும்.

இந்தியப் பண்பாடு என்பது பல மரபுகளால் உருவாக்கப்பட்ட சொத்து. பன்மைத்தனம் பெற்றது. ஏதோ ஒரு சமயம், ஓர் இனம், ஒரு சிந்தனைக் கோட்பாட்டால் உருவானது அல்ல. பலரும் இதன் பங்காளிகள், பங்கு அளித்தவர்கள் இடையே வேறுபாடுகள் உண்டு. அதனால் அவர்கள் எதிரிகள் அல்ல. அவர்கள் பண்பாட்டின் ஊற்றுக்கள்.

பல நதிகள் பாய்ந்தோடி கடலில் சங்கமம் ஆவது போல பல மரபுகள், கோட்பாடுகள் சேர்ந்து உருவானது இந்தியப் பண்பாடு. ஒவ்வொன்றும் பண்பாட்டின் வளர்ச்சியில் பங்கெடுத்திருக்கிறது, செழிப்படைய வழி வகுத்தது, புதிய கண்ணோட்டத்தினை இன்றும் தூண்டுகின்றது.

இப்பொழுது ஐரோப்பாவிலும் பெரிய குழப்பம். அவர்கள் உருவாக்கிய ஐரோப்பிய ஒன்றியம் உடைந்து கொண்டிருக்கிறது. அதற்குப் பல காரணங்கள் உண்டு. பிரான்ஸ் நாட்டு சிந்தனையாளர் பிரான்சுவா ஜீலியன் (2017) சொல்வது இது. தொடக்கத்திலேயே ஐரோப்பிய நாடுகளை ஒன்றிணைக்கும் சக்தி எது, என்பது தெளிவில்லை. ஒரு சிலர் கருத்து: கிறிஸ்துவ நம்பிக்கையும் அதன்வழி எழுந்த பண்பாட்டுக் கோட்பாடு என்றனர். மற்றவர் அதற்கு மாறாக, இல்லை, சமயம் தாண்டிய பகுத்தறிவுப் பண்பாடு (Enlightenment) என்றனர். அவர்களுக்குள் ஒன்றித்த தெளிவு இல்லை. அதனால் முகப்புரை (Preamble) இல்லாமலே ஐரோப்பிய ஒன்றியம் என்ற அமைப்பை உருவாக்கினார்கள். அதன் விளைவு இப்பொழுது தெரிகிறது. சமய நம்பிக்கையும், பகுத்தறிவும் முரண்பாடாகத் தெரியலாம். ஆனால் அவை இரண்டும் ஒன்றிணைந்து வாழ முடியும்.

நமது நாட்டில், நம் மத்தியில்; நடப்பதும் அப்படித்தான். நமது பண்பாட்டில் பல்வேறு பங்காளிகள்; அங்கத்தினர்கள் உண்டு. இப்பண்பாட்டின் சொத்து எல்லோருக்கும்

சொந்தம். வைதிக மரபு பெரியது. அதற்கென தனிவரலாறு உண்டு. ஆனால் அதன் ஆதிக்கத்தை நிலைநாட்ட மற்றவர்களை ஒழிக்கவேண்டும் என்பது ஏற்றுக்கொள்ள முடியாத வாதம். கடவுள் நம்பிக்கை கொண்டவர்களும் கடவுள் எதிர்ப்புவாதிகளும் கூடிவாழ முடியும், கூடிவாழ வேண்டும். அவர்களை ஒன்றிணைப்பது சமயம் சாராத அறநெறியின் அடிப்படையில் அமையவேண்டும்.

இயற்கையின் சொத்துக்கள், சுற்றம் சூழல் பாதிப்பு, அழிவு பற்றி பலர் கவலை கொண்டுள்ளனர். Bio-diversity அளவு குறைந்து கொண்டே போவது பற்றி பலர் ஆராய்ந்து அதைத்தடுக்க எடுத்து வரும் முயற்சிகளும் பாராட்டுக்குரியது. அதைப்போல ஏன் கலாச்சார அழிவுக்கு, பண்பாட்டுச் சிதைவுக்கு போதிய எதிர்ப்பு, பாதுகாக்கும் போதிய முயற்சிகள் இன்னும் எழவில்லை என்பது கேள்விக்குறியாய் இருக்கிறது.

எடுத்துக்காட்டாக இந்திய இஸ்லாமிய வரலாற்றைக் கவனிக்கலாம். சமய நல்லிணக்கத்திற்கு அவர்கள் பங்களிப்பு அதிகம். ஆல் பிரூனி முதன் முதலாக பாதஞ்சலி யோகம் என்ற சமஸ்கிருத நூலை அரபியில் மொழிபெயர்த்து குர்ஆனோடு நல்லிணக்கம் செய்தார். பிறகு அக்பர் பல்வேறு சமய பிரதிநிதிகளை அழைத்து உரையாடல் பண்பாட்டை உருவாக்கினார். அவருக்குப்பின் தாரா சிக்கோ 50 உபநிடதங்களைப் பாரசீக மொழியில் மொழிபெயர்த்தார். அதன் வழியாக ஐரோப்பியர்கள் இந்த வரலாற்றைத் தெரிந்து கொள்ள வழி வகுத்தார். இத்தகைய முயற்சிகள் இஸ்லாமிய மரபின் பங்களிப்பு.

இவ்வாறு இந்திய யூதர்களும்,; கிறித்தவர்களும், பிறகு இங்குக் குடியேறிய பாரசீகர்களும், பல்வேறு வகையில் இந்தியப் பண்பாட்டின் வளர்ச்சிக்குப் பங்களித்திருக்கின்றார்கள். இவர்கள் அந்நியர்கள் என்று சொல்லி இந்தியப் பண்பாட்டின் சொத்து எல்லாம் எங்களுக்குத்தான் சொந்தம் என ஒரு வர்க்கம் மட்டும் ஆதிக்கம் கொண்டாடும் மனநிலையும் செயல்முறையும் நம்மை ஒன்றிணைத்துக் கூடிவாழ வழிவகுக்காது. அழிவுக்குத்தான் இட்டுச்செல்லும்.

## 29 • ஐரோப்பிய தமிழியல் ஆராய்ச்சி அனுபவங்கள்: ஆனந்த் அமலதாஸ்

• • • முனைவர் க.சுபாஷிணி

நேர்காணல்: ஆனந்த் அமலதாஸ்;
சந்திப்பு: முனைவர் க. சுபாஷிணி



சுபா: இன்றைய சூழலில் விரல்விட்டு எண்ணக்கூடிய அளவில் ஐரோப்பிய மொழிகளைக் கற்று ஆராய்ந்த தமிழியல் ஆய்வாளர்களில் நீங்களும் ஒருவர். உங்களது ஐரோப்பிய மொழிபெயர்ப்புகள் ஐரோப்பியத் தமிழியல் துறையில் முக்கியத்துவம் பெறுபவை. உங்களுடைய ஆரம்பக்காலக் கல்விச் சூழல், பணிகள்பற்றிக் கூறுங்கள்.

ஆனந்த் அமலதாஸ்: நான் சிவகங்கை மாவட்ட விவசாயக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவன். சேசு சபையில் சேர விரும்பி 1962இல் அவர்கள் நடத்துகின்ற பயிற்சித் தளத்தில் சேர்ந்தேன். அங்கு ஆன்மீகப் பயிற்சியோடு இலத்தீன், கிரேக்க மொழிகளைக் கற்றுக்கொடுத்தார்கள். பிறகு சென்னை இலயோலா கல்லூரியில் பி.ஏ. ஆங்கில இலக்கியம் படித்தேன். அதன்பிறகு செண்பகனூரில் மூன்றாண்டுகள் மெய்யியல் பயின்றேன். பின்னர் முதுகலைப் படிப்புக்காகக் கர்நாடகத்தின் தார்வார் பல்கலைக்கழகத்தில் சமஸ்கிருதத்துறையில் படித்துவிட்டுத் திருச்சி தூய வளனார் கல்லூரியில் ஓர் ஆண்டு சமஸ்கிருத ஆசிரியராகப் பணிசெய்தேன். புதுடில்லியில் நான்கு ஆண்டுகள் இறையியல் படித்துவிட்டு 1977இல் முனைவர் பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் சேர்ந்தேன். அங்கு ஆய்வுக்கான எனது வாழ்வு தொடங்கியது.

சுபா: நீங்கள் எழுதிய நூல்கள்..

ஆ.அ: இதுவரை 28 நூல்களை எழுதியுள்ளேன். 25 நூல்களைத் தொகுத்து வெளியிட்டுள்ளேன். 150 கட்டுரைகள் வெளியாகியுள்ளன. இவை பெரும்பான்மையும் ஆங்கிலம், ஜெர்மன், தமிழ் மொழிகளில் உள்ளன. சில கட்டுரைகள் இத்தாலிய, பிரஞ்சு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

சுபா: நீங்கள் சமஸ்கிருத மொழி வல்லுநர். அம்மொழியைக் கற்றுக்கொள்ள ஏற்பட்ட ஆர்வம், அம்மொழியில் உங்களுக்கு ஏற்பட்ட அனுபவத்தைச் சொல்லுங்கள்.

ஆ.அ: எனக்கு ஆன்ம வழிகாட்டியாக இருந்த பாதர் இக்னேசியஸ் இருதயம் தூண்டுதலில் சமஸ்கிருதம் கற்கத் தொடங்கினேன். தார்வார் பல்கலைக்கழகத்தில் முதுகலைப் பட்டம் பெற்றபிறகு முனைவர் பட்டத்திற்காக சென்னைப் பல்கலைக்கழகத்தில் மூன்றாண்டுகள் ஆய்வு மேற்கொண்டேன். பின்னர் இந்த ஆராய்ச்சி 1981ஆம் ஆண்டு நிறைவுபெற்றது. இந்த ஆய்வு நூலைத் தீர்ப்பிடும் நடுவராக வியன்னா பல்கலைக்கழகப் பேராசிரியர் ஓபர்ஹாமர் நியமிக்கப்பட்டார். எனது ஆய்வுக்கு நல்ல மதிப்பெண் கொடுத்து வியன்னாவுக்கு அழைப்புவிடுத்தார். அதுதான் எனது ஐரோப்பிய அனுபவத்தின் தொடக்கம்.

சுபா: இது நிச்சயமாக உங்களுக்குச் சமஸ்கிருத ஆய்வுகளில் தொடர்ந்து ஈடுபடச் சிறந்த தொடக்கத்தை அமைத்திருக்கும் எனத் தெரிகிறது. இந்த அனுபவம் எத்தகைய பணிகளை நீங்கள் மேற்கொள்ள உதவியது? எங்கு உங்கள் பணியை முதலில் தொடங்கினீர்கள்?

ஆ.அ: சென்னை – திருவான்மியூரில் அமைந்துள்ள சத்திய நிலையம் மெய்யியல் துறையில் முப்பதாண்டுகளாகப் பேராசிரியராகப் பணியாற்றினேன். தொடக்கத்தில் 'இந்தியன் பிலாசபி என்று வேதாந்தச் சிந்தனையாளர்கள்' பற்றிப் பாடம் சொல்லிக்கொடுத்தேன். பிறகு பதினைந்தாண்டுகள் பகவத்கீதை சொல்லிக் கொடுத்தேன். ஒரு துறையில் பேராசிரியராகப் பணிசெய்யும்பொழுது பல்வேறு பாடங்களைக் கற்றுக்கொடுக்கும் வாய்ப்பு இருந்தது. அது எனது ஆராய்ச்சியோடு சேர்ந்து இருந்த என் ஆசிரியப்பணி. அதன் விளைவாக மாணவர்களுக்குத் துணையாகச் சில நூற்களை வெளியிட்டேன். அவை:

'Introduction to Aesthetics.' Satya Nilayam Publications. Chennai 2000.

'Introduction to Philosophy.' Satya Nilayam Publications, Chennai 2001.

'Philosophy of History', Satya Nilayam Publications, Chennai 2008.

'Philosophy of Education', Satya Nilayam Publications, Chennai 2008.

தமிழ்க் கவிதைகள், நாடகங்களில் பாடுவதிலும் பங்கெடுப்பதிலும் எனக்கு ஆர்வம் இருந்தது. ஆனால் முறையாகப் பயிற்சிபெற வாய்ப்புக் கிடைக்கவில்லை. அதனால் ஆராய்ச்சித் துறையில் கவனம் செலுத்தத் தொடங்கினேன்.

சுபா: உங்களுடைய முனைவர்பட்ட ஆய்வு, ஆராய்ச்சி என்னென்ன? எந்தத் துறையில் ஆய்வைத் தொடர விரும்பினீர்கள்?

ஆ.அ: முனைவர்பட்ட ஆராய்ச்சிக்கு, 'த்வனி' கோட்பாடு படிக்கத் தொடங்கினேன். தமிழில் இதை 'இறைச்சி' என்று சொல்வதுண்டு. காஷ்மீரைச் சார்ந்த ஆனந்தவர்தனா எழுதிய நூலான 'த்வன்யாலோகா'வை ஆய்வுசெய்யத் தொடங்கினேன். 'Philosophical Implications of Dhvani' (1984). பிறகு இது நூல்வடிவமாக வியன்னாவில் வெளியானது. அதன் தொடர்ச்சியாகப் பல கட்டுரைகள் எழுதினேன். 'த்வனி' கோட்பாட்டை ஒரு நூலின் உட்பொருளை வெளிக்காட்டும் முறையாக (hermeneutics) புரிந்துகொண்டேன். அதனடிப்படையில் இந்திய மரபில் உரை எழுதும் முறைகள் என்று பாடம் நடத்தினேன். அவற்றைத் தொகுத்துப் பாடப்புத்தகமாக வெளியிட்டேன். (Indian Exegesis, 2003).

சுபா: பொதுவாக முனைவர்பட்ட ஆய்வை மேற்கொள்ளும் பலரும் இத்தகைய துறைகளில் கவனம் செலுத்துவது குறைவு. அந்தவகையில் உங்களது ஆய்வு குறிப்பிடத்தக்கதாகவே அமைந்துள்ளதில் மாற்றுக்கருத்து இல்லை. ஆய்வுப்பணிக்குப் பின் எவ்வகையான ஆய்வுகளை மேற்கொண்டீர்கள்? அவை தொடர்பாக நீங்கள் எழுதிய நூல்களையும் சொல்லுங்கள்.

ஆ.அ: இங்கு நான் ரெய்மோன் பணிக்கர் பற்றிச் சொல்ல வேண்டும். அவர் 20ஆம் நூற்றாண்டின் இந்தியச் சிந்தனையாளர்களுள் முக்கியமானவர் – அவரது தந்தை கேரளத்தைச் சார்ந்த இந்துக் குடும்பத்தினர், தாய் இஸ்பானிய நாட்டுக் கத்தோலிக்கர்; இரு பண்பாட்டிலும் பங்கெடுத்து வளர்ந்தவர். அவரது நூல்கள் பதினெட்டுப் பகுதிகளாகத் தொகுக்கப்பட்டு இத்தாலியா, இஸ்பானியா, ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் ஆகிய ஐரோப்பிய மொழிகளில் வெளியாகிக்கொண்டிருக்கின்றன. அவரது சில நூல்களைத் தமிழருக்கு அறிமுகப்படுத்தினேன். 'ரெய்மோன் பணிக்கர் – வாழ்வும் வாக்கும்', 2014. அவரது பல்சமய உரையாடல் பண்பாட்டுக்கு நல்லதோர் எடுத்துக்காட்டு.

சுபா: உண்மைதான்...

ஆ.அ: வீரமாமுனிவரின் வாழ்க்கையில் திருக்குறளின் தாக்கம் பொதுவானது. அவர் எழுதிய எல்லா நூற்களிலும் திருக்குறள் புதைந்துகிடப்பதைப் பார்க்கலாம். எடுத்துக்காட்டாக, தேம்பாவணியில் மட்டும் சுமார் 75 குறள்களைத் தமது பாடல்களோடு ஒன்றிணைத்துள்ளார். இதன்வழியாகக் கிறித்தவக் கோட்பாடுகளுக்குத் தமிழ் நிறம் கொடுத்தார். இந்தப் பின்னணியில் இஞ்ஞாசியாரின் ஆன்மீகச் சிந்தனைகளைத் திருக்குறளோடு இணைத்து ஒரு நூல் வெளியிட்டுள்ளேன். அதன் பெயர் 'பன்மரபுப் பார்வையில் அறவழிச் சிந்தனைகள்' (2021). தமிழ்க் கிறித்தவர்கள் திருக்குறள் படித்திருக்கின்றார்கள்; இஞ்ஞாசியாரைக் கேள்விப்பட்டிருக்கிறார்கள்; ஆனால் இந்த இரண்டு கோட்பாடுகளுக்கிடையே உள்ள ஒற்றுமை பலருக்கும் தெரியாது. இந்த இருகோட்பாடுகளையும் இணைத்து ஒற்றுமையைக் காட்டவேண்டும் என்ற நோக்கத்துடன் எழுதப்பட்ட நூல் அது. சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால், கிறித்தவ ஆன்மீக முறை தமிழ் மரபுக்குப் புறம்பானது அல்ல என்று அவர்களுக்குக் காட்டும் நோக்கம் இதன் பின்னணி.

சுபா: பல்சமய ஆய்வுகள் என்ற ரீதியில் உங்கள் பங்களிப்பு ?

ஆ.அ: இருபதாண்டுகளாக Hindu-Christian Studies Bulletin என்ற முயற்சியில் ஈடுபட்டு இணை ஆசிரியராக இருந்தேன். கனடாவில் 'சமயங்கள் சந்திக்கின்றன' என்ற தலைப்பில் நடந்த கருத்தரங்கில் பங்கெடுத்தேன். பிறகுதான் இந்த முயற்சி தொடங்கியது. பிறகு திருவான்மியூரில் உள்ள சத்திய நிலையம் மெய்யியல் துறையில் தலைவராக இருக்கும்போது 'Journal of Intercultural Philosophy' என்ற வெளியீட்டைத் தொடங்கி ஆறு ஆண்டுகள் அதற்குத் தொகுப்பாசிரியராக இருந்தேன். கடந்த ஓராண்டாக செங்காந்தள் என்ற இணைய செய்தியிதழைத் தொகுத்து நடத்துகிறேன். இந்து சமய நூல்களைக் கற்றுப் பல்சமய உரையாடல் பண்பாட்டில் ஈடுபடுவதற்குச் சமஸ்கிருதம் படிக்கத் தொடங்கினேன். ஒரு சமயத்தவரை மற்றொரு மரபில் உள்ளவர் புரிந்துகொள்ள வேண்டுமானால் அவர்தம் மூலமொழியில் உள்ள நூல்களில் தேர்ச்சிபெற வேண்டும். அப்போதுதான் ஆராய்ச்சியின் மூலம் மற்றவரின் கோட்பாடுகளைப் புரிந்துகொள்ளமுடியும். அதுபோல, இஸ்லாமியரைத் தெரிந்துகொள்ள அரபுமொழி கற்கத் தொடங்கினேன். ஆனால் அதில் தொடர்ந்து பயிற்சிபெற வாய்ப்பு அமையவில்லை. இருப்பினும் அவர்களது வரலாற்றைப் படித்தேன். முகம்மது இக்பால் எழுதிய நூற்கள், ஆல்பிருனியின் பங்களிப்பு, தாராசிகோ (அவுரங்கசீப்பின் அண்ணன்) போன்றவர் முயற்சிகளை அறிந்துகொண்டேன்.

சுபா: உங்களின் மொழி தொடர்பான ஆர்வமும் பல்வேறு சமயங்களை விருப்புவெறுப்பின்றி அணுக நீங்கள் மேற்கொண்ட முயற்சிகளும் வியக்கவைக்கின்றன. இக்கால இளம் ஆய்வாளர்களுக்கு இவை நல்ல தூண்டுதலாகவும் அமையக் கூடியன. மேலும் சொல்லுங்கள்.

ஆ.அ: தமிழ் வைணவத்துறைக்கு எனக்கு வழிகாட்டியவர் வியன்னா பல்கலைக்கழகப் பேராசிரியர் ஒபர்ஹாமர். தென்கலை மரபின் தலைவரான பிள்ளை லோகாசாரி எழுதிய 'தத்வத்ரயம்' என்ற சூர்ணைகளையும் அதற்கு உரை எழுதிய மணவாளமாமுனியையும் சேர்த்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டேன். பிறகு மணவாளமாமுனி எழுதிய 'ஆர்த்திபிரபந்தம்' நூலையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தேன்.

அதன்பிறகு நம்மாழ்வார் பாடல்களில் நூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்து ஜெர்மனில் மொழிபெயர்த்தேன். வியன்னாவில் பாடம் சொல்லிக்கொடுக்க இந்நூலைப் பயன்படுத்தினேன். 'My God is a thief ' அதாவது, நம்மாழ்வார் சொல்லாடலைத் தலைப்பாக வைத்தேன். "என் கண்ணன் என்னைத் தனதாக்கி, என் பாடல் வழியாகத் தன்னை வெளிக்காட்டுகிறான். அவன் ஒரு 'வஞ்சக் கள்வன்' என்கிறார் நம்மாழ்வார். இது பக்திப் பாடல் பண்பாட்டின் எடுத்துக்காட்டு. அதன் பின்னர் வியன்னாவில் ஆசிரியராகப் பணியாற்ற அழைப்பு வந்தது. அங்கு என்னுடைய பொதுத் தலைப்பு 'இந்திய மரபில் கடவுள் பற்றிய சிந்தனை.' ஓர் ஆண்டு

வைணவத்தையும் அடுத்த ஆண்டு சைவத்தையும் அறிமுகம் செய்தேன். சிவனுடைய நாட்டியம் பற்றிய பாடல்களைத் தேர்ந்தெடுத்து ஜெர்மனில் மொழிபெயர்த்தேன். தமிழ் படித்துவிட்டு வாருங்கள் என்றால் யாரும் என் வகுப்புக்கு வரமாட்டார்கள். அதனால் இந்தப் பாடல்களை மொழிபெயர்த்துக் கொடுத்து உரையாடல் நடத்தினேன். அது மாணவர்களிடம் ஆர்வத்தை ஏற்படுத்தியது.

திருமந்திரத்தில் ஒன்பதாவது அதிகாரம் சிவநடனம் பற்றியது. 'சிவன் எங்கு நடனமாடுகிறார், ஏன் நடனமாடுகிறார், பார்ப்பவர் மத்தியில் நாட்டியத்தின் விளைவு என்ன' என்ற கேள்விகளுக்குப் பதில் கொடுத்து இந்தப் பாடல்கள் அமைந்துள்ளன. அதோடு சமஸ்கிருதத்திலும் சிவநடனம் பற்றிய நூல்கள் உண்டு. 'குஞ்சித அங்கிரஸ்தவ' என்று பெயர்; அதிலும் சில பாடல்களை மொழிபெயர்த்து வெளியிட்டேன். அதற்கு அடுத்த முறை, அருணகிரி நாதர் எழுதிய 'கந்தர் அனுபூதி'யையும் மொழிபெயர்த்து – வள்ளலாரின் சில பாடல்களையும் சித்தர் பாடல்களையும் சேர்த்துப் புத்தகமாக வெளியிட்டேன். 'சிவன் தென்னிந்தியாவில் நடனமாடுகிறார்' என்ற பொருளில் இந்த நூல் வெளிவந்தது.

சுபா: இந்துப் பாரம்பரியத்தில் சைவம், வைணவம் என்ற ஆண் தெய்வ வழிபாடுகள் அதிகம் முக்கியத்துவம் பெறுகின்றன. அதனால் ஐரோப்பிய ஆய்வாளர்கள் சூழலில் இந்த இரண்டு பெருந்தெய்வ வழிபாட்டுக்கான விளக்கத்தை அறிமுகப்படுத்த உங்கள் ஆய்வுக் கவனம் குவிந்ததாக எடுத்துக்கொள்ளலாமா?

ஆ.அ: இல்லை. தமிழக இறையியல் சூழலில் பெண்ணியமும் பெண் தெய்வங்கள் பற்றிய இந்திய வரலாறும் முக்கியத்துவம் பெறுவதை உணர்ந்திருக்கின்றேன். நான் ஓராண்டாகப் பெண் தெய்வங்களைப் பற்றிய கருத்துக்களைத் தொகுத்து ஐரோப்பிய ஆய்வு மாணவர்களுக்குப் பாடம் தயாரித்தேன். உலகளவில் அது ஒரு பெரிய முயற்சியாக இன்னும் இருக்கிறது. அதற்காக இந்திய மரபு நூல்களைத் தேடினேன். சமஸ்கிருதத்தில் பல நூல்கள் உள்ளன. 'தேவீ மாகாத்ம்யம்', 'சௌந்தர்யலகரி' போன்றவை. தமிழில் 'அபிராமி அந்தாதி' எனக்குப் பிடித்திருந்தது. அதையும் ஜெர்மனில் மொழிபெயர்த்து ஓர் ஆண்டு பாடநூலாகப் பயன்படுத்தினேன்.

சுபா: இது மிக முக்கியமான மொழிபெயர்ப்பு. ஜெர்மானிய மொழியில் பெண் இந்துக் கடவுளர்களின் அறிமுகத்தைப் பார்த்த லோமஸ் சீகன்பால் தனது 'Genealogy of the South Indian Deities' என்ற நூலில் அதை வழங்கினார். அதுபோல, டச்சுக்காரரான பிலிப்ஸ் பால்டெயூஸ் 'A Description of the East-India Coasts of Malabar and Coromandel and also of the Isle of Ceylon with their Adjacent Kingdoms & Provinces' என்ற நூலிலும் மலபார், அதாவது தமிழ் நிலமக்களின் கடவுளர்களைக் குறிப்பிடும்போது பெண் தெய்வங்களை அறிமுகப்படுத்துகின்றார். இப்படி பிரஞ்சு மொழியிலும் பொ.ஆ.19 காலகட்டத்தில் சில நூல்கள் வெளிவந்தன. அதன் தொடர்ச்சியாக இந்த நூற்றாண்டில் உங்களது முயற்சியும் வரலாற்றில் இடம்பெறுவதை நினைக்கும்போது பெருமையாக உள்ளது டாக்டர் ஆனந்த். சரி, பொ.ஆ. 16 தொடங்கி

தமிழகம் வந்த ஐரோப்பிய மதச் சேவையாளர்களின் தமிழ்ப் பணிகளைக் கூறுங்கள்.

ஆ.அ: தமிழகத்திற்கு வந்த சேசுசபை மறைப் பணியாளர்கள் தமிழுக்குச் செய்த தொண்டு பெரிது. சிறப்பாக தே நோபிலி, வீரமாமுனிவர் நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துத் தமிழ் தெரியாத மற்றவருக்கு அறிமுகம்செய்வதை என் நோக்கமாகக் கொண்டிருக்கின்றேன். தே நோபிலி இருபதுக்கும் மேற்பட்ட நூற்களைத் தமிழில் எழுதியுள்ளார். சிறப்பாக தாமஸ் அக்குவினாஸ் பதிவுசெய்த கிறித்தவக் கோட்பாடுகளைத் தமிழாக்கம் செய்திருக்கிறார். நான் 'கடவுள்நிர்ணயம்', 'ஆத்துமநிர்ணயம்', 'நித்திய சீவன சல்லாபம்', 'தூசன திக்காரம்' போன்ற நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளேன். அதுபோல வீரமாமுனிவர் எழுதிய திருக்காவலூர்க் கலம்பகம், அன்னை அழுங்கல் அந்தாதி போன்ற நூல்கள் ஏற்கெனவே ஆங்கிலத்தில் வெளிவந்துள்ளன. இப்போது 'கித்தேரி அம்மாள் அம்மானை'யையும் தயார் செய்துகொண்டிருக்கிறேன்.

சுபா: உங்களது படைப்புக்களில் குறிப்பிடத்தக்க எண்ணிக்கையில் ஜெர்மானிய நூல்களைக் காண்கிறேன். ஐரோப்பாவில் குறிப்பாக ஜெர்மன் மொழி பேசும் பகுதிகளில் உங்கள் அனுபவம், செயல்பாடுகள் என்னென்ன?

ஆ.அ: ஜெர்மன் மொழிபேசும் பகுதியான ஐரோப்பாவுடன்தான் எனக்கு அதிகத் தொடர்பு இருந்தது. அங்குப் பல்கலைக்கழகப் பேராசிரியர்களுடன் கொண்ட நட்பு பெரிதும் உதவியது. அவர்கள் தங்களின் அன்பளிப்பாக தாங்கள் எழுதிய நூல்களைக் கொடுப்பது வழக்கம். ஒருமுறை பிராங்பர்ட் பல்கலைக்கழகப் பேராசிரியர் நூல் ஒன்றைக் கொடுத்தார். அது அவர் எடுத்த முயற்சியின் பயன். பள்ளி அளவில் பாடம் சொல்லிக்கொடுக்கும் ஆசிரியர்களுக்குப் பெரிய நூலக வசதி அதிகம் இருக்காது. பல்வேறு சமயங்களையோ அவர்களின் கோட்பாடுகளையோ எளிதில் கற்க வசதியும் இருக்காது. அவர்களுக்கு உதவியாக எண்பது பேராசிரியர்களை அழைத்துப் பல்சமயப் பண்பாட்டுக் கருத்தியலைக் கொடுத்து, ஒவ்வொரு தலைப்பிலும் இரண்டு பக்க அளவில் கட்டுரை தயாரித்து வெளியிட்டார்கள். இந்து சமயம், உரையாடல், அரசியல், பாலின வேறுபாடு, ஜனநாயகம், இஸ்லாம், மானுடவியல், கொன்பூசியனிசம் என்று நூறு தலைப்புகள் அடங்கிய நூல். அதைப் பார்த்ததும் ஏன் அதைத் தமிழில் கொண்டுவரக்கூடாது என்று நினைத்துத் தமிழாக்கம் செய்து 'பல்சமயப் பண்பாட்டுக் களஞ்சியம்' (2016) என்ற தலைப்பில் வெளியிட்டேன். 'Kunst und Religion' (2021) 'கலையும் சமயமும்' என்ற தலைப்பில் இந்திய மரபின் பின்னணியில் பலமுறை உரையாற்றினேன் – அது புத்தகமாக இப்போது வெளியாகியுள்ளது. ஐரோப்பாவில் நடைபெறும் கருத்தரங்குகளில் பங்கெடுப்பதற்குப் பல முறை வாய்ப்புக் கிடைத்தது. ஒருமுறை 'ஆசீவகக் கோட்பாடு' பற்றி உரையாற்றினேன். அதன்வழியாகப் பேராசிரியர் நெடுஞ்செழியன் எழுதிய ஆசீவகம் சார்ந்த நூல்களை அறிமுகம் செய்தேன். மற்றொரு முறை வள்ளலாரைப் பற்றி உரையாற்றினேன். இவற்றையெல்லாம் வலைத்தளங்களில் பதிவுசெய்து மற்றவர் கவனத்திற்குக் கொண்டுசேர்த்தேன்.

சுபா: உங்கள் ஆய்வுகள் இந்தியப் பண்பாட்டுச் சூழலை, குறிப்பாகச் சமயங்களை மையமாகக்கொண்டு அமைகின்றன. இந்தியக் கலை வரலாற்றில் கிறித்தவக் கண்ணோட்டம் பற்றி உங்கள் கருத்து என்ன?

ஆ.அ: சமயவாதிகள் மத்தியில் பல பூசல்கள் இருந்தாலும், கலைஞர்கள் மத்தியில் பல்சமய இணக்கம் உண்டு என்பது உண்மை. கலைஞர்கள் பல்வேறு சமுதாய வேலிகளைத் தாண்டும் மனநிலை பெற்றவர்கள். இதற்கு எடுத்துக்காட்டாக எழுந்ததுதான் எனது 'Christian Themes in Indian Art' என்ற நூல். இதில் கிறித்தவ, இந்து, இஸ்லாமிய, பார்சி கலைஞர்கள் கிறித்துவின் படங்களை வரைந்துள்ளார்கள். கிறித்து சிலுவை சுமப்பது, கடைசி இரவு உணவு (Last Supper) போன்ற காட்சிகளைத் தனது ஓவியக்கலைக்குள் சேர்த்துள்ளார்கள். இவற்றைத் தொகுத்து – அக்பர் காலம் தொடங்கி இந்தியாவில் சமய உறவு நிலைத்திருப்பதைக் காட்டுவதுதான் இந்நூல். 'Christian Themes in Indian Art' 2012 என்ற இந்த நூலை ஜெர்மன் நாட்டின் குத்ரூன் லோவ்னர் என்பவரோடு இணைந்து எழுதி வெளியிட்டேன்.

சுபா: இந்த நூலை நான் பார்த்திருக்கின்றேன். அருமையான வடிவமைப்பில் மிகச்சிறப்பான ஆய்வுச் செய்திகளோடு வந்திருக்கும் சிறந்த படைப்பு அது.

ஆ.அ: நோபிலி (Roberto de Nobili) பற்றியும் சொல்ல வேண்டும். அவர் சமஸ்கிருதத்தில் பேசவும் எழுதவும் கற்றவர். கிறித்தவர்கள் எழுதிய சமஸ்கிருதப் பாடல்களையும் நூல்களில் சிலவற்றையும் தேர்ந்தெடுத்தேன். அவற்றை இரண்டு கத்தோலிக்கர், இரண்டு புராட்டஸ்டன்ட் ஆசிரியர்கள், மொழிபெயர்த்துத் தந்ததையும் தொகுத்து 'Indian Christiad' (1995) என்ற நூலை வெளியிட்டேன். கிறித்தவர்கள் விவிலியத்தைச் சமஸ்கிருதத்தில் மொழிபெயர்த்தார்கள். ஜான் மூயர் என்பவர் பல்வேறு நூல்களைச் சமஸ்கிருதத்தில் எழுதியுள்ளார். 'Sri Krista Sangita' என்ற முக்கிய நூல் காப்பிய வடிவில் உள்ளது. இதிலிருந்தும் சில பகுதிகள் எனது நூலில் இடம்பெறுகின்றன.

சுபா: தமிழ்க் கிறித்தவத்தில் இசையும் இசைப்பாடல்களும் எத்தகைய பங்குகளை வகிக்கின்றன?

ஆ.அ: கத்தோலிக்கக் கிறித்தவர்கள் 1968க்குப் பிறகு தங்கள் வழிபாட்டு முறையைத் தமிழ் மயமாக்கும் முயற்சியைத் தொடங்கினார்கள். கர்நாடக இசை முறையைச் சிலர் கற்றனர். அந்தமுறையில் கிறித்தவப் பாடல்களை அமைத்தார்கள். இந்த வரிசையில் வேதநாயக சாஸ்திரி, ஆப்ரகாம் பண்டிதர், சின்னசாமி முதலியார் போன்றவர்களின் பங்கு மிகப் பெரிது. எனக்கு இசையில் பயிற்சி பெற அதிகம் வாய்ப்பில்லை. இருந்தாலும் இசையில் ஈடுபட்டோரது செயல்பாடுகளை ஆவணப்படுத்தும் வகையில் 35 கிறித்தவப் பாடலாசிரியர்களையும் அவர்களின் இரண்டிரண்டு பாடல்களையும் தொகுத்து 'Musical Spring. Christian Music Exponents in Tamilnadu' (2007) என்னும் புத்தகமாக வெளியிட்டேன்.

சுபா: உங்களது தொடர்ச்சியான ஏனைய பணிகள் ...

ஆ.அ: 'தமிழியல்' என்ற தலைப்பில் ஆராய்ச்சியில் ஈடுபடத் தொடங்கினேன். வெளிநாடுகளில் நடைபெறும் கருத்தரங்குகளில் பங்கெடுக்க அழைப்பு வந்தபோது தமிழ் மரபுசார்ந்த தலைப்பில் கட்டுரைகள் எழுதினேன். குறிப்பாகத் திருக்குறளை முன்வைத்து அவற்றை எழுதினேன். எடுத்துக்காட்டாக:

1. 'Values in Leadership in the Tamil Tradition of Tirukkural vs. Present day Leadership Theories', in International Management Review, USA, Vol. 3, N0.1. 2007. pp.9 –16.

2. 'Ancient Poets And Prophets Speak For The Consumers. Intercultural Dialogue On Traditional Wisdom And Values', In Journal Of International Business Ethics USA And China (JIBE), Vol. 2. No. 1. March, 2009. 73-78.

3. 'Learning From The Perennial Wisdom Of The Tirukkural', Puthia Panuval, (Online Journal) An International Journal Of Tamil Studies, Vol. 01, Issue 3, August 2009, PP. 54-62.

4. 'Should We Speak of Philosophy in the Tamil Classical Literature?' in: Puthia Panuval, An International Journal of Tamil Studies. Online Journal, Vol. 6, Issue 1, April 2015, 122-135.

இந்த வெளியீடுகளெல்லாம் எனக்குக் கிடைத்த வாய்ப்புகளின் விளைவு. முன்னதாகவே திட்டம்போட்டு எதையும் சாதிக்க வேண்டும் என்ற நிலையில் உருவானவையல்ல. இவற்றில் பெரும்பாலானவை மொழிபெயர்ப்புகள். இதைப் பண்பாட்டுப் பரிமாற்றம் என்று சொல்லலாம். இதற்கு எனக்கு வழிகாட்டியவர்கள், வாய்ப்பு வழங்கியவர்கள் அநேகர். அவர்களுக்கெல்லாம் எனது மனமார்ந்த நன்றி.

சுபா: இக்காலச் சூழலில் தமிழக ஆய்வுப் பரப்பில் ஐரோப்பியத் தமிழியல் குறித்தான ஆய்வினைச் செய்பவர்கள் மிகக் குறைவாக இருக்கின்றனர். இதனை நிவர்த்திசெய்யவும் இத்துறையில் இளம் ஆய்வறிஞர்களைத் தமிழகக் கல்விக் கழகங்களில் உருவாக்கவும் எத்தகைய செயல்திட்டங்கள் தேவை எனக் கருதுகின்றீர்கள்?

ஆ.அ: அயல்நாட்டவர் பார்வையில் தமிழகம் என்ற தேடல் அவசியமானது. மார்க்கோ போலோ, ஜான்மோந்தே கோர்வீனோ, தே நோபிலி போன்றவர்கள் இத்தாலிய மொழியில் தமிழ் மக்களை விமர்சனம் செய்துள்ளார்கள். இது இன்னும் ஆய்வுடன் ஆவணப்படுத்தப்பட வேண்டிய ஒரு தலைப்பு. ஏற்கெனவே தமிழ் மரபு அறக்கட்டளை அமைப்பின் கடிகை இணையக் கல்விக்கழகத்தின்வழி செய்துவரும் ஐரோப்பியத் தமிழியல் பணிகளில் தமிழகப் பல்கலைக்கழகங்களும் கல்லூரிகளும் இணைந்து ஐரோப்பிய மொழிகளில் உள்ள தமிழ், தமிழ்மக்கள் தொடர்பான ஆய்வுகளை விரிவாக்கலாம். உதாரணமாக நீங்கள் (க. சுபாஷிணி) தற்சமயம் எழுதி வெளியீட்டிற்குத் தயார்நிலையில் உள்ள பெஞ்சமின் சூட்சேயின் மெட்ராஸ் பற்றிய நூல் நல்ல எடுத்துக்காட்டு. இத்தகைய தமிழக வரலாற்றுடன் தொடர்புடைய ஆவணங்களை ஆய்வுசெய்து வெளியிடலாம்.

இதுமட்டுமன்றி, முனைவர் பட்டப் படிப்பிற்குத் தயார் நிலையில் இருப்பவர்கள் அவர்கள் துறைசார்ந்த தலைப்பில் மற்ற மொழியில் என்ன பதிவாகியுள்ளது என்று

தெரிந்துகொள்ள முயல வேண்டும். எடுத்துக்காட்டாக, ஜெர்மன் மொழியில் தமிழ் சைவ மரபின் பல்வேறு நூல்கள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அந்த வகையில் மாணிக்கவாசகர், தாயுமானவர் நூற்கள் குறிப்பிடத்தக்கவை. சில ஆராய்ச்சியாளர்கள் என்னிடம் கலந்துரையாட வருகிறார்கள். அவர்களுக்குத் தேவையான உதவிகளை வழங்கிவருகிறேன். தமிழ் இலக்கியங்கள் ஐரோப்பிய மொழிகளில் தரமாக மொழிபெயர்க்கப்படுவதற்கான அனைத்து வாய்ப்புகளும் இன்று உள்ளன. ஆய்வாளர்கள் இத்துறையில் தீவிர நாட்டத்துடன் இயங்க வேண்டும். ஐரோப்பிய மொழிகளைக் கற்றுக்கொள்ளவும் ஆர்வம் காட்டவேண்டும்.

சுபா: ஐரோப்பியத் தமிழியல் துறையில் உங்கள் பங்களிப்பு சிறப்பிடம் பெறுகிறது. தங்களது அனுபவங்களை இக்கலந்துரையாடல் வழிப் பகிர்ந்துகொண்டமைக்கு எனது நன்றி.

ஆ.அ: நன்றி.

இந்நேர்காணலைச் செய்தவர் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் தலைவர் முனைவர் க. சுபாஷிணி.
நன்றி:காலச்சுவடு, ஆகஸ்ட் 2021 இதழ்

# 30 • மலேசியத் தொழிலாளர் சட்டத்தில் தமிழ்ப் பள்ளிகள்

• • • மலாக்கா முத்துக்கிருஷ்ணன்

1901-ஆம் ஆண்டில் கூட்டரசு மலாய் மாநிலங்களின் (Federated Malay States) ஜே. டிரைவர் (Inspector of Schools FMS, J. Driver) என்பவர் மலாயா பள்ளிகளின் தலைமைக் கல்விக் கண்காணிப்பாளராகப் பதவி வகித்தார். அப்போது மலாயாவில் பல்வேறு தாய் மொழிக் கல்வி முறை அமலில் இருந்தது. அதை அவர் விரும்பவில்லை. தமிழர், சீனர் பிள்ளைகளின் எண்ணிக்கை குறைவாக இருந்தன. அதனால் அவர்களுக்கு என்று தனியாகப் பள்ளிகள் தேவை இல்லை என்கிற ஒரு கருத்தை வெளியிட்டார்.

இந்த கட்டத்தில் சிலாங்கூர் மாநில ரெசிடெண்டாக டிரேச்சர் (W.H. Treacher) என்பவர் இருந்தார். இவர் தான் 1893-ஆம் ஆண்டு கிள்ளானில் இருக்கும் ஆங்கிலோ சைனீஸ் பள்ளியைத் தோற்றுவித்தவர் (ACS - Anglo Chinese School KLANG). இவரும் தடாலடியாக ஒரு கட்டளை போட்டார். மலாய்ப் பள்ளிகளுக்கான கல்விச் செலவை மலாயா அரசாங்கம் ஏற்றுக் கொள்ளும். அதைத் தவிர்த்து மற்றபடி மற்ற இனங்களின் தாய் மொழிக் கல்விச் செலவுக்கு அரசு பொறுப்பு ஏற்காது என்று கண்டிப்பாகச் சொன்னார். தமிழர்களும் சீனர்களும் தடுமாறிப் போனார்கள்.



Sir William Hood Treacher (1849 - 1919)




இந்த கட்டத்தில் தான் தமிழ்ப் பள்ளிகளைத் தற்காக்க ஒரு சட்டம் உதவிக்கு வந்தது. 1912-ஆம் ஆண்டு தொழிலாளர் சட்டம் (Labour Ordinance) சட்டம். ஆங்கிலேயர்கள் உருக்கிய சட்டம். அந்தச் சட்டமே அவர்களைத் திசை திருப்பியது. அதனால் ஆங்கிலேய ஆளுநர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை என்று சொல்ல முடியாது. தடுமாற்றம் அடைந்தார்கள்.

1912-ஆம் ஆண்டு தொழிலாளர் சட்டம் (Labour Ordinance 1912). மலாயா ஆங்கிலேய அரசால் அமல்படுத்தப்பட்ட சட்டம். இந்தச் சட்டம் தான் சரியான நேரத்தில் தமிழ்ப் பள்ளிகளின் ஆபத்து அவசரத்திற்கு உதவி செய்தது.

1912-ஆம் ஆண்டு மலாயா தோட்டத் தொழிலாளர்களின் நலன்களைப் பாதுகாப்பதற்கு ஒரு சட்டத்தை இயற்றி இருந்தார்கள்.
அந்தச் சட்டத்தில் ஒரு பிரிவு: ஒரு தோட்டத்தில் 7 வயதில் இருந்து 14 வயது வரையிலான பிள்ளைகள் 10 பேர் இருந்தால் போதும்; ஒரு பள்ளிக்கூடத்தைக் கட்ட வேண்டும் என்கிற சட்டப் பிரிவு. (The British and rubber in Malaya, c 1890–1940 Jim Hagan and Andrew Wells University of Wollongong: The 1912 Labour Ordinance compelled the planters to set up ad-hoc schools for children of the plantation labour.) ஆக இந்த 1912-ஆம் ஆண்டு தொழிலாளர் சட்டத்தின் வழி மலாயாவில் இருந்த ஒவ்வொரு தோட்ட நிர்வாகமும் கண்டிப்பாகத் தமிழ்ப் பள்ளிகளை நிறுவ வேண்டிய கட்டாயத்திற்குத் தள்ளப் பட்டு இருந்தன.

அந்தக் கட்டத்தில் ஒவ்வொரு தோட்டத்திலும் பல பிரிவுகள் இருந்தன. அதாவது டிவிசன்கள். எடுத்துக்காட்டாக கெடா மாநிலத்தில் சுங்கை பட்டாணி பகுதியில் டப்ளின் தோட்டம். ஏழு டிவிசன்கள். ஸ்கார்புரோ தோட்டத்தில் ஆறு டிவிசன்கள். ஜொகூர் சா ஆ தோட்டத்தில் ஆறு டிவிசன்கள்.

ஒவ்வொரு டிவிசனுக்கும் தனித்தனியாக ஒவ்வொரு பள்ளிக்கூடம் அமைக்கப் பட்டது. அந்த மாதிரி நிறையப் பள்ளிகள் தோன்றின. 1920-ஆம் ஆண்டில் மட்டும் மலாயாவில் 122 தமிழ்ப்பள்ளிகள் உருவாகி விட்டன. என்ன சொல்ல வருகிறேன் என்றால், 1912-ஆம் ஆண்டு தொழிலாளர் சட்டம் என்பது அப்போது அந்தக் காலத்தில் உருவாக்கப்பட்ட சட்டம். ஆங்கிலேயர்கள் உருவாக்கிய சட்டம். இன்னும் அமலில் உள்ளது. ஆக, அந்தத் தொழிலாளர் சட்டம் உதவிக்கு வந்ததால், 1925-ஆம் ஆண்டு வரையில் மலாயா நாட்டுத் தோட்டங்களில் 235 தமிழ்ப் பள்ளிகள் புதிதாக நிறுவப்பட்டன. தோட்டப் புறங்களில் தோட்ட நிர்வாகங்களே தமிழ்ப் பள்ளிகளை நிறுவின. பட்டணங்களில் தனியார் நபர்கள்; பொது இயக்கங்கள் போன்றோர் தமிழ்ப் பள்ளிகளை நிறுவினார்கள். சரி.

காலனித்துவ ஆட்சியில் இருந்து மலாயா சுதந்திரம் அடைந்த போது பற்பல சட்டத் திருத்தங்களைச் செய்தார்கள். ஆனால் மேலே சொன்ன அந்தத் தொழிலாளர் சட்டத்தில் மட்டும் மாற்றம் செய்யவில்லை. அதை அப்படியே விட்டு விட்டார்கள்.

1930-ஆம் ஆண்டு முதல் முறையாக தமிழ்ப் பள்ளிகளைக் கண்காணிக்க ஆய்நர் (Inspectorate of Tamil School) ஒருவர் நியமிக்கப் பட்டார். ஜி.ஆர். பில்வர் என்பவர் பொறுப்பு வகித்தார்.

1937-ஆம் ஆண்டில் சில குறிப்பிடத்தக்க மாற்றங்கள் நிகழ்ந்தன. ஆங்கிலேய அரசாங்கம் தமிழ்ப் பள்ளிகளுக்குச் சிறப்புச் செயற்குழு ஒன்றை நிறுவியது.
இந்தச் செயற் குழுவின் பரிந்துரையின் கீழ் வருடத்திற்கு ஒரு மாணவருக்கு ஆறு டாலராக இருந்த நிதி ஒதுக்கீடு எட்டு டாலராக உயர்த்தப் பட்டது. அத்துடன் 1938-ஆம் ஆண்டு வரை 547 தமிழ்ப் பள்ளிகள் நாடு முழுவதும் நிறுவப்பட்டன. பெரிய ஒரு முன்னேற்றம்.

1938-இல் 13 அரசு தமிழ்ப்பள்ளிகள், 511 தோட்டத் தமிழ்ப்பள்ளிகள்; 23 சமயப் பரப்பு தமிழ்ப் பள்ளிகள். ஆக மொத்தம் 547 தமிழ்ப்பள்ளிகள். அந்தப் பள்ளிகளில் 22,820 மாணவர்கள் பயின்றார்கள். இவர்களில் ஆண்கள் 15,584. பெண்கள் 7236. இப்படி வேகமாக வளர்ந்து வந்த தமிழ்ப் பள்ளிகளின் வளர்ச்சி இரண்டாம் உலகப் போரினால் தடைப் பட்டது. 1942-ஆம் ஆண்டு ஜப்பானியரின் ஆட்சிக் காலம். பெரும் பாதிப்புகள். பல தமிழ்ப் பள்ளிகள் மூடப் பட்டன. 644-ஆக இருந்த தமிழ்ப் பள்ளிகள் 1943-ஆம் ஆண்டில் 292-ஆக குறைந்து போயின.

பின்னர் அந்த எண்ணிக்கை கூடியது. 1947-இல் 741 தமிழ்ப் பள்ளிகள். 33,954 மாணவர்கள் பயின்றார்கள். இவர்களில் ஆண்கள் 20,834. பெண்கள் 13,120.
1956-இல் 47,407 மாணவர்கள். ஆண்கள் 26,128. பெண்கள் 21,279.
1957-இல் 50,766 மாணவர்கள். ஆண்கள் 26,153. பெண்கள் 24,613.
தமிழ்ப்பள்ளிகளின் எண்ணிக்கை 1930-இல் 333; 1938-இல் 547; 1947-இல் 741; 1957- இல் 888. நாடு சுதந்திரம் பெற்ற பிறகு, கல்விக் கொள்கையின் மாற்றம் மற்றும் தொழிலாளர் இடம்பெயர்வு. அதனால் பல பள்ளிகளை மூடப்பட்டன. அந்த வகையில் 1963-இல் 720 பள்ளிகள். இப்போது இந்த 2021-ஆம் ஆண்டு 526 பள்ளிகள் மட்டுமே உள்ளன. சரி.

1951-ஆம் ஆண்டில் ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த எஸ்.ஜே. பர்னஸ் (Sydney Francis Barnes) என்பவரின் தலைமையில் மலாயாவில் கல்வி ஆய்வு செய்யப் பட்டது. (Report of the Committee on Malay Education, Federation of Malaya).

# 31• குமாரதாசர் இயற்றிய 'ஜானகிகரண' என்கிற சிங்கள இராமாயணம்

• • • என்.சரவணன்

**முன்னுரை:**
எனது தொடர்ச்சியான சிங்கள வாசிப்பு, தேடல், அறிதல், புரிதல் என்பனவற்றைத் தொடர்ந்து ஒரு முடிவுக்கு வர முடிந்தது. சிங்கள இதிகாசங்கள், புராணங்கள், காப்பியங்கள் என்பனவற்றை அத்தனை குறைத்து மதிப்பிட்டு விடமுடியாது. அவர்களிடமும் வளர்ச்சிபெற்ற வளமான ஏராளமான இலக்கியங்கள் உண்டு. இதைச் சொல்லும்போது புரையோடிப்போன நமது தமிழ்மணம் சற்று கசப்பாகத் தான் எதிர்கொள்ளும் என்பதை நான் அறிவேன். ஆனால் நமது விருப்புவெறுப்புகளுக்கப்பால் இந்த உண்மையை ஏற்றுக் கொண்டாக வேண்டும். இதன் பொருள் தமிழ் இலக்கிய பாரம்பரியத்தைக் குறைத்து மதிப்பிடுவதென்பதல்ல. அதேவேளை நம்மைச் சுற்றியுள்ள தமிழ்த்தேசிய உணர்வானது கண்மூடித்தனமாகவும், வெறுப்புணர்வுடனும் இதை எடுத்த எடுப்பில் மறுக்கும் இயல்பைக் கொண்டிருக்கிறது என்பதை நாம் இனங்கண்டுகொள்ள வேண்டியிருக்கிறது.

இந்த கண்மூடித்தனமான மறுப்புணர்வு; உண்மையை இனங்காண தடையாக இருப்பதுடன், பகுத்தறிவுக்கு இழுக்கானதாகவும், ஆய்வு முறைக்கு எதிரானதாகவும் ஈற்றில் ஒரு சரியான கருத்துருவாக்கத்தை எட்டத் தடையாகவும் ஆகிவிடுகிறது. இந்த நிலைமை நமக்கு மட்டுமல்ல தமிழ் இலக்கிய பாரம்பரியத்தையும், உள்ளடக்கத்தையும், அதன் வரலாற்றையும், இயல்பையும் அறியாது போயிருக்கிற சிங்களச் சூழலுக்கும் முற்றிலும் பொருந்தும்.

**சிங்கள இலக்கியங்கள்:**
சிங்கள இலக்கிய பாரம்பரியத்தின் நீட்சிக்கு அந்த சிங்கள இனம், சிங்கள மொழி என்கிற காரணிகளோடு முக்கியமாக பௌத்த மதமரபின் செல்வாக்கும் பெரும் பங்காற்றி வந்திருக்கிறது.

பல நூற்றாண்டுகளாக பெரும் இலக்கியங்களெல்லாம் பௌத்த விகாரைகளில் இருந்து தான் எழுதப்பட்டுள்ளன. பௌத்தத் துறவிகளால் தான் எழுதப்பட்டுள்ளன. இலங்கையைப் பொறுத்தளவில் ஈழத்து தமிழ் இலக்கியங்களைவிட சிங்கள இலக்கியப் பாரம்பரியம் அதனால் தான் வலுவானதாகவும், அளவில் பன்மடங்காகவும் இருப்பதைக் காண முடிகிறது. பௌத்தத் துறவிகளின் பணியே விகாரைகளிலும், காடுகளிலும், குகைகளிலும் இருந்தபடி தியானிப்பதும், போதிப்பதும் அவர்களின் அன்றாட கடமைகளில் அங்கமாக இருந்தாலும் கூடவே

எழுதுவதும், வாசிப்பதும் இன்னொரு முக்கிய அங்கமாக நாளாந்தம் இருந்து வந்திருக்கிறது. எனவே ஏராளமாக எழுதிக் குவித்தார்கள். ஓரிடத்தில் எழுதப்பட்ட ஓலைச்சுவடி அவற்றின் முக்கியத்துவம் கருதி வேறு விகாரைகளில் மீளவும் பிரதிசெய்து, படி எடுத்து வைக்கும் மரபு இருந்தது. எனவே தான் மகாவம்சத்தின் பிரதி வேறு பல விகாரைகளிலும் கண்டெடுக்கப்பட்டன. அதுபோல பௌத்த 'திரிபிடக' வின் பிரதிகள் பல நாடெங்கிலும் இருந்து கிடைத்தன.

தமிழில் சைவக் கோவில்களில் இருந்திராத பாரம்பரியம் இது. இலங்கையில், சமண, ஜைன, பௌத்த மரபில் மாத்திரமே இப்படி வாசிப்பும், எழுத்தும் அவற்றின் இன்றியமையாத மரபாக இருந்து வந்திருக்கிறது. துரதிர்ஷ்டவசமாக இனத்துவ முறுகலால் இந்த குட்டித்தீவின் மண்ணின் மைந்தர்களான தமிழர் – சிங்களவர் இரு சாராரும் பண்பாட்டையும், நாகரிகத்தையும், வரலாற்றையும், இலக்கியங்களையும் பரஸ்பரம் பகிர்ந்துகொள்ளும் மரபைக் கைக்கொள்ளாத கூட்டங்களாக துருவமயப்பட்ட வளர்ச்சிப் போக்கை கடந்து வந்திருக்கின்றனர். இதில் விதிவிலக்குகள் இருக்க முடியும். ஆனால் இங்கு நான் குறிப்பிடுவது 'போக்கு' பற்றியது. உறுதியான மரபு பற்றியது.

இத்தகைய இலக்கிய படைப்புகளின் போது இந்தியாவில் இருந்து வந்த இலக்கியங்களின் பாதிப்பும் இல்லாமல் இல்லை. வட இந்திய பௌத்த ஜாதகக் கதைகள் பல அவற்றின் மூலத்தைக் குறிப்பிடாமலே சிங்களத்தில் சிங்கள இலக்கியங்களாக பதிவாகியுள்ளன. அது மட்டுமன்றி புவியியல் ரீதியில் கிட்டிய தேசமாக தமிழகம் இருந்ததால் இலங்கைக்கு தமிழகத்தில் இருந்து தமிழ் மொழி இலக்கியங்களும் சிங்கள இலக்கியங்களில் கலந்திருக்கின்றன. சில இலக்கியங்கள் தமிழ் தான் இதன் மூலம் என்று குறிப்பிட்டாலும் சில தழுவல்கள் தமிழில் இருந்து பெறப்பட்டதாக குறிப்பிட்டதில்லை. பிற்காலத்தில் பன்மொழி அறிந்த அறிஞர்களால் தான் அவற்றின் மூலம் எவையென கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன.

மகாவம்சத்தில் எல்லாள மன்னனை மகாநாம தேரர் மிகவும் சிறந்த நீதிதவறாத மன்னனாகவும், ஒழுக்கசீலனாகவும் பதிவு செய்திருப்பதைக் காணலாம். அதற்கு சான்றாக அதில் ஒரு கதையுண்டு.

அதாவது நீதி தவறாத எல்லாள மன்னன் தன் படுக்கை அறையில் ஒரு மணியைத் தொங்கவிட்டிருந்தான். அது அரண்மனைக்கு வெளியே தொங்கவிடப்பட்டிருந்த ஒரு கயிற்றுடன் இணைக்கப்பட்டு இருந்தது. மன்னனின் மகன் சென்ற தேரால் ஏற்றப்பட்டு கன்று ஒன்று கொல்லப்பட்டதால், நீதிவேண்டி தாய்ப்பசு மணியை ஒலித்தது. நிகழ்ந்ததை அறிந்த மன்னன் தன் மகனையும் அவ்விதமே தேரால் ஏற்றிக் கொல்லுமாறு தீர்ப்பளித்ததாகவும் மகாவம்சம் குறிப்பிடப்படுகின்றது. சிலப்பதிகார காப்பியத்தில் வேறு சில இடங்களிலும் இதே கதை பற்றிய குறிப்புக்கள் வருகின்றன. பதினெண் கீழ்க்கணக்கு நூலான பழமொழி நானூறு என்னும் நூலிலும் இக்கதை எடுத்துக்காட்டாகத் தரப்பட்டுள்ளது. சோழர் காலத்து

நூலான சேக்கிழாரின் பெரியபுராணத்திலேயே மனுநீதிச் சோழன் கதை விரிவாகக் காணப்படுகிறது. மனு திருவாரூரில் இருந்துகொண்டு சோழ நாட்டை ஆண்ட மன்னன். அவன் மகன் தேரில் விரைந்து சென்றபோது துள்ளியோடிய பசுக்கன்று தேர்க்காலில் சிக்கி இறந்தது. தாய்ப்பசு ஆராய்ச்சி மணியை அடித்தது. மன்னன் நிகழ்ந்தது அறிந்து பசுவுக்கு நீதி வழங்கும் அறநெறியில் கன்று இறந்தது போலவே தன் மகனைத் தேர்க்காலில் கிடத்திக் கொன்றான் என்கின்றன இந்தக் காவியங்கள். மேலும் சோழ மன்னர் பெருமை கூறுகின்ற இராசராசசோழன் உலா, விக்கிரம சோழன் உலா, குலோத்துங்க சோழன் உலா என்பவற்றிலும் இக்கதை வருகிறது. மகாவம்சத்தில் எல்லாளனை சோழநாட்டில் இருந்து வந்த ஒருவனாகவே குறிப்பிடுவதையும் இங்கு குறிப்பிட்டாகவேண்டும்.

அதுபோல சிங்கள காப்பியங்களில் ஒன்றான 'பன்சிய பனஸ் ஜாதகய' (ஐநூற்று ஐம்பது ஜாதகக் கதைகள்) என்கிற நூலில் 'சிபி ஜாதகய' (සිවි ජාතකය) என்கிற ஒரு கதையுண்டு. இந்தக் கதை அப்படியே தமிழில் புறநானூற்றில் உள்ளதாக தொல்லியல் துறை வல்லுனரான பேராசிரியர் ராஜ் சோமதேவ (Prof.Raj Somadeva) மே மாதம் 2021 இல் அளித்த ஒரு தொலைக்காட்சி நேர்காணலில் குறிப்பிடுவதைக் கவனிக்க முடிந்தது. புறநானூறு கூறும் சிபிச் சக்கரவர்த்தியின் கதையில் ஒரு புறாவைக் காப்பாற்றுவதற்காக பருந்துக்கு தன் உடலைத் தானமாக கொடுப்பதாகவும் சிங்களத்தில் கூறப்படும் சிபி அரசரின் கதையில் கண்களைத் தானமாகக் கொடுப்பதாகவும் அமைந்திருக்கிறது. இப்படி பல சிங்கள இதிகாசக் கதைகளைக் கேட்கும் போது நாமறிந்த தமிழ் இதிகாசக் கதைகளை நினைவூட்டுவதைத் தவிர்க்க இயலாததாக இருக்கும். இவற்றைப் பற்றி பல ஆய்வு நூல்களை பேராசிரியர் சுனில் ஆரியரத்ன சிங்களத்தில் எழுதியிருக்கிறார்.

சிங்களத்தில் வெளியான இந்திய இதிகாசக் கதைகளில் முக்கியமாக இராமாயணத்தைப் பற்றிய விவரங்களைப் பதிவு செய்வதே இக்கட்டுரையின் முக்கிய நோக்கம்.

**இலங்கையில் இராமாயணம்:**

இராமாயணம் பற்றிய தேடல்கள் இலங்கையில் உயிர்த்த காலம் 19ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் தான். ஆங்கிலேய அறிஞர்களின் இலக்கிய-வரலாற்றுத் தேடல்களின் மூலம் அது நிகழ்ந்தது எனலாம். ராஜரீக ஆசியக் கழகத்தின் இலங்கைக் கிளையின் சஞ்சிகையில் இது பற்றிய பல விவாதங்கள், ஆய்வுக் கட்டுரைகளின் சமர்ப்பிப்புகளைக் காண முடிகிறது.

இதேவேளை இலங்கையின் பாட நூல்களில் இராமாயணம் பற்றி இந்தியாவில் நிலவுகிற அதே வான்மீகி இயற்றிய இராமாயணக் கதையின் சுருக்கத்தைத் தான் கற்பித்து வந்தார்கள். ராமனை நாயகனாகவும், சீதையை நாயகியாகவும், சீதையைக் கவர்ந்து கடத்தி வந்து சிறைவைத்து சண்டையிட்ட இராவணனை கயவனாகவும் சித்திரிக்கிற கதை தான் நெடுங்காலமாக சிங்களப் பாடநூல்களில் இருந்தன. இராவணன் ஒரு சிங்கள வீரன் அல்லன் இராவணனுக்கு எந்த மரியாதைப்

பெறுமதியும் ஆரம்பத்தில் கொடுக்கப்படவில்லை. ஒரு வகையில், மாற்றான் மனைவியைத் திருடிய திருடனாகவே இராவணன் உருவகப்படுத்தப்பட்டிருந்தான்.

இராவணனின் வீரதீரச் செயல்கள் பற்றியோ, இராவணனின் இராஜ்ஜியம் பற்றியோ, இராவணனின் போர் முறைகள் பற்றியோ, இராவணனின் பறக்கும் வானூர்தி பற்றிய கதைகளோ கூட முக்கியத்துவம் பெற்றிருக்கவில்லை. கணக்கில்கொள்ளப்படவில்லை. ஆனால் இராவணனை சிங்களத் தலைவனாக புனையும் முயற்சிகளை சில தசாப்தங்களாக இலங்கையில் தலைதூக்கியிருப்பதைக் காணலாம். இலங்கை முழுவதும் சிங்கள பௌத்த நாடென உறுதிப்படுத்துவதற்கும், வடக்கு கிழக்குப் பகுதிகளில் இராவணன் பற்றி நிலவும் வாய்மொழி வரலாற்றையும், தொல்லியல் நம்பிக்கைகளையும் சுவீகரிக்க இராவணன் சிங்களத் தலைவனாக இன்று ஆக்கப்பட்டுள்ளான்.

இலங்கையின் பிரபல நாடகாசிரியர் ஜோன் த சில்வா 1886 இல் முதற் தடவையாக இராமாயணத்தை இலங்கையில் மேடையேற்றினார். அந்த இராமாயண நாடகத்தின் பிரதி பல ஆண்டுகளாக மேடையேற்றப்பட்டு வந்தது. அந்த பிரபலமான இராமாயணக் கதை இலங்கையின் சுயத்துக்கு இழுக்கு என்று 'ஹெல ஹவுல' என்கிற இயக்கம் தீர்மானித்தது. இராமாயணத்துக்கு மாற்றாக அவர்கள் 'சக்வித்தி ராவண' என்கிற ஒரு நாடகத்தை இயக்கினார்கள். அது 1946முதன் முதலில் மேடையேற்றப்பட்டது. சிங்கள சமூகத்தில் பிரசித்திபெற்ற இந்த நாடகம் இன்றும் ஆயிரக்கணக்கான தடவைகள் மேடையேற்றப்பட்டு வருகிறது.

**இராமாயணத்தின் திரிபு வடிவங்கள்:**

பொலநறுவைக்காலத்தில் காணப்பட்ட முக்கிய உரைநடை சிங்கள இலக்கியங்களில் ஒன்றாகக் கருதப்படுவது 'ஜானகிகரண' இது இராமாயணக் கதையின் முழுமையான பிரதியாக இல்லாவிட்டாலும் அதன் தழுவலாகக் கொள்ளலாம்.

இராமாயணத்தைப் பொறுத்தளவில் வான்மீகி எழுதிய மூல இராமாயணத்தைத் தவிர அதையொட்டி தமிழில் கம்பர் எழுதிய இராமாயணத்தை கம்பராமாயணம் என்கிறோம். அதேவேளை இராமாயணமானது இதுவரை 300 க்கும் மேற்பட்ட வித்தியாசமான பிரதிகள் உலகளவில் (குறிப்பாக, தென்னாசிய, தென்கிழக்காசிய பிராந்தியத்தில்) இருப்பதை இன்று காண முடிகிறது. இதைப் பற்றி பல ஆய்வுக்கட்டுரைகள் வெளியாகியுமுள்ளன. ஆக கம்பரின் இராமாயணம் என்பது அதில் ஒன்று தான்.

சோழப் பேரரசு உட்பட பல இந்திய அரசுகள்; பர்மா, திபெத், ஜாவா, மியான்மர், தாய்லாந்து, லாவோஸ், வங்காளம், இந்தோனேசியா, சீனா, ஜப்பான், பிலிப்பைன்ஸ், கம்போடியா, மலேசியா, வியட்நாம் போன்ற தென்னாசிய நாடுகள் வரை ஆக்கிரமித்து ஆட்சி செய்த வரலாற்றை நாமறிவோம். அப்படி அவர்கள் சென்ற இடமெல்லாம் கலாசார, பண்பாட்டு புகுத்தல்களையும் செய்யவே செய்தார்கள்.

அப்படிப்பட்ட இடங்களில் அன்று மிகவும் பிரசித்திபெற்றிருந்த இராமாயணமும் கொண்டு போய் சேர்க்கப்பட்டதில் நமக்கு ஆச்சரியமிருக்காது. அவர்கள் அங்கே கட்டிய கோவில்களில் இராமாயணக் கதைகளைச் சித்திரங்களாகச் செதுக்கினார்கள். அங்கிருந்த இலக்கிய வடிவங்கள் மூலமும் அந்தக் காவியங்களைப் பரப்பினார்கள். பாரம்பரிய நாட்டார் கதைகள் மூலமும், இலக்கியங்களின் மூலமும், நம்பிக்கைகளின் மூலமும் செல்வாக்கு இராமாயணம் செலுத்தி வருகிறது. மேற்கு நாட்டு நாட்டு அறிஞர்களையும் கலைஞர்களையும் கூட ஈர்க்கிறது, ஏனெனில் இதற்கு ஓர் இலக்கியக் காவியப் பெறுமதி உண்டு என்பது உண்மை. இது மாய, மந்திர, போர், காதல், பழிவாங்குதல் மற்றும் கதாநாயக வழிபாடு என ஈர்க்கிறது.




செவிவழிக் கதைகளாகவும், ஓலைச்சுவடிகளிலும், ஓவியங்களிலும் அவை பதிவுபெற்றன. அப்படி இன்று பல இராமாயண நூல்களை அவர்களின் மொழிகளிலெல்லாம் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. இந்திய மொழிகளிலும் வான்மீகியின் இராமாயணத்தில் இருந்து ஆங்காங்கு வித்தியாசப்படுகிறது உள்ளடக்கத்துடன் பல வெளியாகியுள்ளன.

உதாரணத்துக்கு...

• தெலுங்கில் கோனா புத்த ரெட்டியின் ராமாயணம்,
• தமிழில் கம்பனின் கம்பராமாயணம் (11 -12 ஆம் நூற்றாண்டு),
• அஸ்ஸாமியில் மாதவ கண்டாலியின் சப்தகண்ட ரமாயனா (14 ஆம் நூற்றாண்டு),
• வங்காள மொழியில் கிருத்திபாஸ் ஓஜாவின் கிருதிவாசி ரமாயனா (15 ஆம் நூற்றாண்டு),
• மராத்தியில் ஏக்நாத்தின் பவார்த் ராமாயணா (16 ஆம் நூற்றாண்டு),
• ஒரியாவில், பலராம் தாஸ் 'தண்டி' ராமாயணா(16 ஆம் நூற்றாண்டு),
• அவதியில், துளசிதாஸ் ராம்சரிதமனாஸ் (16 ஆம் நூற்றாண்டு)
• மலையாளத்தில் துஞ்சத்து எழுதச்சனின் ஆத்யாத்மா ராமாயணம்.

என்பவற்றை சிறந்த உதாரணங்களாகக் குறிப்பிடலாம். (1)

இவற்றில் பல பிரதிகள் அப்படியே இராமாயணத்தை முழுமையாக ஒத்தவை அல்ல. இராமாயணக் கதையின் சாயலைக் கொண்ட கதைகளாக பல உள்ளன. உதாரணத்துக்கு இலங்கையில் 'வெஸ்ஸந்தர ஜாதக' (Vessantara Jataka - වෙස්සන්තර ජාතකය), தசரத ஜாதக (Dasaratha Jataka - දසරථ ජාතකය) போன்றவற்றைக் குறிப்பிடலாம். இவை பாளி மொழியில் எழுதப்பட்டவை. அதேவேளை இலங்கை, தாய்லாந்து, லாவோஸ், கம்போடியா, பர்மா போன்ற நாடுகளில் இவை பெரும்போக்கு இலக்கியங்களாக உள்ளன. பாளியில் மட்டுமன்றி உள்ளூர் மொழிகளிலும் உள்ளன.

'தசரத ஜாதகய' நேரடியாக இராமாயணக் கதையில் இருந்து வந்தது என்பதைப் புரிந்துகொள்ள முடியும். 'பன்சிய பனஸ் ஜாதகய' விலும் இதனை சுருக்கமாக விளக்கியிருக்கிறார்கள். பௌத்த போதனைகளின் வாயிலாக நீள்கின்ற கதையாக இருக்கிறதும் பௌத்த பாணியில் கூறப்படும் பௌத்த இராமாயணங்களாக...
• தசரத ஜாதகம் (பாலி, கி. மு. 5)
• அனமகம் ஜாதகம் (பாலி, கி. மு. 5)
• தசரத கதனம் (பாலி, கி. மு. 5)

என்பவை காணக்கிடைக்கின்றன.

அது போல ஜைன இராமாயணங்களாக...
• விமல சூரி : பௌம சரிதம் (பிராக்ருதம், கி. பி. 4)
• சங்க தாசர் : வாசுதேவ ஹிண்டி (பிராக்ருதம், கி. பி. 5)
• இரவி சேனர் : பத்ம புராணம் (சமஸ்கிருதம், கி. பி. 6)
• குணபத்ரர் : உத்தர புராணம் (சமஸ்கிருதம், கி. பி. 10)
• சுயம்பு தேவர் : பௌம சரிதம் (அபப்பிரம்சம், கி. பி. 9)
• சீலங்கர் : சௌபன்ன மகா புருஷ சரிதம் (பிராக்ருதம், கி. பி.868)
• பத்ரேசுவரர் : ககாவலி (பிராக்ருதம், கி. பி. 11)

என்பவையும் நம்மால் அடையாளம் காண முடிகிறது,

வேறு நாடுகளில் காணப்படும் இராமாயணங்களை இப்படி வரிசைப்படுத்தலாம்...

• கம்போடியாவில் ரீம்கர்
• தாய்லாந்தில் ராமாகீய்ன்
• லாவோஸில் பிர லாக் பிர லாம்
• பர்மாவில் யம ஸாட்டாவ்
• மலேசியாவில் ஹிகாயத் செரி ராமா
• இந்தோனேசியா மற்றும் ஜாவாவில் காகவின் ராமாயணம்.
• பிலிப்பைன்ஸில் ராஜா மகாந்திரி என்ற பெயரிலும் ராமாயணக் கதை சொல்லப்படுகிறது.
• இரானில் 'தாஸ்தன் இ ராம் ஓ சீதா(Dastan-e-Ram O Sita)
• ஸ்ரீலங்காவில் ஜானகிகரன் (Janakiharan)
• ஜப்பானில் ராமேயன்னா அல்லது ராமன்ஸோ (Ramaenna or Ramaensho)
• சீனா, திபெத் யுன்னான் (தென்மேற்கு சீனா) வில் Langka Sip Hor (thai lu language)

இவ்வாறு இராமாயணத்தின் பல வடிவங்களைப் பற்றிய ஆய்வுகளைத் திறந்துவிட்டதில் ராமானுஜனுக்கு (A.K. Ramanujan) முக்கிய பங்குண்டு. அவர் எழுதிய 'முந்நூறு ராமாயணங்கள்: மொழிபெயர்ப்புகளின் ஐந்து உதாரணங்களும், மூன்று எண்ணக்கருக்களும்' ('Three Hundred Ramayanas: Five Examples and Three Thoughts on Translations') என்கிற ஆய்வுக் கட்டுரை தான் இதைப் பற்றி ஆய்வுப்பரப்பை மேலும் விரிவுபடுத்தியது எனலாம்.

தசரத ஜாதகய: தசரத ஜாதகயவில் தசரத மன்னனுக்கு மூன்று பிள்ளைகள், இராமன், இலக்குமணன், சீதை. மூத்த இராணியாரின் இறப்பை அடுத்து அடுத்த நிலையில் இருந்த இரண்டாந்தார மனைவி ஆதிக்கம் செலுத்த முற்படுகிறாள். தசரத மன்னனிடம் தனது மகன் பரதனுக்கே எதிர்காலத்தில் முடிசூட்டப்படவேண்டும் என்று பரதன் ஆறு வயதாக இருக்கும்போதே கோருகிறாள். தசரதன் அதனை மறுக்கிறான். இந்த மறுப்பின் காரணமாக தன் இளவரசர்கள் இருவரும் இராணியால் கொல்லப்படக்கூடும் என்றும் அவர்களின் உயிருக்கு ஆபத்து இருப்பதையும் உணர்ந்துகொண்ட தசரதன் தான் மரணிக்கும்வரை அவர்களை அங்கிருந்து வெளியேறி பாதுகாப்பாக வாழும்படி பணிக்கிறான். அவர்களுடன் சகோதரி சீதாவும் வெளியேறுகிறாள். மன்னன் பன்னிரண்டு ஆண்டுகள் வாழ்வார் என சோதிடர்கள் கூறியதால் பன்னிரண்டு ஆண்டுகள் அவர்கள் வனவாசம் அனுபவிக்கிறார்கள். பரதன் அவர்களை வேட்டையாடத் தேடிச் செல்கிறான் என்று நகர்கிறது கதை. இதில் சீதை இராமனின் மனைவியல்ல மாறாக சகோதரி, மேலும் இராவணன் என்கிற பாத்திரமும் இல்லை. இராமாயணத்தின் முற்பகுதி 'தசரத ஜாதகய'வில் காண முடிகிறது. கதையும் அவ்வளவு பெரிய கதையல்ல.

ஆனால் இது இராமாயணத்தை வான்மீகி எழுதுவதற்கு முன்னரே வெளிவந்துவிட்டதாக உரையாடல்களும் சிங்களச் சூழலில் நடந்து வருவதைக் காண முடியும். இராமாயணத்தைவிட பழமையான 'சூத்திர பிடக' என்கிற பாளிமொழி பௌத்த ஜாதகக் கதையில் இது காணப்படுகிறது. சமூக வலைத்தளங்களில் சிங்கள மொழியில் இது தொடர்பில் நடக்கும் சில உரையாடல்களை இக்கட்டுரைக்காக கவனிக்க நேரிட்டது. இராமாயணமா,

அல்லது 'தசரத ஜாதகய'வா காலத்தால் மூத்தது எது என்கிற விவாதம் பலமாக நடந்து வருவதைக் காண முடிகிறது. சிலர் 'தசரத ஜாதகய'விலிருந்து தான் வான்மீகி அக்கதையை விரித்திருக்கிறார் என்று வாதாடுவதைக் காண முடிகிறது.



இராவணனின் பாத்திரம் அல்லாத 'தசரத ஜாதகய' என்கிற இலக்கியத்தை சிங்களத் தரப்பில் ஏற்றுக்கொண்டால் இராவணன் பற்றிய புனைவுகளையும் ஏற்றுக்கொள்ளமுடியாது போய்விடும் என்பதையும் இங்கே சுட்டிக்காட்டுவது நல்லது.

இராவணனும், இலங்கையும் இன்றியமையாத இராமாயணம் பற்றி ஆசிய ராஜரீகக் கழகத்தின் ஆய்வுச் சஞ்சிகையில் வெளிவந்த N. B. Utgikar எழுதிய The Story of the Dasaratha Jataka and of the Ramayana (JRAS - October 1924) என்கிற கட்டுரையும் Gombrich, Richard இந்த இரு காவியங்களையும் இராமாயணத்தோடு ஒப்பிட்டு 1985இல் எழுதிய 'The Vessantara Jataka, the Ramayana and the Dasaratha Jataka', Journal of the American Oriental Society. கட்டுரையும் முக்கியமான ஆய்வுக் கட்டுரைகளாகக் கருதலாம்.

இலங்கையில் 'வெஸ்ஸந்தர காவ்ய' என்கிற பெயரில் சிங்களத்தில் இருக்கிறது. இலங்கையின் பல விகாரைகளில் ஓவியங்களாக இக்கதை வரையப்பட்டுள்ளன. சிங்கள மக்கள் மத்தியில் இன்றும் இறந்தவர் வீடுகளில் முதல் ஏழு நாட்களும் விழித்திருந்து ஒப்பாரிப் புராண இலக்கியங்களைப் பாடுவார்கள். குறிப்பாக ஜாதகக் கதைகள் என்று கூறக்கூடிய கதைகளாக இருக்கும். அப்படிப் பாடப்படுகின்ற நூல்களை 'மலபொத்த' (இறப்புநூல்) என்பார்கள். அவ்வாறான 'மலபொத்'களில் அதிகப் பிரசித்தம் பெற்றது இந்த 'வெஸ்ஸந்தர காவ்ய' என்கிற நூல். கண்டியிலுள்ள தெகல்தொருவ என்கிற விகாரையில் உள்ள இந்தக் கதையின்

சுவரோவியம் பிரசித்திபெற்றது. அந்த ஓவியம் 1973 ஆம் ஆண்டு முத்திரையாக வெளியிடப்பட்டது.

கம்போடிய இராமாயணத்தில் (Reamker) இராவணனுக்கு இரண்டு மனைவிகள் முதல் மனைவி மண்டோல்கிரிட், இரண்டாவது மனைவி அகிநட். சீதை பாத்திரமானது இராவணனின் மகளாக காணப்படுகிறது சீதையால் அழிவு வரும் என்கிற சோதிடக் கூற்றால் சீதை பானையில் வைத்துக் கடலில் விடப்படுகிறாள் என்பதாக கதை நகருகிறது.

**குமாரதாசர் இயற்றிய ஜானகிகரணய:**




இப்படியெல்லாம் இருக்க 'ஜானகிகரண' என்கிற நூல் தான் முக்கியமாக இராமாயணக் கதையாக பெரும்பாலும் ஒத்த கதையாக சிங்களத்தில் காணக் கிடைக்கிறது. இதன் மூலப் பிரதி சமஸ்கிருதத்தில் எழுதப்பட்டிருக்கிறது. இலங்கை மன்னனும் மகாகவியுமான குமாரதாச(ர்) என்கிற அரசனால் 6 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட மகாகாவியமென நூலின் முகப்பில் குறிப்பிடப்படுகிறது.(2) குமாரதாச அல்லது குமாரதாதுசேனன் என்றும் சிங்கள, பாளி இலக்கியங்களில் அழைக்கப்படுகிறார். சிங்களத்தில் 'ஜானகிகரண'வை 'மகாகாவியம்' என்கிற அடைமொழியில் தான் அழைக்கிறார்கள். சிங்கள இலக்கிய நூல்களில் இலங்கையின் முதலாவது மகாகாவியம் என 'ஜானகிகரண'வை குறிப்பிடுவார்கள்.

முகலன் என்கிற அரசனின் புத்திரனான குமாரதாச ஒரு புலமைத்துவமுள்ள பண்டிதர் எனவும், காளிதாசன் என்கிற தனது நண்பனின் மரணத்தைத் தாங்காது தானும் அதே நாள் தீயில் குதித்துத் தற்கொலை செய்துகொண்டு இறந்துபோனான் என்று பூஜாவலியவில் குறிப்பிடப்படுகிறது. இதே கதை ராஜாவலியவிலும் கூறப்பட்டுள்ளது. கவிஞர் காளிதாசன் கொலைசெய்யப்பட்டதைத் தொடர்ந்து அக்கவிஞனுக்காகத் தற்கொலை செய்துகொண்டதாக வாய்மொழி வரலாறும் உண்டு. குமாரதாசர் மௌரிய வம்சாவளியிலிருந்து வந்தவர் என்பதைப் பல ஆய்வு நூல்களிலும் குறிப்பிடுகின்றன. அதாவது அவரின் முன்னோர்களான தாதுசேனன், முகலன் அனைவரும் மௌரிய வழிவந்தவர்கள் என்கின்றனர்.(3)

'பூஜாவலி'யின் பிரகாரம் தாதுசேனனின் (Dasenkeli) புதல்வர்களில் புதல்வர்கள் காசியப்பன், முகலன் (மொக்கலான) ஆகியோர். தந்தையான தாதுசேனனைக் கொன்றுவிட்டு ஆட்சியேறுகிறான் காசியப்பன். பட்டத்து இளவரசனான முகலன்

தமிழகத்துக்கு தப்பியோடிவிடுகிறான். முகலன் அங்கிருந்து பெரும் படையைத் திரட்டிக்கொண்டு வந்து காசியப்பனை வீழ்த்திவிட்டு பதினெட்டு ஆண்டுகள் ஆட்சி செய்தான். அவனின் மகனான பண்டிதப் புலமையுள்ள குமாரதாச ஒன்பது ஆண்டுகள் (கி.பி. 513-522) சிகிரியவை ஆட்சி செய்ததாகவும், தனது நண்பனின் சிதையில் தானும் பாய்ந்து உயிரை மாய்த்துக்கொண்டான் எனவும் விவரிக்கிறது. (4)

தென்னிலங்கையில் மாத்தறை மாவட்டத்திலுள்ள 'ஹத்போதிவத்தை' (Hatbodiwatta - ஏழு அரச மரத் தோட்டம் என்று பொருள்) என்கிற இடத்தில் தான் இப்படியொரு சம்பவம் இலங்கையில் நிகழ்ந்ததாக பல நூல்களில் குறிப்பிடப்படுகின்றன.(5) ஆனால் அது பெரும்பாலும் அனுராதபுரத்துக்கு அருகில் நிகழ்ந்திருக்கக் கூடும் என்றும் வேறு சில நூல்களில் குறிப்பிடப்படுகின்றன. (6)

மகாவம்சத்தை முதலில் மொழிபெயர்த்த வில்ஹைம் கைகர் தனது சிங்கள மொழியும் இலக்கியமும் (Literatur und Sprache der Singhalesen) நூலிலும் காளிதாச கவிஞனுடன் நெருங்கிய நட்பு பாராட்டிய கவிஞ மன்னன் குமாரதாச என்கிறார். கைகர் 1929 ஆம் ஆண்டு தொகுத்த மகாவம்சத்தின் இரண்டாம் தொகுப்பான சூளவம்சத்தின் முதலாம் பாகத்திலும் 'ஒன்பது அரசர்கள்' என்கிற அத்தியாயத்தில் இந்தக் கதை காணக் கிடைக்கிறது. நீலகண்ட சாஸ்திரி உள்ளிட்ட சில வரலாற்று அறிஞர்கள் மன்னர் குமாரதாசரும், கவிஞர் குமாரதாசரும் இரு வேறு நபர்கள் என்றே நம்புகிறார்கள்.(7)

குமாரதாச காஞ்சியில் வாழ்ந்த காலத்தில் தான் ஜானகிகரணத்தை எழுதியதாக குறிப்பிடப்படுகிறது. அவரின் தந்தை முகலன் இந்தியாவுக்குத் தப்பியோடி வாழ்ந்த காலத்தில் இது எழுதப்பட்டிருக்க வேண்டும். சமஸ்கிருதத்தையும் அங்கே அவர் கற்றுத் தேறியிருக்கலாம். ஜானகிகரண காளிதாசனின் பார்வைக்குச் சென்றடைந்ததும் அந்த வழியிலாக இருக்கலாம். இலங்கையில் ஜானகிகரணய முதற் தடவையாக 1891இல் சமஸ்கிருத ஓலைச்சுவடிகளில் இருந்து தொகுக்கப்பட்டு சிங்களத்தில் வெளிக்கொணரப்பட்டது. முதலாவது வெளியிடப்பட்ட அந்தப் பிரதியில் அன்றைய ஆளுநர் சேர் ஆர்தர் எளிபேங் ஹெவ்லொக் (Sir Arthur Elibank Havelock) அவர்களின் அனுமதியுடன் வெளியிடப்படுவதாக முன் பக்க வசனத்துடன் இருப்பதைக் கவனிக்க முடிகிறது.

இலங்கையில் 'ஜானகிகரண' மகாகாவியத்தின் மூலப் பிரதியை தேடிக் கண்டுபிடிக்க முடியாதுபோன நிலையில் அதன் உதிரிப் பிரதிகளைக் கொண்டு ரத்மலான தர்மராம ஹிமி அதில் இருந்த கிடைத்த சுலோகங்களைத் தொகுத்து 1891இல் மீள உருவாக்கினார்.(8) அதில் மொத்தம் பதினைந்து அத்தியாயங்களில் பதிநான்கைத் தான் அவரால் சீரமைத்துத் தொகுக்க முடிந்தது. பின்னர் இதன் மூலப் பிரதி கண்டுபிடிக்கப்பட்டது. மூலப் பிரதிக்கும் ரத்மலான ஹிமியின் பிரதிக்கும் இடையில் பெரிய வித்தியாசம் காணப்படவில்லை என்று அறியப்படுகிறது. இராவணனுக்கு சார்பான கதையாக இது அமைக்கப்பட்டிருக்கிறது. இலங்கையில் மொத்தம் பதினைந்து அத்தியாயங்களை (Sarga) உடைய ஓலைச்சுவடி

கண்டெடுக்கப்பட்டன. இறுதி அத்தியாயம் 25வது அத்தியாயம் என்று காணப்படுவதால் இடையில் பத்து அத்தியாயங்கள் தவறவிடப்பட்டுள்ளதை உணரமுடிந்துள்ளது. 18 அங்குலம் கொண்டதும், ஒரே ஓலையில் எட்டு வரிகளைக் கொண்டதுமான 101 பனையோலைச் சுவடிகளைக் கொண்டது அது.(9) இதேவேளை மலபாரில் 1920 ஆம் ஆண்டு கண்டெடுக்கப்பட்ட பிரதியில் மொத்தம் 20 அத்தியாயங்கள் சமஸ்கிருதத்திலேயே உள்ளன. அவை மொத்தமாக 54 ஓலைகளைக் கொண்டவை. அவற்றிலும் சில தவறவிடப்பட்டனவாக இருந்துள்ளன. திருவாங்கூர் வடக்கில் இருந்த ஒரு நம்பூதிரி குடும்பத்தினரின் சேகரிப்பில் மலையாள எழுத்தில் எழுதப்பட்ட இந்த சமஸ்கிருதப் பிரதி கண்டெடுக்கப்பட்டு பின்னர் மெட்ராசில் உள்ள கிழக்கத்திய ஓலைச்சுவடி நூலகத்தில் இன்றும் முழுமையாக பாதுகாக்கப்பட்டு வருகிறது. ஜானகிகரணய பற்றிய ஆய்வுகளைச் செய்த சீ.எஸ்.சுவாமிநாதனின் கணிப்பின் படி அது கண்டெடுக்கப்பட்ட காலத்தைவிட ஒரு நூறாண்டுகள் பழமையானதாக இருக்கும் என்கிறார். (10)

ஆங்கிலேய அறிஞரான லயனல் பார்னட் (Lionel Barnett) என்பவரிடமும் 118 ஓலைகளைக் கொண்ட 'ஜானகிகரணய'வின் மலையாள மொழிப் பிரதி இருப்பதை அறிய முடிந்தது. அதுவே 16 பதினாறாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒன்றென கணிக்கப்பட்டுள்ளது. பார்னட்டின் கணிப்பின்படி அது சிங்களத்தில் இருந்து மொழிபெயர்க்கப்பட்டிருக்கலாம் என்கிறார். அதுவரை வெளியிடப்படாத 16வது அத்தியாயத்தையும் அவர் 1926ஆம் ஆண்டு வெளியிட்டார்.(11) இலங்கையில் இருந்து கேரளாவுக்கு எவ்வாறு இது சென்றது, எப்படி இது பிரபல்லியம் பெற்றது என்பது பற்றி பல ஆய்வாளர்களும் வியப்புடன் பார்க்கிறார்கள். கேரளாவுக்கும், இலங்கைக்கும் (இன்னும் சொல்லப்போனால் மலையாளத்துக்கும் சிங்களத்துக்கும் இருந்த உறவு) அன்று இருந்த கலாசார உறவையும் இது எடுத்துக்காட்டுகிறது. எப்படியோ இன்று சிங்களத்தில் முழு வடிவ நூலாக 'ஜானகிகரணய' கிடைக்கிறது. உயர்தர வகுப்புகளிலும், மேற்படிப்புகளிலும் பாடமாக இருக்கிறது.

1943 ஆம் ஆண்டு தான் இன்றைய முழுமைப்படுத்தப்பட்ட ஜானகிகரணய வெளியிடப்பட்டது. இதனை தொகுப்பதில் அதிக சிரத்தைக் காட்டியவர்கள் இலங்கையின் மூத்த தொல்லியல் வரலாற்றாசிரியர்களான சீ.ஈ.கொடகும்புரவும், எஸ்.பரணவித்தானவும். அந்த நூலின் அறிமுகத்தில் அக்கவிதையைப் பற்றி சீ.ஈ.கொடகும்புரவும், கவிஞரைப் பற்றி எஸ்.பரணவித்தானவும் எழுதியிருந்தார்கள். இதற்காக அவர்கள் மேற்கொண்ட பின்புல உழைப்பைப் பற்றிய முக்கிய கட்டுரையொன்றை The Journal of the Ceylon Branch of the Royal Asiatic Society of Great Britain & Ireland இல் வெளியாகியிருந்தது.(12) ஜானகிகரண பற்றிய ஆய்வுகளில் இன்னொரு முக்கிய ஆய்வுக் கட்டுரையாக F.W.Thomas எழுதிய குமாரதாசரின் ஜானகிகரண என்கிற கட்டுரையும் முக்கியமானது. அவ்வாய்வுக் கட்டுரையில் பல பக்கங்களுக்கு கலைச்சொல் விளக்கப் பட்டியலை அதில் தந்திருப்பது அக்கட்டுரையின் முக்கிய சிறப்பு.(13) 'ஜானகிஹரணய' பின்னர் K.N.Joglrkar என்பவரால் ஆங்கில மொழிக்கு மொழிபெயர்க்கப்பட்டு 1908 ஆம் ஆண்டு இந்தியாவில் பம்பாய் நகரில் வெளியிடப்பட்டது.

ஏற்கெனவே 'தசரத ஜாதக' கதையை அறிந்த சிங்கள மக்களுக்கு 'ஜானகிகரண' அந்நியமாக இருந்ததில்லை. பெயரிலேயே ஜானகி இருக்கிறது. ஜானகி சீதையின் இன்னொரு பெயர். எனவே சீதையை மையப் பாத்திரமாகக் கொண்ட காவியமாக இது காணப்படுகிறது. 'ஜானகிகரணய' என்றால் 'ஜானகியை சுவீகரிப்பது' (கடத்திச் செல்வது) என்று பொருள். இதில் சீதை இராவணன் கடத்திச் செல்வதைத் தான் ஜானகிகரணய என்று அதற்குப் பெயர் சூட்டப்பட்டிருக்கிறது.

மகாவம்சம் தோற்றம்பெற்ற காலப்பகுதியில் அதிகளவான பிராமிக் கல்வெட்டுக்கள் தோன்றவில்லை ஆனால் இக்காலப்பகுதியில் பிராமணியத்தின் 'தேவ மொழி'யாகிய சமஸ்கிருதத்தின் செல்வாக்கு இலங்கையில் தலைதூக்கியதைக் காணலாம். மகாஞான பௌத்த பிக்குகளைச் சார்ந்த அபயகிரி, ஜேதவன விகாரைகள் சமஸ்கிருத மொழிக் கல்விக்குப் புகழ் பெற்றவையாக விளங்கின. இக்காலத்தில் மகாவிகாரை பாளி மொழிமூலம் கற்பித்தல் நடவடிக்கைகளை தீவிரமாக மேற்கொண்டு வந்தது.

ஆனால் குறிப்பிட்ட சில மன்னர்கள் சமஸ்கிருதத்தினை ஆட்சி மொழியாகவும், விளம்பரங்களை மக்களுக்கு அறிவிக்கும் மொழியாகவும் பயன்படுத்தினர். உதாரணமாக மகாஞான கருத்துக்களைக் கூறும் குச்சவெளிக் கல்வெட்டு, திரியாய் கல்வெட்டு போன்றன சமஸ்கிருத மொழியிலேயே எழுதப்பட்டுள்ளன. மேலும் அனுராதபுரத்திலுள்ள விஜயராம எனும் இடங்களில் கண்டெடுக்கப்பட்ட பஞ்சவிம்; சதிசஹஸ்திகா, பிரபஞ்சபாரமுதா போன்ற மகாஞான நூல்களில் உள்ள சமஸ்கிருத மொழிச் சுலோகங்களின் பகுதிகள் பொறிக்கப்பட்டுள்ளன. இதே சமஸ்கிருத மொழியில் தான் சாரார்த்த சங்கிரகம், ஜாதகமாலா மட்டுமன்றி ஜானகீ ஹரணமும் சமஸ்கிருதத்தில் எழுந்தன. இலங்கைத் தீவில் சமஸ்கிருத மயமாக்கலின் செல்வாக்கைத் தடுக்கும் நோக்கில், பல்வேறு வழிகளில், பாமர மக்களிடையேயும், பிக்குகளிடையேயும் நிலவி வந்த சுதேச மரபுகளையும் தழுவி பாளி மொழியின் இலக்கண, இலக்கிய அமைதிக்கு ஏற்ப வரலாற்றையும், பௌத்த பண்பாட்டையும் வலியுறுத்தும் ஒரு 'பெறுமதியான இலக்கியம்' எழவேண்டிய சூழ்நிலை நிலவியது. அதனை மகாநாமதேரர் மகாவம்சத்தின் மூலம் நிறைவேற்றினார் என்பதை நாமறிவோம். அந்த வகையில் சமஸ்கிருதத்தில் இலங்கை மன்னரொருவரால் எழுதப்பட்டதாக அறியப்படும் ஜானகிகரணய காவியம் இலங்கையின் இலக்கிய வரலாற்றுப் பண்பாட்டில் முக்கியதொரு இலக்கியமாக கருதப்படுகிறது.

இலங்கையில் அப்போது சமஸ்கிருதத்தை வாசித்தறியும் வாய்ப்பைப் பெற்ற குழாமினர் சிறு பகுதியினரே என்பதைச் சொல்லத் தேவையில்லை. சில பிராமணர்களும், நீதிமன்ற தரப்பினரும், சமஸ்கிருதம் கற்ற பௌத்த பிக்குகளும், அரச பரம்பரையினரில் சிலருமாகத் தான் இருந்தார்கள். (கொடகும்புர, 2014) ஆக இத்தகைய சமஸ்கிருத இலக்கியங்கள் எளிய மக்களை அன்று சென்றடைந்ததில்லை. ஆனால் வாய்மொழியாக இவ்விலக்கியங்களின் சாராம்சம் ஓரளவு அறியப்பட்டிருந்ததை மறுப்பதற்கில்லை.

இலங்கையின் இலக்கியங்களில் இராமாயணத்தின் செல்வாக்கு குறித்து 'ராஜரீக ஆசிய கழகம்' (Royal Asiatic Society of Sri Lanka -RASSL) நடத்திய ஒரு கருத்தரங்கில் ஆற்றப்பட்ட ஆய்வுரைகளைத் தொகுத்து 2014 ஆம் ஆண்டு வெளியான அதன் ஆய்வேட்டில் (Journal of the Royal Asiatic Society of Sri Lanka - Vol. 59) இராமாயண சிறப்பிதழாக வெளியிட்டது. அக்கட்டுரைகள் இதைப் பற்றிய மேலதிகத் தேடல்களைச் செய்பவர்களுக்குப் பெரிதும் உதவும். இதில் பிரபல வரலாற்றாசிரியரான கொடகும்புர எழுதிய 'இலங்கையில் இராமாயணமும், இராமாயணத்தில் இலங்கையும்' வெளியான என்கிற கட்டுரை பல விபரங்களை உள்ளடக்கியது.(14)

**காளிதாச – குமாரதாச நட்பைப் போற்றும் இலக்கியங்கள்:**
இந்திய வரலாற்றில் காளிதாசன் ஒரு முக்கிய கவிஞனாக போற்றப்படுகிறான். கிழக்கின் ஷேக்ஸ்பியர் என்று பல அறிஞர்கள் காளிதாசனைக் குறிப்பிடுகிறார்கள். காளிதாசனின் பூர்வீகம், வாழ்ந்த காலம் பற்றி சற்று முன்னுக்குப் பின் முரணான தகவல்கள் உண்டு. காளிதாசன் இமாலயப் பகுதிக்கு அண்மித்த உஜ்ஜேனி பிரதேசத்தைச் சேர்ந்தவர் என்றும் கூறப்படுகிறது. அதே வேளை வேறு பல நூல்களில் காஷ்மீரைச் சேர்ந்தவர் என்கிறது. சில நூல்களில் விக்கிரமாதித்த பேரரசனின் சபையில் பாடிவந்த புலவன் என்றும் கூறப்படுகிறது. அதேவேளை வாழ்ந்த காலமும் கூட சந்திரகுப்தனின் காலத்தில் (380-430) காலப்பகுதியில் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. அதேபோல வேறு பல மூலாதாரங்களில் 6 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்ததாக நம்பப்படுகிறது. அதுபோல காளிதாசன் என்கிற பெயரில் இன்னும் இன்னும் சில புலவர்கள் வெவ்வேறு காலங்களில் இருந்துள்ளார்கள் என்கிற தர்க்கமும் இருக்கிறது.

காளிதாசனால் எழுதப்பட்ட சகுந்தல, மேகதூதம், இரகுவம்சம், குமாரசம்பவம், மாளவிகாக்கினிமித்திரம், விக்கிரமோர்வசியம், ருது சம்ஹாரம் போன்ற படைப்புகள் காளிதாசனின் பெயரை இன்றும் நிலைக்க வைத்திருகிறது. காளிதாசன் இயற்றிய இலக்கியங்கள் பற்றி ஆயிரக்கணக்கான நூல்கள் பேசியபோதும் காளிதாசனின் முடிவு பற்றிய கதை அந்தளவு பேசுபொருளாக இருந்ததில்லை என்பதை உணர முடிகிறது. காளிதாசனின் முடிவு பற்றிய கதைகள் இலங்கையின் இலக்கியத்தோடு தொடர்புடைய ஒன்றாக இருந்ததாலோ என்னவோ இலங்கையின் இலக்கியங்களில் நிறையவே பேசப்பட்டிருக்கிறது. இலங்கை அரசனான குமாரதாசனின் மிகவும் நெருங்கிய நண்பன் என பல இலக்கியங்கள் கூறுகின்றன.

காளிதாசனின் ரகுவம்ச காவியத்தால் ஈர்க்கப்பட்டவர் மன்னர் குமாரதாச, மன்னர் குமாரதாசனின் ஜானகிகரணத்தால் ஈர்க்கப்பட்டவர் கவிஞர் காளிதாசன். காளிதாசன் இலங்கை வந்து குமாரதாசனின் நெருங்கிய நண்பனாக ஆகிறான். இருவரும் நட்புக்கு இலக்கணமாகத் திகழ்கிறார்கள். குமாரதாச மன்னனின் அந்தப்புர நாயகியொருத்தியும்(15) காளிதாசனும் காதலிக்கிறார்கள் என்று

அரசனின் ஒற்றன் தகவல் கூறுகிறான் கையும் களவுமாக இதைப் பிடிப்பதற்காக அந்தப்புரத்து மதிலில் குமாரதாச மன்னன் கவிதை வரிகளை எழுதி அதைப் பூரணப்படுத்துவோருக்கு எடைக்கு எடை சன்மானம் வழங்கப்படும் என்று அறிவித்துச் செல்கிறான்.

அக்கவிதையின் எஞ்சிய பகுதியை காளிதாசன் பூர்த்தி செய்கிறான். அந்தப்புரத்து நாயகி சன்மானத்தை தானே கவர்வதற்காக காளிதாசனைக் கொன்றுவிட்டுத் தானே அதைப் பூரணப்படுத்தியதாக மன்னனிடம் அறிவிக்கிறாள். அதைப் பூரணப்படுத்தும் ஆற்றல் காளிதாசனுக்கு மட்டுமே இருப்பதை அரசன் அறிவான். நடந்ததை அறிந்து மனமுடைந்து நண்பன் காளிதாசனின் உடலை எடுத்துச் சென்று தகனம் செய்து மனம் ஆறாமல் அதே தீயில் குதித்து தற்கொலை செய்துகொண்டு நண்பனோடு தானும் அக்கினியில் சங்கமமாகிறான்.(16) கூடவே அவனின் ஐந்து அரசிகளும் சிதையில் குதித்து உடன்கட்டை ஏறி உயிரை மாய்த்துக்கொள்கிறார்கள்.(17) இந்தக் கதையின் பல வடிவங்கள் உண்டு. ஆனால் காளிதாசன் இறுதியில் கொல்லப்பட்டார் என்பதில் அக்கதைகளில் மாற்றம் இல்லை.

காளிதாசனின் காவியங்கள் நாடகங்களாக இன்றும் இருப்பதைப் போல, காளிதாசன் கொல்லப்பட்ட சம்பவத்தையும், காளிதாசர் – குமாரதாசர் ஆகிய இருவரின் நட்பைப் போற்றியும் நாடகங்கள் உள்ளன. அவற்றில் முக்கியமானது மீரா காந்த், மனு விக்கிரமன் ஆகியோர் எழுதிய 'அறிந்தேன் ஆனால் கண்டதில்லை' (Shrooyate Na Tu Dristryate/Suna HuaAndekha or 'Heard, But Never Seen') என்கிற தலைப்பில் உருவாக்கிய நாடகப் பிரதி. 'அறிந்தேன் ஆனால் கண்டதில்லை' என்பது குமாரதாச மன்னன் எழுதி முடிக்காமல்; காளிதாசன் முடிப்பதற்காக விட்டுச் சென்ற வரிகள்.(18)

**திரைப்படங்களில் மகாகவி காளிதாசர்:**

இந்தக் கதையையொட்டி திரைப்படங்கள் கூட வெளிவந்துள்ளன. தமிழ்ச் சினிமா வரலாற்றில் முதலாவது பேசும் படம்; 1931 இல் வெளியான 'காளிதாஸ்' என்கிற திரைப்படம் தான். தமிழிலும் தெலுங்கிலும் ஒரே காலத்தில் வெளிவந்தது அத்திரைப்படம். அதன் விளம்பரத்திலேயே (First Tamil & Telugu Talkie) என்கிற விளம்பரத்தோடு வெளியான திரைப்படம் அது. தமிழில் முதல் பாடல் இடம்பெற்ற படமும் இதுதான். அதுவும் ஐம்பது பாடல்கள் அதில் இடம்பெற்றன.(19) அன்றைய நாளில் 8000 ரூபா செலவில் உருவாக்கப்பட்டு 75,000 ரூபா வசூலை சம்பாதித்த திரைப்படம். அழிந்துபோன சினிமாப் பிரதிகளில் அதுவும் ஒன்று. ஆனால் இந்தத் திரைப்படத்தைவிட அதிகத் தொழில்நுட்ப நேர்த்தியுடன் 'மகாகவி காளிதாஸ்' என்கிற திரைப்படம் 1966 இல் வெளிவந்தது. அத்திரைப்படத்தில் காளிதாசனாக சிவாஜி கணேசனும், அரசன் குமாரதாசனாக முத்துராமனும் (படத்தின் படி போஜா அரசன்) நடித்திருந்தார்கள்.(20) இந்தத் திரைப்படத்தின் கே.வி.மகாதேவனின் இசையில் அமைந்த பாடல்கள் அன்று பிரபலமாக இருந்தது போல இன்றும் கேட்க இனிமையானவை. 'மலரும் வான் நிலவும்…', 'யார் தருவார் இந்த அரியாசனம்…', 'கலைமகள் எனக்கொரு ஆணையிட்டாள்…', 'காலத்தில் அழியாத, காவியம்

தரவந்த...' போன்ற பாடல்களை இங்கு நினைவுக்குக் கொண்டு வரலாம். இந்தத் திரைப்படத்தில் காளிதாசர், குமாரதாசர் ஆகியோரின் நட்பை மிகவும் அற்புதமாக நடிப்பால் ஆக்கியிருக்கிறார்கள் சிவாஜியும், முத்துராமனும்.




கதையின் படி குமாரதாசனின் மனைவியர் இருவரில் ஒருவரான மோகனாங்கியின் (எல்.விஜயலட்சுமி) காதலை ஏற்கமறுத்து புறக்கணிக்கிறார் காளிதாசன். காளிதாசனின் 'சகுந்தலை' காவியம் தன்னைப் பற்றிய காவியம் தான் என நம்புகிறார் மோகனாங்கி. காளிதாசனின் காதல் மறுப்பினால் வெறுப்படைந்த மோகனாங்கி காளிதாசனுக்கும் மற்றோர் அரசிக்கும் இடையில் கள்ளக்காதல் இருப்பதாக வெகுஜனங்கள் மத்தியில் வதந்தியைப் பரப்பிவிடுகிறார். அப்படியோர் வதந்தி உலாவுவதை மன்னர் குமாரதாசர் மாறுவேடத்தில் நகர்வலம் செல்லும்போது அறிந்துகொள்கிறார். அதேவேளை தனது நண்பன் காளிதாசன் அப்படிப்பட்டவன் அல்லன் என்பதையும் அறிந்துகொள்கிறார்.

ஆனால், காளிதாசனின் மனைவி அந்த வதந்தியை நம்பியதால் துவண்டுபோன காளிதாசன் தன் மனைவியிடம் இருந்து பிரிந்து செல்கிறார். "நீ மனைவியைப் பிரியலாம், மற்றவர்களை விட்டுப் பிரியலாம் எப்படி நண்பா என்னை விட்டுப் பிரிய உனக்கெப்படியடா மனம் வந்தது" என்று மன்னன் துவண்டு போகிறார். நண்பனைத்

தேடிக் கண்டுபிடிக்க ஒரு வழி செய்கிறான். ஒரு கவிதையை எழுதி அதன் மீதிக் கவிதையை முடிப்பவருக்கு ராஜ்ஜியத்தில் பாதியை எழுதித் தருவதாக அறிவிக்கிறார். அது காளிதாசனால் மட்டும் தான் முடியும் என நம்புகிறார். அந்தப் பரிசை கவர்வதற்காக மோகனாங்கி சதி செய்கிறாள்.

விரக்தியுற்றுத் திரிகிற காளிதாசனைக் கண்டுபிடிக்கிறாள். ஆசைகாட்டி அரசனின் கவிதையின் மிகுதி வரிகளை எழுதிப் பெறுகிறாள். அரசனிடம் வந்து அக்கவிதையைத் தானே பூர்த்தி செய்துவிட்டதாக காண்பித்துப் பாதி ராஜ்ஜியத்தைக் கேட்கிறாள். கவிதையை வாசித்த அரசனுக்கு அது காளிதாசனின் வரிகள் என்பதை உணர நேரமெடுக்கவில்லை. அதேவேளை காளிதாசன் உயிரோடு இருக்க வாய்ப்புமில்லை என்று பதைபதைக்கிறான். என்ன நேர்ந்திருக்கக் கூடும் என்பதை உணர்ந்து “காளிதாசன் எங்கே..? உயிரோடு வைத்திருக்கிறாயா, கொன்று விட்டாயா?” என மோகனாங்கியை ஆவேசத்தோடு வினவுகிறான். “காளிதாசனோடு வாழத் தான் முடியவில்லை, ஆனால் இனி காளிதாசனின் கடைசி அத்தியாயத்தில் இனி என் பெயரும் இருக்கும்” எனக் கொக்கரிக்கிறாள். காளிதாசனின் தலையைக் கொய்து கொன்றுவிட்டதையும் ஒப்புக்கொள்கிறார் மோகனாங்கி. மோகனாங்கியை அதே இடத்தில் கொன்று விடுகிறான் குமாரதாசர். காளிதாசன் கொல்லப்பட்ட இடத்துக்குச் சென்று அழுதுபுலம்பி தானும் காளிதாசனோடு மரணிக்கிறார். ஐம்பது வருடங்களுக்கு முன் வெளிவந்த இந்தத் திரைப்படத்தின் இறுதிக் காட்சியில் துண்டிக்கப்பட்ட சிவாஜியின் தலை பேசுகின்ற காட்சிப் படமாக்கப்பட்டிருக்கிற விதம் அற்புதம். 1983 ஆம் ஆண்டு கன்னட மொழியில் வெளியான 'கவிரத்ன காளிதாச' என்கிற திரைப்படத்தின் இறுதிக் காட்சியில் இறந்த காளிதாசும், போஜா மன்னரும் (குமாரதாசர்) அம்மன் அருள் பெற்று மீண்டும் உயிர்பெற்று எழும்புவதாக முடியும். அதில் காளிதாசனாக நடித்தவர் (பிற்காலத்தில் சந்தனக்கடத்தல் வீரப்பனால் கடத்தப்பட்ட) பிரபல கன்னட நடிகர் ராஜ்குமார்.

**முடிவுரை:**
ஜானகிகரண, குமாரதாச, காளிதாசன் பற்றிய தமிழ் திறனாய்வின் அவசியத்தை இக்கட்டுரைக்கான தேடல்களின் போது அதிகம் உணர்ந்து கொள்ள முடிந்தது. ஜானகிகரண பற்றிய ஆயிரக்கணக்கான ஆய்வுக்கட்டுரைகள் பல்வேறு மொழிகளில் இருப்பதை இக்கட்டுரைக்கானத் தேடலில் அறிந்துகொள்ள முடிந்தது அவற்றில் முன்னுக்குப் பின் முரணான பல்வேறு தர்க்கங்கள் முன்வைக்கப்படுவதையும் காண முடிகிறது. தமிழில் இதைப் பற்றிய போதிய ஆய்வுகள் இல்லை என்றே கூற முடியும். அந்தத் தர்க்கங்கள் தமிழில் வெளிவருவதற்கான ஆரம்பமாக இக்கட்டுரையும் அமையும் என்றே நம்புகிறேன். ஜானகிகரண உள்ளிட்ட இராமாயணத்தோடு சம்பந்தப்பட்ட இலக்கியங்களின் உள்ளடக்கத்தின் ஒப்பீட்டு ஆய்வு தமிழில் கவனிக்கப்படவேண்டிய, மேற்கொள்ள வேண்டிய முக்கிய ஆய்வென்பதைப் பரிந்துரை செய்யலாம்.

அடிக்குறிப்புகள்:

1. Susantha Goonatilake, Introduction to the Issue on the Rāmāyaṇ, Journal of the Royal Asiatic Society of Sri Lanka, Vol. 59, No. 2, Special Issue on the Ramayana (2014)
2. Janakiharana: An Epic Poem in Sanskrit by a celebrated Sinhalese Poet Kumaradasa, King of Ceylon; restored into Metre from a Sihalese Literal Paraphrase and edited with the Revised Sanna. By K.Dharmarama Sthavira. Printed & published D.D.J.Senanayaka, Arachchi (1891)
3. Janakiharanam of Kumaradasa, cantos I-V ; with a Sanskrit commentary by Narayan Vasudeva Nigudkar and English notes, and translation by K.M. Joglekar, The Oriental Publishing co, Bombay, 1908
4. Ibid (Preface)
5. Ananda W.P.Guruge, Sri Lankan attitude to the Ramayana: a Historical analysis, Indologica Taurinensia (1993-1994)
6. L. E. Blaze, History of Ceylon, The Christian Literature society for India & Africa, Ceylon Branch, colombo, 1933
7. A History of South India, K.A.Nilakanta Sastri, pagc 344, Oxford University Press,I966
8. C. R. Swaminathan , Janakiharana of Kumaradasa: A Study, Motilal Banarsidass (December 8, 2000)
9. James D'Alwis, (Janakiharana Chapter p188-195) Descriptive Catalogue of Sanskrit, Pali, & Sinhalese Literary works of Ceylon, Vol I, William Sken, Government Printer, Ceylon, 1870.
10. Ajay Kamalakaran, Column | The mystery of Kerala's Sri Lankan Ramayana manuscripts, (https://www.onmanorama.com/lifestyle/keralaspora/2019/09/05/janakiharana-ramayana-manuscript-in-kerala.html)
11. Bulletin of the School of Oriental Studies, University of London, Vol. 4, No. 2(1926), pp. 285-293
12. K. T. W. SUMANASURIYA, Reviewed Work: The Janakiharana of Kumaradasa by S. Paranavitana, C. E. Godakumbura, The Journal of the Ceylon Branch of the Royal Asiatic Society of Great Britain & Ireland, Vol. 11 (1967)
13. F. W. Thomas The Janakiharana of Kumaradasa, The Journal of the Royal Asiatic Society of Great Britain and Ireland (Apr., 1901)
14. C.E. Godakumbura, Ramayana in Sri lanka and Lanka of the Ramayana, Journal of the Royal Asiatic Society of Sri Lanka Vol. 59, No. 2, Special Issue on the Ramayana (2014)
15. அந்தப்புரத்து நாயகி என்று ஓரிடத்திலும், வேலைக்காரி, இன்னொரு இராணி என வெவ்வேறு இலக்கியங்களில் கூறப்படுவதையும் இங்கே குறிப்பிட்டாக வேண்டும்.
16. Ratna Chanda, A Critical Study of the Janakiharana of Kumaradasa, (Thesis submitted for the Ph.D.Degree of the University of Calcutta) - 2016
17. K. Dharmarama Sthavira, Janakiharana: An Epic Poem in Sanskrit by a celebrated Sinhalese Poet Kumaradasa, King of Ceylon; restored into Metre from a Sihalese Literal Paraphrase and edited with the Revised Sanna, Satya/samuchchaya press Peliyagoda, 1891
18. Meera Kant and Manu Vikraman, Heard, But Never Seen, Indian Literature, Vol. 51, No. 1, Sahitya Akademi(January-February 2007)
19. The First Tamil talking picture, RANDOR Guy remembers… on the occasion of the 75th Anniversary of the Tamil talkie, Madras musing, Vol. XVI No. 14, 2006 Nov.
20. காளிதாசன் கொல்லப்பட்ட சம்பவத்துக்கு நிகரான கதை மைசூரில் கண்டெடுக்கப்பட்ட ஜானகிஹரணத்தில் காணப்படுகிறபோதும், அங்கே குமாரதாசனுக்குப் பதிலாக போஜா என்கிற பெயரில் மன்னரின் பெயர் காணப்படுகிறது.

நன்றி: தாய்வீடு.

# 32 • இறப்புச் சடங்குகள் உணர்த்தும் தமிழக பௌத்தக் கூறுகள்

• • • முனைவர் த. பரமேசுவரி

**முன்னுரை:**

பல்வேறு சமூக அமைப்புகள் சூழ்ந்து விளங்கும் தமிழகத்தில், ஒவ்வொரு சமூகத்திற்கும் கட்டுப்பாடுகளை நிர்ணயித்துள்ளனர். இந்த நிர்ணயம்தான் சடங்குகள். சடங்குகள், ஒழுங்கமைவுகளுக்காகவும் மகிழ்ச்சிகரமான சூழல்களை உருவாக்கவும் ஒற்றுமைத் தன்மையை நிலை நாட்டவும் மிகப்பெரும் பின்புலங்களாக விளங்குகின்றன. இன்பம், துன்பம் என்ற இருநிலைப்பாட்டு நிகழ்வுகளில் வேறுபட்ட நிலையில் சடங்குகள் செய்யப்பட்டாலும் இறை நடத்தைகள் அடிப்படையில்தான் இருக்கும்; (உதாரணமாக: சாணம், மஞ்சளில் பிள்ளையார் பிடித்தல், விளக்கேற்றுதல், தேங்காய், பழம் வைத்து வழிபடல்........) கட்டாயமாக்கப்படுவதற்கு இறைவனோடு தொடர்புப்படுத்தினால்தான் தொடரும் என்ற சிந்தனை ஆக்கமே இதன் மூலகாரணம் ஆகும். எனவே, தமிழகத்தில் சமணமும் பௌத்தமும் கோலோச்சிய காலத்தில் இதன் செல்வாக்கும் உயர்ந்திருந்தது. நம்முடைய சடங்குகளில் சமண, பௌத்த சமுதாயத்தின் கூறுகள் அடங்கிக்கிடக்கின்றன. அவ்விதமாக நம்முடைய இறப்புச் சடங்குகளில் பௌத்தக் கூறுகள் எவ்விதம் விளங்குகின்றன என்பதை நிறுவுவதாய் இவ்வாய்வு அமைகிறது.

**ஆய்வு முறையும் நோக்கமும்:**

சமூகத்தில் சடங்குகள் தோற்றுவித்ததற்கான காரணங்கள், மற்றும் அவைகளுக்கான பின்புலங்கள் கண்டறியப்படல் போன்றவையே இவ்வாய்வின் ஆய்வுச்சிக்கல்களாக அமைகின்றன. பல்வேறுபட்ட இனக்குழுக்களுக்கிடையே சடங்குமுறைகள் வழிவழியாகப் பின்பற்றி வருகின்றன. பின்பற்றுதல் என்பது சமயங்களோடு இருக்கும் இறைவனை மையப்புள்ளியாகக் கொண்டு கட்டாயமாக்கப்பட்டுள்ளது. எனவே, சடங்குகள் என்பவை சமயங்களோடு தொடர்புடையன என்பதன் முக்கியத்துவத்தையும் இறப்புச் சடங்குகளில் தமிழக பௌத்தக் கூறுகள் எவ்விதம் பொதிந்துள்ளன என்பதையும் நிறுவல்களுடன் விளக்குவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

ஆய்வு அணுகுமுறைகள்;

1. சமயம்,சடங்குகள் குறித்த வரையறைகள்,விளக்கங்கள் பற்றிக் குறிப்பிட 'சமூகவியல் அணுகுமுறை'யும்

2. இறப்புச்சடங்குகளின் தகல்களைச் சேகரிக்கத் தகவலாளர்களை அணுகும் நோக்கில் 'கள ஆய்வு அணுகுமுறை'யும்

3. கள ஆய்வில் சேகரித்தத் தகவல்களை விளக்கிக்கூற ‘விளக்கமுறை அணுகுமுறை’யும்

4. பகுப்பாய்வு செய்த தகவல்களை விளக்கிக்கூற 'விளக்கமுறை அணுகுமுறை'யும் கையாளப்பட்டுள்ளன.

பகுப்பாய்வு:
இவ்வாய்வானது கீழ்க்காணும் நிலையில் பகுப்பாய்வு செய்யப்பட்டுள்ளது:
1. சமயம் - வரையறை
2. சடங்குகள் - வரையறை
3. கொங்கு வட்டார இறப்புச்சடங்குகள்
4. இறப்புச்சடங்குகளை நிரல்படுத்துதல்
5. தமிழக பௌத்தம் : எச்சங்கள்
6. இறப்புச்சடங்குகளில் பொதிந்துள்ள பௌத்தக்கூறுகளை நிறுவுதல்

கலந்தாய்வு:
இறப்புச் சடங்குகள் நடத்தக்கூடிய தகவலாளர்களிடம் அதுகுறித்த தகவல்களைக் கலந்தாய்வு செய்யப்பட்டன.
ஆய்வு முன்னோடிகள்;
பரமசிவன் தொ. - தமிழக பௌத்தம்: எச்சங்கள் (ஆய்வுக் கட்டுரைகள் தொகுப்பு: பண்பாட்டு அசைவுகள், காலச்சுவடு பதிப்பகம் 2001)
ஞானசேகரன் தே - மந்திரம் சடங்குகள் சமயம், பார்த்திபன் பதிப்பகம், திருச்சி (2000)
சோமலெ - தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும் நேஷனல் புக் டிரஸ்ட் ஆப் புதுதில்லி, இந்தியா, (1924)
காந்தி, கா - தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, (1980)

**சமுதாயம்:**
மனிதன் விலங்கு நிலை வாழ்க்கை முறையில் இருந்து பரிணாமம் அடைந்தவுடன் கூடிவாழும் அமைப்பை உருவாக்கிக் கொண்டான். அந்த அமைப்பையே சமுதாயம் என்கிறோம். “Social என்ற ஆங்கிலச் சொல் சமுதாயத்தைக் குறிக்கும், society என்ற சொல்லோடு நெருங்கிய தொடர்புடையது. மனிதனைச் ‘சமூக விலங்கு’ (Social Animal) என்கின்றனர். இதனால் மனிதனை விலங்கினத்தில் இருந்து பிரிப்பதே சமுதாயம் என்ற சொல்லாகும் என்பதை உணரலாம்.” (பரமசிவானந்தம் ஆ.மு, (1962), சமுதாயமும் பண்பாடும், ப.26) மேலும், “ஒருவன் மற்றவரை உணர்தலே சமுதாயம் என்றும் மனித வாழ்வும் பண்பாடும் பிணைந்த நாளே சமுதாயம் உருவான பெருநாள்”. (மேலது, ப.26) என்றும் சமுதாயம் என்பதற்கு அறிஞர்கள் கூறும் வரையறை ஆகும்.

சமூக அமைப்பின் தோற்றங்களையும் தன்மைகளையும் குறித்து ஆராய்ந்த சிந்தனையாளர்கள் சில கருத்துக்களை முன்வைக்கின்றனர். அவையாவன :

- “சமூகத்தில் பெண்களைக் கொண்டு, கொடுத்துத் திருமண உறவுகளை நெறிப்படுத்தும் முகமாக சமூக அமைப்பு ஒருங்கமைகிறது என்பார் லெவிஸ்ட்ராஸ். திருமண உறவை அமைத்துக் கொள்ளும் முறையை

அடியொற்றி சமூகங்களிடையே வேறுபாடுகள் காணப்படுகின்றன என்றும் லெவிஸ்ட்ராஸ் கூறுவார். சமூகம் என்பது ஓர் உயிர் போன்றது என்ற சிந்தனையை மாற்றி அது சைபர்நெடிக் (Cybernetic) என்று கூறியவர்களில் இவர் முக்கியமானவர். இவ்வகைக் கருத்தால் நமது உடலானது பல்வேறு உறுப்புகளால் ஆனது போன்று சமூகம் அதன் உறுப்புகளால் ஆக்கப்பட்டுள்ளது என்ற பார்வை மாற்றப்பட்டது." (ஜான் மோனகன் & பீட்டர் ஜஸ்ட், தமிழில் பக்தவச்சல பாரதி, (2005), சமூகப் பண்பாட்டு மானிடவியல் மிகச் சுருக்கமான அறிமுகம், ப . 95 )

- கார்ல் மார்க்ஸின் சிந்தனை மானுடவியலில் ஒரு புதிய சிந்தனைக் குழுவை உருவாக்கியது எனலாம். சமூகவாழ்வும் சமூகத்தின் அமைப்பும் அந்தந்த காலத்தில் ஆதிக்கம் செலுத்தும் தொழில் நுட்பத்தின் வழி வடிவமைக்கப்படுகின்றன என்றார் மார்க்ஸ். (மேலது,ப. 95)

- "சமூக அமைப்பு என்பது உலகப் பொருளாதார அரசியல் போக்குகளின் தன்மைக்கேற்ப உருவாகும் வட்டார அமைப்புகளே" (மேலது, ப.96 ) என்று மானுடவியலாளர்கள் கருதினர். இருப்பினும் இன்றும்கூட செயற்பாட்டில் சிந்தனைப்புலமே அடிப்படைப் புரிதலுக்கான அணுகுமுறையாக உள்ளது. அது எளிமையாக இருந்தாலும் கூட ராபர்ட் மார்பி கூறுவதுபோல, "சமூகங்கள் அனைத்தும் ஓர் ஒழுங்கமைவுக்கு உட்பட்டவை" என்பதே சமூக அறிவியல்களில் மையக்கருத்தாக உள்ளது. மேலும் கிளிஃபோர்டு கிரீட்ஸ் உள்ளிட்ட இன்னும் பல மானுடவியலாளர்கள் கூறியிருப்பது போன்று மனித நடத்தை முறைகளாகட்டும் மனித உறவுகளாகட்டும் அனைத்துமே ஒரு முழுமைக்குள் பல கூறுகள் ஒருங்கிணைந்து செயல்படுகின்றன என்ற செயல்பாட்டியல் அணுகுமுறையிலான விளக்கமே பரவிக் காணப்படுகின்றது" (மேலது ப.96)

மேற்கண்ட விளக்கங்களின் மூலம் இனக் குழுக்களாக வாழ்ந்த மனிதர்கள், தம்முடைய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவும் சிக்கல்களுக்கு வழி காணவும் அனைவரும் ஒன்று சேர்ந்து, நமக்குள் உறவுகளை ஏற்படுத்திக் கொண்டு இணைந்து வாழும் குடும்பங்களாக இருந்தவையே சமுதாயம் என்பதும், அது இயற்கை, சுற்றுச்சூழலுக்கு ஏற்பவும், தொழில்நுட்ப வளர்ச்சியின் அடிப்படையிலும் பல மாறுதல்களுக்கு உட்பட்டு விளங்குகிறது என்பது தெளிவாகிறது.

**சடங்குகள்:**

சமுதாயத்தில் மகிழ்ச்சியை ஏற்படுத்தக்கூடிய நிகழ்ச்சிகள், துன்பங்களை விளைவிக்கும் நிகழ்ச்சிகள் போன்றவற்றில் பல்வேறு சடங்குகள் மேற்கொள்ளப்படுகின்றன. இவ்வகைச் சடங்குகள் மூலம் உடல் மற்றும் உள்ளம் தூய்மை பெறுவதுடன் ஓர் ஒற்றுமைத் தன்மையைச் சமுதாயத்தில் ஏற்படுத்துவதாகவும் அமைகின்றன. சடங்கு என்பதற்கு அறிஞர்கள் பல்வேறு விதமான வரையறைகளை விதித்துள்ளனர்:

- “சடங்கு என்பது நிர்ணயிக்கப்பட்ட விரிவான நடத்தைகளின் வடிவமாகும். இது தனிமனிதனின் சுயமான ஆக்கமாகவோ, பண்பாட்டினுடைய தனிச்சிறப்புக் கூறாகவோ அமையும். பண்பாட்டின் ஏனைய அம்சங்களின்றிச் சடங்குகளிடையே வெவ்வேறு நாகரிகங்களின் நம்பிக்கைகளும் இலட்சியங்களும் மிகத்தெளிவாக வெளிப்படுத்துகின்றன என்கிறார் ரூத்பெனிக்டிக் எனும் சமூகவியல் அறிஞர்” (மேற்கோள் : முனைவர் தே.ஞானசேகரன், (2000), மந்திரம் சடங்குகள் சமயம் ப. 11)

- சோமலே என்பவர், “பிறந்த வினாடிமுதல் இறக்கும் வினாடிவரை அவர்களுடைய வாழ்க்கை முழுவதும் ஏதாவது ஒரு சடங்கைச் செய்து திருப்தியடைகிறார்கள். கடவுளிடம் உள்ள அச்சமும் முன்னோர் வழக்கத்தை மீறாமல் நடந்து கொண்டால்தான் வாழ்க்கை வசதியானதாய்க் கவலை இல்லாததாய் அமையும் என்ற நம்பிக்கையும் சேர்ந்து இந்தச் சடங்குகளை விடாமல் செய்ய மக்களைத் தூண்டுகின்றன” (சோமலே, (1974), தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப. 42 )

மேற்கண்ட அறிஞர்களின் கருத்துக்கள் மூலம் சமுதாயத்தில் சடங்குகள் நம்பிக்கையின் அடிப்படையிலும் சடங்குகளைப் பின்பற்றுவதாலேயே நன்மைகள்கிட்டும் என்ற நிலையில் கட்டாயமாக்கப்பட்டுப் பின்பற்றப்படுகின்றன. கட்டாயமாக்கவில்லை என்றால், இவை தொடர்ந்து சமுதாயத்தில் நிலைபெற்றிருக்க முடியாது என்பது தெளிவாகிறது. சடங்குகள் செய்யவில்லையென்றால் குடும்பம், குலம் தழைக்காது விளங்காமல் போய்விடும் என்றெல்லாம் சொல்லி வைத்ததுதான் கட்டாயமாக்கல் நிலை. சடங்குகள் குறித்த அறிவு சடங்கு செய்தல், செய்யும் வழிமுறைகள் என்ற நிலைகளுடனேயே நின்றுவிடுகிறது. இவற்றை ஆராய்ச்சி நோக்கில் எடுத்துச் செல்லும் பெரும்பாலான ஆராய்ச்சியாளர்கள்கூடச் செய்திகளைச் சேகரித்துப், பகுத்து, வகைப்படுத்துதல் என்றவாறு நின்றுவிடுகின்றனர். சடங்குகளின் பின்புலம், உள்ளடக்கக் கூறுகள் குறித்து வெளிவந்திருக்கும் ஆய்வுகள் மிகச்சொற்பம். சடங்குகள் அனைத்தும் சமயக்கூறுகளின் வெளிப்பாடு; எனவே இறப்புச்சடங்குகளில் எங்ஙனம் தமிழக பௌத்தகூறுகள் அடங்கியுள்ளன எனும் சாரத்தைப் பின்னுற்றவாறு காணலாம்.

கொங்கு வட்டார இறப்புச் சடங்குகள்;

தமிழகக் கொங்கு வட்டாரப் பகுதியில் இறந்தவர்களுக்கு இறப்புச்சடங்குகள் மூன்று நிலைகளில் நிகழ்த்தப்படுகிறது.

- தேர் கட்டுதல்
- பாடை கட்டுதல்
- தொட்டில் கட்டுதல்

தேர் கட்டுதல்:-
பணவசதி கொண்டவர்கள், வாழ்ந்து முடித்தவர்களுக்கு (வயதானவர்களுக்கு) மூங்கிலால் தேர்செய்து அதில் அமர வைத்துத் தூக்கிச்சென்று அடக்கம் செய்வார்கள்.

பாடை கட்டுதல்:-
பணவசதி இல்லாதவர்கள் மற்றும் கணவனுக்குத் தேர்க் கட்டாமல் இறந்து போகும் பெண்களுக்கு வைக்கோலால் படுக்கை செய்து மூங்கிலில் வைத்துக் கட்டி அதில் படுக்கவைத்துத் தூக்கிச் சென்று அடக்கம் செய்வார்கள்.
குறிப்பு: திருமணமாகிப் பாதி வாழ்க்கையிலேயே எதிர்பாராமல் இறந்து போகக் கூடியவர்களுக்கும் இதையே செய்கிறார்கள்.

தொட்டில் கட்டுதல்:-
திருமணம் ஆகாதவர்களுக்கு (குழந்தைகள், இளைஞர்கள்) வெள்ளைத் துணியால் தொட்டில் கட்டி எடுத்துச் செல்கிறார்கள்.

தேர் கட்டினால் செய்யும் சடங்குகள்;
- பூரண வாழ்வு வாழ்ந்து முடிந்தவர்களுக்கு இறைவனுக்குச் செய்யும் வழிபாட்டு முறைகள் அனைத்துமே இச்சடங்கில் இருக்கும்.
- இறந்தவர்கள் உடலுக்கு ‘நல்லடக்கம்’ செய்யப்படும். இதை நாவிதர் செய்வார்.
- தேங்காய் பழம், வெற்றிலை பாக்கு, ஒரு தட்டில் அரிசி, அதன்மேல் வட்டுக்கருப்பட்டி, ஊதுபத்தி, சூடம் இவற்றை வைக்க வேண்டும். பங்காளி வீட்டுப்பெண் மண்விளக்கு ஏற்றி பங்காளி வீட்டு ஆண் தேங்காய் உடைத்து வைக்க அனைவரும் இறந்தவர்களை வணங்குவார்கள், பங்காளி வரும்வரை காத்திருக்க வேண்டும் மற்றவர்கள் செய்யக் கூடாது. அதன் பின்பே இறப்பு நடந்த வீட்டில் அழுவார்கள்.
- பறையடிப்பவர்கள் வெளியே பறை அடிப்பார்கள். அதில் புராணக் கதைகளைக் கதைப் பாடல் வடிவில் இசைப்பார்கள். (குறிப்பாக அரிச்சந்திரன் கதைப்பாடல் இருக்கும்) அவர்களுக்கு அங்கே வந்திருப்பவர்கள் அனைவரும் பணம்போடுவார்கள். அதற்கு ‘வாசப் பணம்’ என்று பெயர் (வாச – வாயில்) இப்படியாக ஒருநாள் வீட்டில் பிணத்தை வைத்திருப்பார்கள்.
- அடக்கம் செய்யும் நேரம் நெருங்கும் வேளையில் அதாவது, பிணத்தைச் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்லும் முன்பாக வெளியே எடுத்து வந்து, உட்கார வைத்து, மகளும் பங்காளிகளும் நெருங்கிய உறவினர்கள் அனைவரும் புனிதநீர்கொண்டு வந்து குளிப்பாட்டுவார்கள். எண்ணெய் மற்றும் அரப்புப் பொடியைத் தலையில் வைப்பார்கள். இப்படியாக நீராடுதல் நடத்தப் பெற்று அபிஷேக பூசை அனைத்தும் செய்வார்கள். உட்காரவைப்பதற்கு வலது புறமாகப் பூப்பந்தல் போடுவார்கள் (பொன்னரளிச் செடியின் கிளைகளால்).
- பங்காளி வீட்டிலிருந்து இறந்தவரின் சகோதரன் பிறந்தவீட்டுப் பட்டு சுமந்தும் மகள் வழிப் பேத்தி பல்வேறு பூக்கள் நிறைந்த கூடையைத் தலைமேல் சுமந்து (இதனைப் பிண்ணப்பூப் போடுதல் என்பார்கள்) கொண்டு வந்து அதைப்போட்டு

வணங்குவார்கள். பூசைகள் முடிந்தவுடன் புத்தாடை அணிவித்து அப்படியே தேரில் வைத்துக்கட்டிப் பறையொலியுடனும் வெடிகள் வெடிக்கச் சுடுகாட்டிற்குக் கொண்டு செல்வார்கள். அப்பொழுது, 'வண்ணார்' என்று சொல்லக் கூடிய சலவைத்தொழிலாளி தீப்பந்தம் பிடிப்பார். (ஆண்களுக்குக் குளிப்பாட்டுதல் நடைபெறுவதற்கு முன்பு முகச்சவரம் செய்வார்கள்; மனைவியை அழைத்துக் காலடியில் அமர வைத்துத் தாலிக்கயிற்றை அறுத்து இறந்தவரின் காலில் கட்டி விடுவார்கள்.)

- சுடுகாடு செல்லும் வரை பிணத்தைச் சுமந்துகொண்டு பொரி, கடுகு, பூக்கள் இவற்றை வீசிக்கொண்டு செல்வார்கள்.

சுடுகாட்டில் செய்யும் சடங்கு:-

குழியில் படுக்க வைத்தவுடன் தாயாக இருந்தால் தலைமகன் (மூத்தமகன்) தந்தையாக இருந்தால் இளையமகன், (கடைசிமகன்) முதலில் மண்தள்ளிய பின்பு அனைவரும் சேர்ந்து குழியை மூடிவிடுவார்கள். பிணத்தை அடக்கம் செய்த பின்பு சுள்ளிச் செடியை அல்லது கள்ளிச் செடியைக் குழிமேட்டில் வைப்பார்கள். காலடியில் தேங்காய், பழம், சூடம், பத்தி வைத்து வழிபாடு செய்வார்கள்.

மொட்டை அடித்தல், குடம் உடைத்தல்:-

மண் தள்ளியவர் தான் மொட்டையடிப்பார். அவரின் தோளில் நீர் நிரம்பிய பானையைச் சுமந்து கொண்டு இடது வலமாகச் சுற்ற வேண்டும். ஒவ்வொரு சுற்று முடிந்தவுடன் 'தோட்டி' (வெட்டியான்) அரிவாளால் ஓர் ஓட்டை போடுவார்; மொத்தம் மூன்று ஓட்டைகள் போட்டு இறுதியில் கீழே போட்டு உடைத்து விடுவார்கள். பின்பு கொள்ளி வைப்பார்கள்.

வீடு திரும்புதல்:-

ஆண்கள் சுடுகாட்டில் இருந்து வீடு திரும்பியவுடன் அதாவது அவர்கள் வருவதற்கு முன்பாகப் பங்காளி வீட்டுப் பெண்கள் வீட்டைக் கழுவி சுத்தம் செய்து நடு வீட்டில் விளக்கேற்றி வைத்திருப்பார்கள். இறந்தவுடன், எந்தப் பங்காளி வீட்டுப் பெண்ணால் விளக்கு ஏற்றப்பட்டதோ அதே பெண் புதுப்பானை வைத்து அகத்திக்கீரை, சர்க்கரை, கருவாடு கலந்த சோறாக்கித் தயார் நிலையில் வைத்திருக்க வேண்டும். ஆண்கள் வந்தவுடன் உள்ளே வராமல் ஏற்றப்பட்ட விளக்கைப் பார்த்து வணங்குவார்கள். ஆக்கி வைத்த சோற்றை இறந்தவர் வீட்டின் கூரைமேல் போடுவர். பின்பு மொட்டையடித்து; தாய்மாமன் முதலில் புத்தாடை அணிவித்து விடுவார். பின்பு மற்ற மாமன் உறவுமுறை உடையவர்கள் புத்தாடையும் பணமும் வைத்துக் கொடுப்பார்கள். வந்திருந்த உறவுமுறைகள் அனைவரும் சேர்ந்து உணவு சமைத்து உண்பார்கள்.

(தகவலாளர் : வேலன், வயது 60, வே.ஜெகதீஸ், வயது 35, தேவனாம்பாளையம்).

பாடை கட்டுதல்:-

பாடை கட்டுபவர்களுக்குப் பறையடிக்கமாட்டார்கள். குளிப்பாட்ட மாட்டார்கள். வழிபாட்டு முறைகளும் அதிகம் இருக்காது பாடைகட்டினால் இறந்தவர்களை

நடுவீட்டில் உட்கார வைக்கமாட்டார்கள். படுக்கவைத்து விடுவார்கள். மற்ற சடங்குகள் பொதுவானவை. எடுக்கும் முன்பாக வெளியே எடுத்து வந்து பங்காளி வீட்டுப் பெண் மஞ்சள் தெளித்தவுடன் பங்காளிகள் கோடி (புதிய வெள்ளைத்துணி) போடுவார்கள். பாடையில் வைத்துக்; கட்டியெடுத்துச் செல்வார்கள். சுடுகாட்டில் செய்யும் சடங்கு தேர் கட்டுவதற்குப் போலவே நடக்கும்.
(குறிப்பு : தொட்டில் கட்டி எடுத்துச் சென்று அடக்கம் செய்வதற்கும் இது பொருந்தும்.)

கருமாதி அல்லது சாஸ்திரம் செய்தல்:-
இறந்த மூன்றாம் நாள் புதன் ஞாயிறு போன்று நாளில் சுடுகாட்டிற்குப் பால், நெய் மொட்டை அடித்தவரால் கொண்டு சென்று குழிமேட்டில் ஊற்றி விட்டுவந்து (மற்ற உறவுமுறை ஆண்களும் உடன்செல்வார்கள்) வீட்டில் இறந்தவர் விரும்பி உண்ணும் உணவு வகைகள் அனைத்தையும் படையலிட்டு வணங்கிப் படையலைக் காகத்திற்கு வைப்பார்கள்.

கடாத்துதல்:-
பிணத்தைச் சுடுகாட்டில் அடக்கம் செய்வதோடு மட்டுமின்றி சில இனக்குழுவில் எரிப்பார்கள் (பிராமணர்). பிணத்தை எரித்த பின்பு அந்தத் தணலை நாவிதர், உறவினர்கள் சென்று நீரூற்றி அணைப்பார்கள் (நாவிதர் தான் நீர் ஊற்றுவார்). பின்பு மூன்று தலைவாழை இலையை விரித்துத் தலைப்பகுதியில் இருந்து ஓர் எலும்பு, உடம்பின் நடுப்பகுதி எலும்பு, கால்பகுதி எலும்புகள் என நாவிதர் வெளியே எடுத்து அபிஷேக வழிபாட்டுமுறை செய்வது போலவே (பால், இளநீர் கொண்டு கழுவி) செய்து, புதுப்பானையில் அவைகளைப் போட்டவுடன் உறவினர்கள் செலுத்திய காணிக்கையோடு வைத்துக்கட்டி அவர் வீட்டில் கொண்டு சென்று மிகவும் பாதுகாப்பாக 16 நாள் வைத்திருப்பார். இதற்கு 'அங்கம் எடுத்தல்` என்று கூறுவர். பதினாறாம் நாள் சடங்கிற்கு ஆறுடன் கூடிய சிவன் கோவிலுக்குச் சென்று காணிக்கையை நாவிதர் எடுத்துக்கொண்டு அந்தப் பானையை ஆற்றில் விடுவார்கள். இதற்கு 'அஸ்தி கரைத்தல்` என்று சொல்லுவார்கள்.

**சடங்கு முறைகளுக்கான விளக்கங்கள்:**
நல்லடக்கம் செய்தல்:-
மனித உடலைவிட்டு உயிர் பிரிந்தவுடன் உடலில் எண்ணற்ற நோய்க் கிருமிகள் கண்ணிமைக்கும் நேரத்தில் உற்பத்தியாகிவிடும். இவை உடலை விட்டு வெளியேறாமல் இருக்க உடலில் இருக்கும் துவாரங்களை அடைத்து விடுவார்கள். (கண், காது, மூக்கு, வாய், மலத்துவாரம்) இறந்தவுடன் கண்களை மூடிவிடுவார்கள்; காது, மூக்கு இரண்டிற்கும் பஞ்சு வைத்து அடைப்பார்கள்; வாயைத் துணி கொண்டு கட்டி விடுவார்கள்; மல துவாரத்தைத் துணி கொண்டு அடைப்பார்கள். இதற்கு 'சேமம் அடைப்பது' என்று சொல்லுவார்கள். இதை நாவிதர்தான் செய்வார். நாவிதருக்கு 'மருத்துவன்' என்ற மற்றொரு பெயரும் உண்டு. பெண்களுக்கு மகப்பேறு மருத்துவமே அன்றைய காலகட்டங்களில் மருத்துவச்சி (நாவிதப்பெண்) செய்திருக்கிறார். பிறப்பு முதல் இறப்புச் சடங்குகள் வரை இவர்கள் முதன்மையானவர்களாக இருப்பார்கள்.

ஒவ்வொரு இனத்திலும் சீர்க்காரர், முறைமைக்காரர், அருமைக்காரர், சடங்கு முறைகளை நன்கு அறிந்து வைத்திருப்பவர்க்குப் பரிகாரி (நாவிதர்) என்போர் இருப்பார்கள். பரிகாரி சடங்குகளை எப்படிச் செய்ய வேண்டும் என்பதைக் கூறுவதுடன் அவரே அதைச் செய்யக் கூடியவராகவும் இருப்பார். நாவிதருக்குப் பரிகாரி, பண்டிதர், மருத்துவர், குடிப்பிள்ளை (அனைத்து இனக்குழுவிற்குப் பொதுவானவர் என்பதால் இப்பெயர்) நாவிதர் எனப் பலபெயர்கள் உண்டு. (தகவலாளி : க.மயில்சாமி, வயது 70, தேவனாம்பாளையம்).

பூப்பந்தல் போடுதல்:-
பொன்னரளிப் பூச்செடியின் பூக்களோடு கூடிய கிளைகளை வெட்டிவந்து குளிப்பாட்டும்போது, வலதுபுறம் வைத்து விடுவார்கள். இதற்குப் "பூப்பந்தல் போடுதல்'' எனக் கூறுவார்கள். எத்தனையோ அரளிச் செடிவகைகள் இருக்க, ஏன்? பொன்னரளிச் செடியைத் தேர்ந்தெடுக்கிறார்கள் என ஆய்வாளருக்கு ஐயப்பாடு எழுந்து தகவலாளியிடம் (மேலது) விளக்கம் கேட்டபொழுது, "பொன்னரளிப்பூ மருத்துவத் தன்மை உடையது; பால் விஷத்தன்மை உடையது, பொதுவாகவே, அரளிச் செடியின் தன்மை தீமையானது; பூவின் வாசனை நறுமணம் வாய்ந்ததாக இருக்காது. எனவே, மற்ற பூக்களையும் கெடுத்துவிடும் என்பதால் இறைவனுக்குச் சூட்டுவதில்லை, எளிதில் பட்டுப் போகும். இதனால் பட்டுப்போன உடம்பின் அடையாளமாகவே இச்சடங்கில் பயன்படுத்தப்படுகிறது.
மேலும், இது புழக்கம் இல்லாத இடங்களில்தான் முளைக்கும். சுடுகாட்டில் அதிகம் இருக்கும் என்பதாலும் இந்தப் பூவைப் பயன்படுத்துவார்கள். இதைப் பிறருக்குச் சாபம் இடும்போது கூறும் பழமொழி வாயிலாக விளங்கிக் கொள்ளலாம்.

"வேள முளைக்கோணும் வெரூடாய்ப் போகோணும்
எட்டி முளைக்கோணும் எருக்கலை காய்க்கோணும்
அரளிமுளைக்கோணும் அடியோட போகோணும்"

வேளச்செடி, எட்டிமரம், அரளிச்செடி, புழக்கம் இல்லாத, புழங்கக்கூடாத இடங்களில் முளைக்கும். இதை மற்றொரு பாடலின் வாயிலாக விளங்கிக் கொள்ளலாம்.

"வேதாளம் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலிவந்து படருமே - மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரம் சொன்னார் மனை" (ஔவையின் நல்வழிப் பாடல்-23)

அதாவது மன்றோரம், பெண்ணோரம் சொல்லுதல் கூடாது. 'ஓரம் பேசுதல்' என்றால் ஒருபக்கமாகச் சாய்ந்து பேசுதல் என்று பொருள். அப்படிப் பேசக்கூடியவர் வாழும் வீட்டில் வேதாளம் சேரும். வெள்ளெருக்கம் பூக்கும், சேடன் (பாம்பு) குடிபுகும்; பாம்பு குடியிருந்த வீட்டில் வாழ மாட்டார்கள். எனவே, அங்கு மூதேவிதான் வாழ்வாள். பாதாள மூலி, (எட்டி, எருக்கலை) படரும். இப்பாடலில், எதற்கும் ஓரம் பேசுதல் கூடாது என்று சொல்லப்படுகிறது. அப்படிப் பேசுபவர்கள் வீடு பட்டுப் போகும் என்பதுதான் இதன் மூலப்பொருண்மை ஆகும்.

எண்ணெய், அரப்பு குளிப்பாட்டும் போது எண்ணெய்யும் அரப்பும் வைத்துக் குளிப்பாட்டுவார்கள். எண்ணெய் நீருடன் கலக்காது. அரப்பு எண்ணெய்யுடன்

சேராது. அதைப் போலவே இறந்தவர்கள் இனிமேல் நம்முடன் சேர்ந்து இருக்கப் போவதில்லை: இருக்கவும் முடியாது. இதனை வலியுறுத்தத்தான் இச்சடங்கு செய்யப்படுகிறது. (மேலது) இதை; கண்ணதாசன் தம் திரைப்படப்பாடல் ஒன்றில்,

"எண்ணெய்யுடன் தண்ணீரை எப்படித்தான் கலந்தாலும்
ஒன்றுசேர முடியாதடி முத்தம்மா
இயற்கைக் குணம் மாறாதடி"

எனப்பாடியுள்ளார். இறந்தவர்கள் நம்முடன் மீண்டும் சேருவதில்லை என்பதை

"மாண்டவர் எழுந்து வந்தால் மந்தை இடங்கொள்ளாது
செத்தவர்கள் எழுந்துவந்தால் சீமை இடங்கொள்ளாது"

(அண்ணமார் சுவாமி கதை, நல்லதங்காள் கதை) என்பதன் வாயிலாகவும் விளக்கம் பெறலாம்

நெய்ப்பந்தம் பிடித்தல்:

இறந்தவர்கள் ஆன்மா மோட்ச நிலையை அடைய மோட்ச விளக்கின் அடையாளமாகப் பேத்தி, பேரன் நெய்யால் தோய்ந்த தீப்பந்தம் ஏந்திச் சுற்றி வந்து காலடியில் போடுதல் ஆகும் (மேலது).

கோழிக்குஞ்சு பலியிடுதல்:-

இரவு முழுவதும் பிணத்தை வைத்திருந்தால் எடுத்துச்செல்லும் முன்பாகத் தேர் அல்லது பாடையைச் சுற்றி கோழிக்குஞ்சை நீக்கி, ரத்தக் குறி காண்பிப்பார்கள். குடும்பத்திற்கு நல்லது நடக்கவும் இறந்தவர்களின் ஆன்மாவை வீட்டைவிட்டு அகற்றவும் இவ்வாறு செய்யப்படுகிறது (மேலது).

பிண்ணப்பூ:-

பேத்திக்கு முன்னுரிமை என்ற அடிப்படையில் இது நிகழ்த்தப்படுகிறது (மேலது).

சுள்ளி அல்லது கள்ளி வைத்தல்:-

பிணத்தைக் குழியில் மூடிய பின்பு, சுடுகாட்டில் நரிகள் அதிகம் வாழும் இடம் என்பதால் மூடிய குழியைப் பறிக்காமல் இருக்க அங்கே அதிகம் வளர்ந்து இருக்கக்கூடிய சுள்ளிமுள் அல்லது கள்ளிமுள் வெட்டி தலைப்பகுதி, நடுப்பகுதி, கால் பகுதி என மூன்று இடங்களில் வைத்து அதன்மேல் கல்லையும் வைத்து விடுவார்கள். காரணம் என்னவெனில் சுள்ளிமுள் (அ) கள்ளிமுள் எளிதில் கிடைக்கக் கூடியது. இவை கொத்தாக இருக்கும் என்பதால் இதன்மேல் கால் வைத்தால் கொத்தாகப் பிடித்துக் கொள்ளும். (மேலது) .

தென் மாவட்டங்களில் இதற்குக் 'கொடிக்கள்ளி சாத்துதல்' என்று சொல்லப்படுகிறது.

கடுகும் பொரியும் இறைத்தல்:-

பிணம் சுடுகாட்டிற்குச் செல்லும் பொழுது பிணத்தின்மேல் கடுகும், பொரியும் இறைக்கப்படுகிறது. இதற்குக் காரணங்கள் அறியப்படும் பொழுது இறந்தவர்களின் ஆன்மா மீண்டும் உறவுகளைத் தேடிவரும் அப்போது ஒவ்வொரு

கடுகாக எடுத்துக் கொண்டு வருவதற்குள் விடிந்து விடும். விடிந்தால் வராது என எடுத்துரைக்கப்படுகின்றது. (வேலு, வயது 60, தேவனாம்பாளையம்) இந்நிகழ்வானது, தொன்று தொட்டு நிகழ்ந்து வருகிறது என்பதைப் புறப்பொருள் வெண்பாமாலை வழி நிறுவலாம். காஞ்சிப்படலத்தில் தொடாக்காஞ்சித்துறை என்பது ஒரு காஞ்சி மறவனுடைய புண்ணைத் தீண்டச் சென்ற பேய், தீண்ட அஞ்சி மீண்டது எனக் குறிப்பிடப் பெற்றதுடன்

"ஐயவிசிந்தி நறைபுகைத் தாய்மலர் தூய்க்
கொய்யாக் குறிஞ்சி பலபாடி – மொய்யிணர்ப்
பூப்பெய் தெரியல் நெடுந்தகைபுண் யாங்காப்பப்
பேய்ப்பெண் பெயரும் வரும்"

என்பதில், எம் தலைவனது விழுப்புண்ணை நாங்கள் வெண்சிறு கடுகினைத்தூவி குங்கிலியம் முதலிய நறுமணப் பொருளைப் புகைத்து ஆராய்ந்த மலரினைச் சிதறி குறிஞ்சிப்பண் பலவற்றையும் பாடிப் பாதுகாவா நிற்றலானே ஆண்டு வந்த பெண்பேய் அஞ்சி மீண்டு போகும் அவாவிப் பின்பு வரும் (உரை : பெருமழைப்புலவர் பொ.வே சோமசுந்தரனார் பக். 83, 84). என்றும் கூறப்பட்டுள்ளது. இக்காரணங்களை வைத்துக் கொண்டு ஆயும்பொழுது கடுகிற்கு மருத்துவகுணம் இருப்பது அனைவரும் அறிந்த ஒன்று என்றாலும் தீயசக்திகளை அகற்றும் ஆற்றல் இதற்கு உண்டு என்பதை அறிந்துகொள்ள முடிகிறது. இக்கருத்தை,

"பாலகிர கம்பூத பைசாசம் ஓட்டிவிடும்
ஆல விஷங்கடிகள் ஆற்றுங்காண்- கோலமிகு
வள்ளைச் செவிமாதே மாபங்க நோய்விலக்கும்
வெள்ளைக் கடுகின் விதி"(பாடல் எண் :1047)

என்னும் பாடல் கருத்தின் மூலம் இன்னும் விளங்கிக்கொள்ளலாம். அதாவது: பாலகிரகம், பூதம், பிசாசு, விஷம், கடிகள், பங்க நோயும்போம் (பதிப்பாசிரியர் : ஆர்.சி.மோகன் (2006), பதார்த்த குணசிந்தாமணி, ப. 250) என்பதாகும். மேலும், வெண் சிறுகடுகினைப் பண்டு ஐயவி என்று அழைத்தனர். குழந்தைகளுக்குப் பேய் பிசாசு முதலியன தீண்டாது இருக்கவேண்டி வெண்சிறுகடுகினை அரைத்து உச்சியில் அப்புவதும் போர்க்களத்தில் புண்பட்டமறவனைப் பேய்கள் அண்டாது இருக்கவேண்டிப் பாதுகாப்பாக ஐயவி புகைப்பதும் பண்டைத் தமிழரின் வழக்கங்களாகத் தெரிகின்றன. மதில்களின் கதவுக்குக் காவலாகப் புறவாயிலிலே தூக்கப்படும் துலாமரமும் ஐயவி என சுட்டப்பட்டுள்ளது. கடுகு முதன்முதலில் ஆப்பிரிக்காவில் தோன்றி ஆசியாவில் பரவியதாகவும் அவ்வாறு பரவிய நிலையில் மிகுதியாக விளைவிக்கப்பட்டதாகும். இது பற்றிய குறிப்பு பண்டைய கிரேக்க ரோம திருமுறையில் தொடர்ந்து குறிக்கப்படுவதாகவும் இது ஹிப்போகிரேட்டஸ் என்பவராலோ அதற்கு முன்னரோ மருந்துப் பொருளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதாகவும் சுட்டுவர். (மேற்கோள் க.காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் (1980), பக். 327, 328)

அதோடு மட்டுமல்லாமல் யுவான்சுவாங் கூற்றின்படியும் இதை உறுதிப்படுத்திக் கொள்ளலாம். அதாவது, "புத்தர் பிறந்த மண்ணாகிய இந்தியாவைத் தரிசிக்க புனிதப்பயணம் மேற்கொண்டபொழுது அவர் மந்திரத்திறமையால் பேய்களையும்

பூதங்களையும் கவரவும் விரட்டவும் கடுகைப் பயன்படுத்துவது தொன்றுதொட்டு வந்த பழக்கம். அம்மந்திரத்திறமையால் பூமியைப் பிளக்கவும் மழையை வரவழைக்கவும் பாறைகளை உடைக்கவும் ஆறுகளை உண்டாக்கவும் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட பல நிகழ்ச்சிகளைச் செய்ய இயலும் என்ற நம்பிக்கை நம்நாட்டில் பழங்காலம் தொட்டு உண்டு" எனக் குறிப்பிட்டுள்ளார். (எ. எஸ்.வி.ராகவன் (1978), யுவான்சுவாங், ப. 170) மேலும், கடுகானது தீயசக்திகளை விரட்டும் என்பதில் ஆழமான நம்பிக்கை நமது சமுதாயத்திற்கு இருப்பதால் கண்ணேறு கழித்தலில் கடுகானது முக்கியப் பொருளாக இடம் பெறுவதையும் இங்கே நினைவு கூறலாம்.

**தமிழக பௌத்தம்; எச்சங்கள்:**

"தமிழக மக்களின் பெரும்பகுதியினர் சமண பௌத்த மதங்களின் செல்வாக்குக்கு ஆட்பட்டிருந்தனர். இந்த உண்மையைக் காட்டும் தொல்லெச்சங்கள் இன்றும் இருக்கின்றன. பௌத்தமதத்தின் துறவிகள்தாம் முதல் 'செவ்வாடை' அணிந்தவர்கள். 'சீவிர ஆடை' அணிந்தவர்கள் என்று அவர்களைத் தேவாரம் கண்டிக்கிறது. இப்பொழுது துறவிகள் செவ்வாடை அணிவது அவர்களிடம் இருந்து வந்ததுவே.

பௌத்த மதத்தின் துறவிகள் கையில் வைத்திருக்கக் கூடிய எட்டுப் பொருள்களில் தலைமழிக்கும் கத்தியும் ஒன்று. அதால், தலையை மொட்டை அடித்துக் கொள்வார்கள். தேவார, திவ்ய பிரபந்தங்களிளோ இவ்வழக்கம் பற்றிய பேச்சே இல்லை. தமிழக பிராமணர்கள் இவ்வழக்கத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. இன்று மக்களிடையே புனிதத்தலங்களில் மொட்டை அடிக்கும் பழக்கம் மட்டுமே பரவலாக உள்ளது. இதுவும் அவர்களிடம் கற்றுக்கொண்ட பழக்கமே. அரசமரம் பௌத்தர்களின் புனிதசின்னம் ; ஞானத்தின் குறியீடு; இம்மதம் செழித்திருந்த ஊர்களில் ஒன்று போதிமங்கை எனும் ஊராகும்; இதை அப்பர் தேவாரம் 'சாக்கியர்தம் போதிமங்கை' என்று கூறுகிறது. தமிழர்கள் இன்று அரசமர வழிபாடுசெய்வது இதன் தாக்கமே.

தமிழர்கள் இன்று பரவலாக ஏற்றுக் கொண்டிருக்கும் பட்டிமண்டபம் என்ற கலைவடிவம் பௌத்த மதத்தில் இருந்து பிறந்தது. பிற சமயவாதிகளோடு வாதம் நடத்தி, வென்று தங்கள் மதத்தைப் பரப்புவது பௌத்தத் துறவிகளின் வழக்கம். ஓர் ஊருக்குள் நுழைகின்ற பௌத்தத் துறவி ஊர்ப் பொது இடத்தில் அரசமரத்தின் கிளை ஒன்றினை நாட்டு பிறசமயவாதிகளை வாதத்திற்கு அழைப்பது வழக்கம். 'ஒட்டிய சமயத்து உறுபொருள்வாதிகள் பட்டிமண்டபத்து பாங்கறிந்து ஏறுமின்' (மணிமேகலை) என்பதில் பட்டிமண்டபம் சமயக்கருத்துகளை விவாதிக்கும் இடம் என்று காட்டுகின்றன.

பௌத்தத்துறவிகள் குருகுலங்களில் கல்வி கற்றுத் தந்தனர். ஒரு வட்டாரத்தில் உள்ள பௌத்ததுறவிகள் அனைவரும் கூடிச் சங்கக் கூட்டம் அமாவாசை (கார்உவா) பவுர்ணமி (வெள்உவா) நாளில் நடத்துவர். அதற்கு இவர்கள் செல்லவேண்டி இருந்தால் பள்ளிகளுக்கு விடுமுறை அளிக்கப்பட்டது. இம்மதம் தமிழ்நாட்டில்

மறைந்த பிறகும் திண்ணைப் பள்ளிக் கூடத்திற்கு இந்த நாட்களிலேயே விடுமுறை அறிவிக்கப்பட்டது.

உவாநாள்களில் ஆசிரியர்களுக்கு மாணவர்கள் அரிசி, காய்கறிகளைக் காணிக்கையாகக் கொடுத்தனர். இதுவே வாவரிசி, உவா அரிசி எனப்படும்.
இன்றும் இலங்கையில் வாழும் பௌத்த சிங்களர் 'போயா தினம்' என்று இந்தநாட்களை இலங்கை வானொலியில் அறிவிக்கிறார்கள்.
உவாநாள் கூட்டங்கள் நடந்த மலைப்பகுதிக்கு உவாமலை அல்லது ஓவாமலை என்று பெயர். இன்றும் தமிழ்நாட்டில் எண்ணற்ற மலைப்பகுதிகளுக்கு இப்பெயரே வழங்கப்படுகிறது." (தொ.பரமசிவன் (2011), பண்பாட்டு அசைவுகள், பக். 99-101)
மேற்கூறிய இவர் கருத்துக்கள் அடிப்படையில் தமிழக இறப்புச் சடங்குகளிலும் தமிழக பௌத்தக் கூறுகள் அடங்கியிருக்கின்றன. அதைப் பின்வருமாறு நிறுவலாம்:

தகவலாளர்களின் கூற்றுப்படி, இறந்தவர்களின் ஆன்மா மீண்டும் திரும்பி வராமல் தடுக்க கடுகை இறைப்பார்கள் என்பதை முன்பே கண்டோம். அதாவது திரும்பி வரும்பொழுது ஒவ்வொரு கடுகாகப் பொறுக்கி எடுத்து கையில் வைத்தால் அவைகள் கைக்குள் அடங்காமல் நழுவும். புத்தர் இறப்பு என்பது இயற்கையானது அதைத் தடுத்து நிறுத்த முடியாது என்ற கருத்தை மகனை இழந்த தாய்க்கு உணரவைக்க இழப்பே நிகழாத வீட்டிற்குச் சென்று ஒரு பிடி கடுகு வாங்கிவா என்றுரைக்க அத்தாய் அலைந்து திரிந்ததில் எங்கும் இழப்பே நிகழாமல் இல்லை கடுகு கிடைக்கவில்லை என்றுரைத்தார் புத்தரிடம் ....... (மா.வே.மணி (1980), சித்தார்த்த கௌதம புத்தர் பக். 97,98) இக்கருத்தை உற்றுநோக்கினால் வீட்டில் எத்தனையோ புழங்கு பொருட்கள் இருக்க ஏன் கடுகை வாங்கிவரச் சொன்னார். ஏனெனில் ஒருகைப்பிடி கடுகு என்பதை எவ்வளவு இறுக்கிப் பிடித்தாலும் நழுவும். மேற்சொன்ன இரண்டு கூற்றுக்களிலும் எடுத்துரைத்தபடி கடுகு நழுவுவதைப்போல உயிரை எவ்வளவு இறுக்கிப் பிடித்தாலும் நிற்காது என்பதைச் சுட்டுகிறது. அதனால்தான் ஞானியாகிய புத்தர் கடுகு வாங்கி வரப் பணித்திருக்கிறார்.

கடுகு நழுவும் தன்மையுடையது என்பதைப் புத்தர் அருளிய தம்மபதம் என்னும் நூலில் "ஊசிமுனையில் நிற்க மாட்டாது கடுகு நழுவுவதைப் போன்று சினம் பகை பொறாமை இறுமாப்பு ஆகியவை யாரிடமிருந்து நீங்கிவிட்டனவோ அவனையே நான் பிராமணன் என்பேன்." (மொழிபெயர்ப்பும் குறிப்பும் அ.லெ.நடராஜன் (1982), தம்மபதம், ப. 172) இவ்வாறு கூறப்பட்டுள்ளதன் மூலம் உறுதிப்படுத்திக் கொள்ளலாம். மேற்கூறிய காரணங்களை வைத்துக் கொண்டு ஆயும்பொழுது கடுகிற்கு மருத்துவ குணம் இருப்பது அனைவரும் அறிந்த ஒன்று. இதனால் இறந்த உடலில் பரவி காணப்படும் நோய்க் கிருமிகள் தொற்றிக் கொள்ளாமல் இருக்க கடுகு இறைத்தலைச் சடங்காக வைத்துள்ளனர். எனவே, அது ஒரு சிறந்த கிருமிநாசினி என்பதையும் கடுகு உயிர் நிலையாமை கோட்பாட்டின் குறியீடு என்பதனையும் விளங்கிக் கொள்ளலாம்.

பொரி இறைத்தல் என்பதையும் நிலையாமையின் குறியீடாக எடுத்துக் கொள்ளலாம். பொரி காற்றுப்பட்டால் வற்றிப்போய் விடும். அதுபோல உடம்பில் இருக்கும் காற்றுப்போய்விட்டால் வெறும் சதைப் பிண்டமே. இதை உணர்த்தத்தான் அச்சடங்கானது நிகழ்த்தப்படலாம். அச்சடங்கைச் செய்வதற்குப் பொரியை அனைத்துத் தரப்பினராலும் வாங்கக்கூடிய பொருளாக இருப்பதாலும் ஆகும் என எண்ண முடிகிறது. மேலும் இதைக் "காயமே இது பொய்யடா வெறும் காற்றடைத்த பையடா" என்ற கூற்றுடனும் நினைவு கூறலாம்.

குடம் உடைத்தல் பற்றி அவர்களிடம் கேட்கும்பொழுது அவர்கூறியது: மட்குடத்தில் முதல் துளை பிறப்பை உணர்த்துவது, இரண்டாவது துளை இடுவது வாழும் நாட்களை உணர்த்துவது, மூன்றாவது இடம் துளை இறப்பைச் சுட்டுகிறது (கந்தன், நாவிதர், வயது 60, குளத்துப்பாளையம்) இதே கருத்தைத்தான் ஞானியாகிய புத்தர் இந்த உடம்பு மட்குடம் போன்று உடையும் இயல்புடையது. இந்த உண்மையை உணர்ந்தவர்கள் தங்கள் மனதைக் கோட்டைபோல் பாதுகாப்புச் செய்து கொண்டு மாரனை (தீயஆசைகளை) எதிர்த்து நிற்பார்கள். பற்றற்ற நிலையில் நின்று வெற்றியைப் போற்றி நிலை நாட்டிக் கொள்வார்கள். (மேலது, பக். 17, 18) இக்கருத்தை உற்றுநோக்கும்பொழுது குடம் உடைத்தல் என்பது ஓட்டைக் குட நீரானது சிறிது சிறிதாக ஒழுகிநீர் முழுவதும் தீர்ந்து போவது போல மனிதன் வாழும் நாட்களில் வயது முதிர்ந்தோ நோய் வாய்ப்பட்டோ இறக்க நேரிடுகிறான். இறுதியில் குடம் உடைக்கும் நிகழ்வு என்பது உடைந்த மண்குடம் எதற்கும் பயன்படாமல் மண்ணோடு மண்ணாக மக்கிப்போவது போல உயிர்போன உடம்பும் எதற்கும் பயன்படாததால் மண்ணுக்குள் புதைக்கப்படுகிறது. இதனால் உடம்பானது மண்ணோடு மண்ணாகக் கலந்து விடுகிறது. ஓட்டை மண்குடம், மனித உடம்பு ஒழுகும் நீர், வாழும் நாட்கள் ஒழுகிப்போன வெற்று மண்குடம், உயிரில்லா உடம்பு குடம் உடைத்தல், பயனில்லா உடம்பு மண்ணோடு சங்கமமாதல். இச்சடங்கானது உயிர்நிலையாமைக் கோட்பாடுகளை ஆணித்தரமாக உணர்த்துகிறது.

பிண்ணப்பூ; 'பிண்ட புட்பம்' என்பதற்கு 'அசோகமரம்' எனவும் 'பிண்டம், பிண்டு' என்றால் 'உடல்' எனவும் பொருள் என கிரியாவின் தற்காலத் தமிழ் ஆங்கிலம் அகராதி கூறுகிறது. (ப. 733) 'பிண்டப்பூ' என்பதே காலப் போக்கில் 'பிண்ணப்பூ' என மருவியிருக்கிறது. முன்னொரு காலத்தில் அசோக மலர்களையும் செவ்வந்திப் பூக்களையும் தூவி வணங்கியிருப்பது, பின்னாளில் கிடைக்கும் மலர்களைக் கொண்டு போடுவது எனும் வழக்கமாக மாறிவிட்டது. மேலும், 'பிண்டியார்' என்றாலே 'சமணர்கள்' எனக் கூறப்படுவதால், இதுசமணமதத்தின் எச்சமும் ஆகும்.

**முடிவுரை:**

மேற்கூறிய நிறுவல்கள் தவிர மற்ற சடங்குகள் வெளிப்பாடு இறந்தவர்களை இறைவனாக நினைத்து வழிபடுதல் என்ற நிலையை நாம் விளங்கிக் கொள்ளலாம். மற்றவை பௌத்தக் கூறுகளின் எச்சங்கள் என்பதுடன் தமிழகத்தில் சைவ வைணவம் தங்களின் சமயங்களை நிலை நிறுத்திக் கொள்ள எந்தக் கூறுகளை மக்கள் அதிகம் நம்பினார்களோ, தோய்ந்து கிடந்தார்களோ அவையே தங்களின்

வழக்குகளாகவும் மாற்றிவிட்டனர். நாட்டு மருத்துவ முறைகளும் சமண, பௌத்த சமயங்களின் கொடை. மலைப்பகுதியில் திரிந்தவர்களுக்கு மூலிகை தாவர அறிவு நிரம்பியவர்களாக இருந்தனர். இம்மதங்கள் எதிர்ப்பு பற்றி 'வேள்பாரி' நாவலில் பெண்கள் தங்களுக்குள்ள தீராத நோய்களைக் குணமாக்கிக் கொள்ள மலைகளில் உள்ள முனிவர்களை நாடிச்சென்றதைப் பெண்களைத் தவறாகப் பயன்படுத்துகிறார்கள் எனக் கூறிக்கொண்டு குகையோடு சேர்ந்து அவர்களையும் தீ வைத்துக் கொன்றார்கள் என்பது பதியப்பட்டுள்ளதன் பேரில் இன்னும் உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

**Reference:**


1. Bhakthavatchala Bharathi (2005),samooga Panpattu Manidavial,Adaialam Pathippagam,Puththaa Natham
2. Gandhi. K (1980),Thamilaga Pazhakka Vazhakkangalum Nambikkaikalum,International Tamil Research Centre
3. Gnanasekaran D (2000), Mandhiram Sadangugal Samayam,Parthiban Pathippagam,Trichy
4. Mohan,R.C.,(Pathippasiriar) (2006),Padhartha Guna Chindhamani,Thamarai Noolaham,Chennai
5. Natarajan.A.L., (1982), Thammapatham,Kasturiba Gandhi Kanya Gurukulam,Vedharanyam
6. Paramasivan (2001),Panpattu Asaivugal,kalachuvadu Pathippagam.
7. Paramasivanadham.A.M, (1962), samudhayamum Panpadum,Tamilkalai Pathippagam,Chennai
8. Ragavan A.S.V, (1978), Yuvang Suvang,Manivasagar Pathippagam,Chennai
9. Somaley, (1974), Tamil Nattu Makkalin Marabum Panpaadum,National Book Trust of India, New Delhi
10. Somasundhranar PO. VEY.(Uraiasiriar) ,Purapporul Venbamalai,Thennindhia Saiva Chithandha Nootpathippu Kazhagam,Thrunelvely
11. Vengada Samy (Mayilai seeni), (1969), Gouthama Budhar,Gandhi Noolagam,Chennai
12. Yazhin Adhi, (2014), Thammapatham,Edhir velied,Pollachi



முனைவர் த. பரமேசுவரி,
இணைப் பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்,
நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி,
பொள்ளாச்சி, தமிழ்நாடு, இந்தியா.
parameshwarit78@gmail.com

## 33 • பண்டிதர் அயோத்திதாசரின் வாழ்வும் பணிகளும்

• • • முனைவர் சிவ. இளங்கோ




தமிழ், திராவிடம் ஆகிய இரண்டு சொற்களும் தமிழ்நாட்டு அரசியலின் அடிப்படையாக அமைந்ததற்குத் தொடக்கக் கால வித்தாய் அமைந்தவர் பண்டிதர் அயோத்திதாசர். அவருக்கு மணிமண்டபம் அமைக்கப்படும் என்று தமிழ்நாடு அரசின் மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் அறிவிப்புக்கு நன்றி தெரிவிக்கும் வேளையில் அவரது கருத்தியல் போராட்டங்களை மீண்டும் நினைவூட்டுகிறது இக்கட்டுரை.

**முன்னுரை:**

உலகப் புரட்சிகளுக்கெல்லாம் அடிப்படை, சிந்தனை வளர்ச்சியும், அதன் செயலாக்கமும் தான். சிந்தனை வளர்ச்சியில் ஏற்படுகின்ற ஒரு பொறி வரலாற்றையே திசை திருப்பிவிடும். அந்தப் பொறியை யார் உருவாக்குகிறாரோ அவர்தான் கலகக்காரர். இந்தக் கலகக்காரர்கள் காலச்சுவடுகளை ஏற்படுத்த வல்லவர்கள். அப்படி இரண்டு கலகக்காரர்கள் இருபதாம் நூற்றாண்டில் இந்தியாவில் இருந்தனர். அவர்கள் செய்தது சமுதாயப் புரட்சி. அவர்கள் தந்தை பெரியாரும், அண்ணல் அம்பேத்கரும் தான். இவர்களுக்கு முன்பே 19 ஆம் நூற்றாண்டில் ஒரு கலகக்காரர் இருந்தார். அவர் தொடங்கிய கலகம் இன்னும் ஒரு சமூகப் புரட்சியாக வெடிக்கக் கூடும். அவர்தான் அயோத்திதாசப் பண்டிதர்.

**பெயர்க் காரணம்:**

அயோத்திதாசர் 20. 5. 1845 அன்று பிறந்தார். அவருடைய இயற்பெயர் காத்தவராயன். அவருடைய தந்தையார் கந்தசாமி. அவருடைய பாட்டனார் கந்தப்பன். பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனி ஆட்சியின் போது சென்னை மாகாண ஆட்சியாளராக தாமஸ் மன்றோ இருந்த வேளையில், கிழக்கிந்தியக் கம்பெனியின் நிர்வாகப் பொறியாளராகப் பணிபுரிந்தவர் ஜார்ஜ் ஆரிங்டன். அவரிடம் உதவியாளராகப் பணிபுரிந்தவர் அயோத்திதாசரின் தாத்தா கந்தப்பன் ஆவார்.

கந்தப்பனார் பேரனும், கந்தசாமியின் மகனுமான காத்தவராயன், வளருங் காலத்தில் கல்வி கற்கும் பொருட்டு அக்காலத்திய வழக்கப்படி திண்ணைப் பள்ளியில் அயோத்திதாசக் கவிராயர் என்னும் புலவரிடம் விடப்பட்டார். காத்தவராயன் சிறு வயதிலிருந்தே கல்வியில் மிகவும் நாட்டம் உள்ளவராக

வளர்ந்தார். தன் குருவின் புலமையினாலும், அறிவினாலும் ஈர்க்கப்பட்ட காத்தவராயன், குருவின் சிறந்த மாணவனாகி, அவரைப் போலவே புலமை பெற்றுக் கவிராயர் ஆனார். தன் குருபக்தியின் விளைவாக அவரது பெயரையே பூண்டு அயோத்திதாசர் ஆனார்.

பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு எதிராக 1857 ஆம் ஆண்டு இந்தியாவில் நடைபெற்ற சிப்பாய்க் கலகத்தைத் தொடர்ந்து, 1858 ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனி ஆட்சி முடிவுக்கு வந்தது. அதே ஆண்டில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நேரடி ஆட்சி இந்தியாவில் பிரகடனப் படுத்தப்பட்டது. இந்தப் பிரகடனத்தில் இந்தியச் சமூகங்களின் வழக்காறுகளில் பிரிட்டிஷ் அரசு தலையிடாது என்ற அரசாங்கத்தின் உறுதிமொழி சனாதனவாதிகளைக் களிப்படைய வைத்தது. ஆனாலும் அதற்கும் ஒரு மாற்றாக இந்தியாவில் மெக்காலே கல்வித் திட்டம் நடைமுறைப்படுத்தப்பட்ட போது, இந்தியாவில் அனைவரும் கல்வி கற்கும் நிலை ஏற்பட்டது. இதனால், அரசுப் பள்ளியில் சேர்ந்து, கல்வி கற்கும் வாய்ப்பைப் பெற்றுக் கல்வி, கேள்விகளைத் திறம்பட முடித்தார் அயோத்திதாசர்.

பின்னர், தன் பூர்வீகக் கிராமமான கோவை, அரசம்பாளையம் சென்று சிறிது நாட்கள் பணிபுரிந்து வந்தார். அங்கு ஒரு மலையக மங்கையை மணமுடித்தார். அங்கு வசித்தவர்கள் தொழில் நிமித்தமாக இரங்கூனுக்குச் சென்றபோது, அயோத்திதாசரும் அவ்வழியே புலம்பெயர்ந்து, பத்தாண்டுகள் கழித்து திரும்பவும் சொந்த நாடு வந்து சேர்ந்தார்.

**திருக்குறள் பதிப்பு:**

தமிழகத்தின் ஆதி குடியான வள்ளுவர்கள் கற்றோர், கணியர்கள் அதிகம் கொண்ட சமுதாயமாக இருந்தனர். இவர்களில் பெரும் புலவர்களும் இருந்தனர் என்பதற்கு திருவள்ளுவரே சாட்சி. மேலும் இவர்கள் சோதிடர்களாகவும், வைத்தியர்களாகவும், கோயில் நிர்வாகிகளாகவும் இருந்தனர். சோதிடத்திற்கு வள்ளுவ சாத்திரம் என்ற பெயரும் உண்டு. கோள்களின் நிலையை வைத்து வானியல் அறிவின் துணையுடன் எதிர்காலத்தைக் கணிக்கும் முறையிலும் இவர்கள் தேர்ச்சி பெற்றிருந்தனர். முற்காலங்களில் மன்னனின் குருவாகவும், மன்னனின் ஆணையை அறிவிப்புச் செய்பவர்களாகவும் வள்ளுவர்கள் இருந்திருக்கின்றனர். இவர்களுக்கு "உள்படு கருமத் தலைவன்" என்னும் பதவி வழங்கப்பட்டிருக்கிறது. இந்த வள்ளுவர்களே கருவோட்டம் பார்த்து மழை முன்கணிப்புச் செய்து வந்தனர்.

சாக்கையர் என்று வழங்கி வரும் வள்ளுவர் சமுதாய வழித்தோன்றிய அயோத்திதாசரின் முன்னோர்களும் மிகச் சிறந்த கல்வியாளர்களாக இருந்தனர். அதனால் பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனியாளர்களுடன் அவர்கள் தொடர்பு கொள்ளச் சாத்தியமானது. பிரிட்டிஷ் ஆட்சியாளர்களுடன் அயோத்திதாசரின் முன்னோர்கள் கொண்ட தொடர்பும், இவர்களது கல்வி அறிவால் வளர்ந்திருந்த நெருக்கமும் தமிழிலக்கிய மேம்பாட்டிற்குப் பெரிதும் துணையாய் அமைந்தன.

திருக்குறள் முதன்முதலாக அச்சில் வெளிக் கொணரக் காரணமாக அமைந்தவர் அயோத்திதாசரின் பாட்டனார் கந்தப்பன் அவர்களே.

இங்கிலாந்தில் குடிமைப் பணியில் தேர்ச்சி பெற்று பிரிட்டிஷ் இந்திய நிர்வாகப் பணியாற்றச் சென்னைக்கு வந்திருந்த பிரான்சிஸ் வைட் எல்லீஸ் (1777-1819) தமிழ் மொழி கற்கத் தொடங்கி, பின் தமிழின் வளங்களைக் கண்டபின், தமிழ் தொடர்பான சங்கம் ஒன்றைத் தொடங்கி, தமிழில் கிடைத்த முக்கியமான ஓலைச்சுவடிகளை அச்சியற்றும் பணியைத் தன் ஓய்ந்த நேரப் பணியாகக் கொண்டிருந்தார். அயோத்திதாசரின் பாட்டனார் உதவியாளராக இருந்த பொறியாளர் ஜார்ஜ் ஆரிங்டன், எல்லீஸ் பிரபுவின் நண்பராக இருக்கவே கந்தப்பன் - எல்லீஸ் தொடர்பு சாத்தியமானது. இத்தொடர்பு எல்லீஸ் பிரபுவின் தமிழ்க் காதலுக்கு எருவானது.

கந்தப்பனாரிடம் தமிழின் வளம் மிகுந்த செல்வங்கள் ஓலைச் சுவடிகளாக இருந்ததைக் கண்டு கொண்ட எல்லீஸ் பிரபு, அப்பாரம்பரியச் சொத்துக்களை அவரிடமிருந்து கேட்டுப் பெற்றார். இதுவரை வாசித்த தமிழ் இலக்கியங்களில் மிக அரிதானதும், முதன்மையானதும் ஆன திருக்குறள் ஓலைச்சுவடி அவரை திக்குமுக்காடச் செய்து விட்டது. தான் தமிழ் கற்றுக் கொண்டிருந்த தமிழ் வித்துவான்கள் தாண்டவராய முதலியார், முத்துசாமிப் பிள்ளை ஆகியோரிடம் அவ்வோலைச் சுவடிகளைக் கொடுத்து அச்சிலேற்றப் பணித்தார். 1831 ஆம் ஆண்டு திருக்குறள் முதன்முதலாக அச்சில் வெளிவந்தது. தொடர்ந்து கந்தப்பனாரிடம் இருந்து பெற்ற திருவள்ளுவமாலையும், நாலடி நானூறும் அச்சில் வெளிவந்தன. ஆட்சியாளர்களின் அங்கீகாரத்தோடு ஓலைச்சுவடிகள் அச்சு நூலாக வெளிவந்ததைக் கண்டுக் கந்தப்பனார் பெருமை அடைந்தாலும், அதில் ஒரு சில இடைச்செருகல்கள் அவரை வேதனை அடைய வைத்தன.

பின்னாட்களில் அயோத்திதாசர் திருக்குறளின் 55 அதிகாரங்களுக்கு உரை எழுதினார். அவை இதுவரை வெளிவந்த திருக்குறள் உரைகளில் இருந்து பெரிதும் வேறுபட்ட உரையாக இருந்தது. திருக்குறளைத் திரிக்குறள் என்றே அயோத்திதாசர் விளக்கம் அளித்தார்.

**சமயப் பயணங்கள்:**

அயோத்திதாசர்க்கு அவரது தந்தை இட்ட பெயர் காத்தவராயன். காத்தவராயன் என்ற அவரது இயற்பெயரே வள்ளுவத்தில் இருந்து வெகு தூரம் விலகி வந்து விட்ட தமிழ்ச் சூழலையும், அச்சூழலின் சாதி ஆதிக்க மேலாண்மையையும் குறிக்கும். இதிலிருந்து விடுபட்டுத் திரும்பவும் பௌத்தக் கடலினுள் போய் அடைவதற்குள் அயோத்திதாசருக்கு நீண்ட பயணம் நிகழ்ந்து விடுகிறது. முன்னோர் வழிகாட்டல், குருபக்தி எல்லாம் அவரைத் துளசிமாடம், அத்துவைதானந்த சபை ஆகிய அமைப்புகளுடன் உள்ளூரிலேயே (நீலகிரி - 1870) அடைத்து விடும் அளவுக்குச் சென்றாலும், அடுத்த பத்து ஆண்டுகள் கழித்து அவரது தேடலுக்கு விடை கிடைத்து விடுகிறது. 1882 ஆம் ஆண்டில் அயோத்திதாசர் நீலகிரியில் தன்னுடைய மைத்துனர் இரட்டைமலை சீனுவாசனுடன், கர்னல் ஹென்றி ஸ்டீல் ஆல்காட் மற்றும்

பிளாவட்ஸ்கி அம்மையார் ஆகியோரைச் சந்தித்தார். அமெரிக்கரும், ரஷ்யரும் ஆன இவர்கள் தத்துவத் தேடலில் ஒன்றிணைந்து 1883 ஆம் ஆண்டில் சென்னை அடையாறில் பிரம்ம ஞான சபையைத் துவக்கினர். தியோசாபிகல் சொசைட்டி என்னும் இந்த பிரம்ம ஞான சபை இதற்கு முன்னரே இவர்களால் 1875 இல் நியூயார்க்கிலும், 1879 இல் பம்பாயிலும் தொடங்கப்பட்டது. அதுவரை வைணவத்தைக் கடைப்பிடித்து, அத்துவைத மரபின் நம்பிக்கைகளோடு பயணித்து வந்த அயோத்திதாசர், தெளிந்த சிந்தனையுடன் மெல்ல மெல்ல மூடநம்பிக்கையில் இருந்து விடுவித்துக் கொண்டார்.

பௌத்த சமயச் சார்புடையவரான கர்னல் ஆல்காட், தாழ்த்தப்பட்ட மக்களின் முன்னேற்றத்திற்காகத் தொண்டாற்றி வந்தவர். அடையாறில் பஞ்சமர் பள்ளியை நிறுவி நடத்தி வந்தார். இவையெல்லாம் அயோத்திதாசருக்கு அவரது தேடலின் முடிவாகக் கொள்ளப்படும் வாய்ப்பாக அமைந்து ஆல்காட் உதவியுடன் பௌத்தர் ஆகும் உறுதியைக் கொடுத்தன. 1898 இல், பஞ்சமர் பள்ளி ஆசிரியர் கிருஷ்ணசாமி, கர்னல் ஆல்காட் இவர்களோடு கொழும்பு சென்ற அயோத்திதாசர், அங்கு சுமங்களா என்னும் பௌத்த சமயக் குருவிடம் தீட்சை பெற்றுப் பௌத்தர் ஆனார். கொழும்பில் நடைபெற்ற பௌத்த சமயப் பிரதிநிதிகள் கூட்டத்தில் ஆல்காட்டுடன் அயோத்திதாசரும் பேசினார்.

இந்தியா திரும்பிய பின்னர், சென்னை ராயப்பேட்டையில், தென்னிந்திய சாக்கிய பௌத்த சங்கத்தை அயோத்திதாசர், கர்னல் ஆல்காட்டின் உதவியுடன் 1898 இல் நிறுவினார். அயோத்திதாசர், தமிழ் பௌத்தம் என்னும் சித்த வைத்தியத்தைத் தமிழர்களுக்கு அளிக்கச் சித்தமானார். பௌத்த சமயத் தத்துவங்கள் இந்த சங்கத்தில் விளக்கப்பட்டன. அயோத்திதாசர், பேராசிரியர் லட்சுமி நரசு, சிந்தனைச் சிற்பி சிங்காரவேலர் ஆகியோர் இணைந்து பௌத்த சமயப் பிரச்சாரம் செய்து வந்தனர். இக் கூட்டங்களுக்கு எதிர்ப்பாளராக வந்த திரு வி. கலியாணசுந்தரனார் மனம் மாறி, "எனது மதவெறியைத் தீர்க்கும் மருந்தாயிற்று" என்று பாராட்டியுள்ளார்.

இதன் பிறகு அனைத்திற்கும் பௌத்தத்தையே தீர்வாக வைத்து அயோத்திதாசர் எழுதியும், பேசியும் வந்தார். தமது பௌத்தச் சமயப் பணிகளின் காரணமாகத் "தென்னிந்திய பௌத்த சமய முதல் மறுமலர்ச்சியாளர்" என்று அயோத்திதாசர் போற்றப்படுகிறார்.

**இந்துக்கள் அல்ல ஆதித் தமிழர்கள்:**

1881 ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் மேற்கொண்ட மக்கள் தொகைக் கணக்கெடுப்பின் போது, இந்தியாவில் வாழ்ந்த பெரும்பான்மையினரை இந்துக்களாக மாற்றிய வஞ்சகம் நடைபெற்றது. ஆட்சியாளர்களுடன் நெருங்கி இருந்த உயர்சாதியினர், தங்களுக்கே தெரியாமல் மாபெரும் மதப் புரட்சியில் வெற்றி பெற்றனர். என்ன நடக்கிறது என்றே தெரியாத பல கோடி இந்தியர்கள் இந்துக்களாக மதமாற்றம் செய்யப்பட்டனர்.

இத்தகைய மறைமுகமான மத மாற்றத்தைப் புரிந்து கொண்ட அயோத்திதாசர், இப்படிப்பட்ட வலுக்கட்டாயமான, இந்துவாக மாற்றம் திணிப்பை எதிர்த்து அரசாங்கத்திற்குக் கோரிக்கைகள் அனுப்பினார். "இந்துக்கள் என்ற அடையாளத்தை விடுத்து ஆதித் தமிழர்களாக செவ்வியல் மதத்தைச் சார்ந்தோரும், சாராதோரும் அறிவிக்கப்பட வேண்டும்" என்று அவர் எழுதிய வரலாற்றுச் சிறப்புமிக்க கோரிக்கை அன்றைய காலனிய ஆட்சியாளர்களால் ஏற்றுக்கொள்ளப் படவில்லை. பிரிட்டிஷ் போர்வையில் இந்துத்துவம் பெரிதாக மலர்ந்துவிட்டது. இந்தியாவின் பூர்வ குடிமக்களைத் தமிழராகவும், திராவிடராகவும், பௌத்தர்களாகவும் அயோத்திதாசர் குறிப்பிடுகிறார். இந்தியாவின் பூர்வ குடிமக்கள் நாகர்கள் என்றும், அவர்களே திராவிடர்கள் என்றும், அவர்களின் மொழி தமிழ் என்றும் டாக்டர் அம்பேத்கர் குறிப்பிடுகிறார். அயோத்திதாசர் எழுப்பும் குரல் ஒடுக்கப்பட்ட மக்களுக்கு மட்டுமல்லாமல், ஒட்டுமொத்தத் தமிழர்களுக்கான குரலாக ஒலித்தது.

இந்திய வரலாற்றில் பழங்குடி மக்கள் அனைவரும் பௌத்தர்களாக இருந்ததைக் கண்ட அவர், பேரார்வம் கொண்டு, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட பழங்குடி மரபினை மீட்டுருவாக்கம் செய்ய முயன்றார். முந்தைய தமிழர், திராவிடர், பௌத்தம் ஆகிய வரலாறுகள் வைதிகப் பார்ப்பனர்களால் மாற்றம் செய்யப்பட்டுப் பொய்யான புதிய புராணங்களும், இதிகாசங்களும், வேதங்களும் கட்டமைக்கப்பட்டுப் பூர்வகுடி மக்கள் மேல் திணிக்கப்பட்டு விட்ட உண்மையை அயோத்திதாசர் அறிந்து, உணர்ந்து, அதைத் தமிழுலகம் அறியத் தந்தார்.

ஆதியில் இருந்த சாதி பேதமற்ற திராவிடப் பழங்குடியினர், பின்னாட்களில் சமய அதிகாரமும், அரச அதிகாரமும் கொண்ட வைதிகப் பிராமணியத்தின் வஞ்சகத்தில் வீழ்ந்து, தங்களை ஒடுக்கும் மதத்தை ஏற்று, தங்களை இழிவு படுத்தும் புராணங்களை நம்பி, தங்களை ஒடுக்கும் வரலாற்றுக் கூண்டினில் தாங்களே அடைபட்டுக் கண்கள் பஞ்சடைந்த புலிகளாகி விட்ட பழங்குடியினரின் வீழ்ச்சியுற்ற நிலையினைத்தான் அயோத்திதாசர் சுட்டிக்காட்டினார்.

உண்மையான வரலாற்றைக் கட்டுடைத்துப் பொய்யான புராணங்களைக் கட்டமைத்து, அதிகாரத்தின் உச்சத்தை அனுபவித்துக் கொண்டிருந்த வைதீகப் பிராமணிய ஆணவக் கூட்டத்தைத் துச்சமாக மதித்த அயோத்திதாசர், அந்தப் பொய்யான புராண, இதிகாசங்களைக் கட்டுடைத்து மீண்டும் தன் பூர்வகுடி மக்களுக்கான, திராவிடர்களுக்கான, தமிழ் பௌத்தர்களுக்கான தன்மான வாழ்வைப் புதியதாகக் கட்டமைக்கும் மாபெரும் பணியை, நெடிய பயணத்தைத் தனி ஒருவராக மேற்கொண்டார்.

அந்தப் பயணம் சாதி பேதமுற்று ஒடுங்கிக் கிடந்த தமிழர்களை மீண்டும் சாதியற்றத் தமிழர்களாக ஒருங்கிணைப்பதற்கான ஒரு திட்டமாக இருந்தது. வைதிகத்தை ஏற்று இத்தனை ஆயிரம் சாதிகளாகப் பிரிந்து விட்ட அத்தனைத் தமிழர்களையும் எப்படிச் சாதியற்றவர்களாக ஆக்குவது? ஆக்கலாம். ஆக்க முடியும்.

அப்படித்தான் வாழ்ந்தார்கள். இங்கு தான் உண்மையான வரலாறு கைகொடுத்தது. இருக்கின்ற சமயத்தைத் துறந்து பூர்வகுடி மக்களின் பூர்வ சமயம் இதுவென அறிவிப்பது தான் அது.

பூர்வ பௌத்தர்களாகத் தமிழர்கள் ஆகும் பட்சத்தில், சாதி பேதமற்ற சமயமாகவும், சமுதாயமாகவும் அது மாறும் என்றார் அயோத்திதாசர். ஆதிக்கச் சமயங்கள் நமக்குச் சமநிலை தராதென்றால், ஆண்டவன் சன்னதியில் கூட அடுக்குமுறையும், அடக்குமுறையும் நிலவும் என்றால் நமக்கான சமயம், வழிபாடு, பண்பாடு எல்லாவற்றையும் நாமே கட்டமைத்துக் கொண்டு - கட்டமைத்தல் கூடத் தேவையில்லை - ஆதியில் இருப்பதையே மீட்டுருவாக்கம் செய்து கொண்டு, இன்னொருவன் சொல்லில் மானமற்று வாழ்வதைவிட, நம்முடைய மொழியில் தன்மானம் கொண்டு வாழ்வதே தமிழர்களின் வாழ்வு, அது தமிழ்ப் பௌத்தமாக நிலவும் பட்சத்தில் இது ஒன்றே வைதீகப் பார்ப்பனியத்திற்கு ஒலிக்கும் சாவுமணி என்று அறிவித்தார் அயோத்திதாசர்.

**திராவிட மகாஜன சபை:**
வெஸ்லி சபையாரான அருட்திரு ஜான் ரத்தினம் என்பவருடன் அயோத்திதாசருக்குத் தொடர்பு ஏற்பட்டது. 'திராவிடச் சங்கம்' என்ற அமைப்பின் மூலம் ஏழை மக்களுக்குத் தொண்டாற்றி வந்த ஜான் ரத்தினம், அயோத்திதாசரைத் துணை கொண்டு 1885 ஆம் ஆண்டில் 'திராவிட பாண்டியன்' என்னும் இதழைத் துவக்கினார். இதற்கு முன்னரே தன் ஆசானான வல்லக்காளத்தி வீ. அயோத்திதாசக் கவிராயருடன் 'சூரியோதயம்' என்னும் இதழை 1869 ஆம் ஆண்டிலும், புதுப்பேட்டை வேங்கடசாமிப் பண்டிதருடன் இணைந்து 'பஞ்சமன்' என்னும் இதழை 1871ஆம் ஆண்டில் நடத்திய அனுபவமும் அயோத்திதாசருக்கு இருந்தது.

1887 ஆம் ஆண்டு வாக்கில் அயோத்திதாசரின் தேடலில் மிகப்பெரிய பொக்கிஷம் ஒன்று கிடைத்தது. பௌத்தத் துறவி அசுவகோஷ் இயற்றிய "நாரதீய புராண சங்கைத் தெளிவு" என்ற பெயரில் 570 பாக்களைக் கொண்ட ஓலைச்சுவடி கிடைத்து, அயோத்திதாசரின் இத்தனை நாள் வேட்கைகளுக்கும் விடையளித்தது. மேலும், காக்கைப் பாடினியார் மற்றும் நல்லுருண்டையார் ஆகிய புலவர்களின் விளக்க ஓலைச் சுவடிகளும் கிடைத்து அவரின் சிந்தனைப் போக்கை விரித்தன.

1891 ஆம் ஆண்டில் தன்னை ஒத்த கருத்துக் கொண்ட பலருடன் சேர்ந்து "திராவிட மகாஜன சபை"யைத் துவக்கினார் அயோத்திதாசர். அதற்கு அடுத்த ஆண்டில் சென்னை விக்டோரியா ஹாலில் நடைபெற்ற சென்னை மகாஜன சபைக் கூட்டத்தில் திராவிட மகாஜன சபையின் நீலகிரி மாவட்டப் பிரதிநிதியாகக் கலந்து கொண்ட அயோத்திதாசர், ஆலய நுழைவில் ஆதிதிராவிடர்களுக்கான உரிமைக் குரலை எழுப்பினார். "எங்கள் கடவுள் ஆலயத்தில் உங்களுக்கு இடம் இல்லை. மேலும் உங்கள் கடவுள் வேறு" என்று மகாஜன சபையின் தஞ்சாவூர்ப் பிரதிநிதி சிவராம சாஸ்திரியின் பதிலால் மிகவும் வேதனை அடைந்தார் அயோத்திதாசர்.

மேலும் ஆதிதிராவிடர் கல்வி மேம்பாட்டிற்கும், குடியிருப்பு நிலம் தொடர்பாகவும் அக் கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்ற வேண்டுமென்று அயோத்திதாசர் குரல் எழுப்பியபோது, "கல்வியும், விவேகமும் பிராமண வித்திற்கே சொந்தமானது" என்று சிவராம சாஸ்திரி சொல்லக் கேட்டு, அங்குக் கூட்டத்திற்கு வந்திருந்த அனைவரும் ஆரவாரம் செய்தனர். இதனால் மிகவும் மனம் நொந்த அயோத்திதாசர், "கல்வியும் விவேகமும் பிராமண வித்திற்கே சொந்தமானது என்றால், இன்றைய தினம் சிறைச்சாலைகளில் இருக்கக்கூடிய பிராமணர்கள் எல்லாம் யாருடைய வித்திற்குப் பிறந்தவர்கள்" என்று கூறி ஆர்ப்பரித்த அக்கூட்டத்தை அடக்கி உட்கார வைத்தார். ஆனாலும் இந்த நிகழ்ச்சி அவர் மனதை மிகவும் புண்படுத்தி இருந்தது.

இந்நிலையில் தான் சாதிய விரோதம், மதத்துவேஷங்களுக்கான காரணங்களாகத் தான் இதுவரை கண்டு, கேட்டு, உணர்ந்து கற்றவைகளிலெல்லாம் ஆய்ந்து ஒரு தெளிவுக்கு வந்தார் அயோத்திதாசர். அது முற்றிலுமாக வரலாறு முதற்கொண்டு அனைத்தையும் புரட்டிப் போடுவதுடன் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நடைபெற்று வந்த புரட்டு, முரட்டு வாதங்களைத் தவிடுபொடியாக்கும் தத்துவம் என்று சொல்லக்கூடிய ஆதித் தமிழர்களின் விடுதலைக்கு வழிவகுக்கும் கலகத்தின் தொடக்கமாக அமைந்தது. அதுதான் தமிழ் பௌத்த அடையாளம். இக்கனவின் அடையாளத்தை நாட்டுப்புறத் தெய்வங்களில் இருந்தே அயோத்திதாசர் துவங்குகிறார் என்பது, இந்தத் தமிழ் மண்ணின் அடையாளத்தை இந்திய நாடெங்கும் விரிக்கும் அவரது பெருங்கனவாகக் கொள்ளலாம்.

**ஒரு பைசாத் தமிழன்:**

ஐம்பெருங்காப்பியங்கள், ஐஞ்சிறுகாப்பியங்கள், நிகண்டுகள், தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள், புராணங்கள் போன்றவற்றை விரல்நுனியில் வைத்துக்கொண்டு ஆராய்ச்சி செய்யும் பெரும் புலமை பெற்று விளங்கியவர் அயோத்திதாசர். தமிழ், பாலி, பிராகிருதம், சமக்கிருதம் என்று பன்மொழிப் புலமை பெற்றவர். ஏற்கனவே சூரியோதயம் (1869), பஞ்சமன் (1871), திராவிட பாண்டியன் (1885) ஆகிய இதழ்கள் நடத்திய பட்டறிவைக் கொண்டு, 19. 6. 1907 முதற் கொண்டு "ஒரு பைசாத் தமிழன்" என்னும் இதழைத் துவக்கினார் அயோத்திதாசர். இந்தப் பெயருக்கு அயோத்திதாசர் கொடுத்த விளக்கம்:

"தாழ்த்தப்பட்ட சமூகத்தவரைப் பைசா பெறாதவன் என்பது போல இளப்பமாகக் கூறுவது வழக்கமாயினும், அத்தகைய ஒரு பைசாத் தமிழனின் அருமை அறியாதவர்கள், அதன் உண்மையை உணர்ந்தால் ஒரு கோடிப் பொன் இதுதான் என்று உரைப்பர்" என்று கூறியிருக்கிறார். என்றாலும், அடுத்த ஆண்டிலேயே இதனைத் "தமிழன்" என்று பெயர் மாற்றம் செய்து 26. 8. 1908 முதல் 15. 4. 1914 வரை நடத்தினார். இவ்விதழில் நிகண்டு நூற்பாக்கள், இலக்கண, இலக்கிய, காப்பிய விளக்கங்களும், உலகச் செய்திகளும் தொடர்ச்சியாக இடம் பெறச் செய்தார். இந்தியச் சமயங்கள், தத்துவங்கள் ஆகியவை மிக விரிவாக ஆய்வு செய்யப்பட்டுள்ளன. பெண்கள் முன்னேற்றக் கட்டுரைகளைப் பெண்களே எழுதியுள்ளனர்.



Registered No. M. 673.

ஒருபைசாத் தமிழன்

ONE PICE TAMILIAN

Vol. 1. 23th June 1907. No. 2.

தமிழன் இதழில் நூல் அறிமுகமும் செய்யப்பட்டது. கர்னல் ஆல்காட் தருமப் பாடசாலை, தாமோதரா கலாசாலைத் தலைமையாசிரியர் எம். சி. ராஜா எழுதிய நீதி மார்க்கக் கதைகளும் பாடல்களும் போன்ற மதிப்புரைகள் இதழியல் பணிகளில் மேதைமையைக் காட்டுகின்றன. இவ்விதழுடன் அனுபந்தம் ஆகிய இணைப்புகளும் வழங்கப்பட்டுள்ளன. அயோத்திதாசரின் சிந்தனைக் கீற்றின் பரிமாணங்களும், அவரது சிந்தனைத் தெளிவுகளும், எதிர்காலப் பேரொளியாகும் தத்துவ விளக்கங்களும் அவருடைய இதழ்களில் படைப்புகளாக உருவெடுத்தன. அவருடைய எழுத்தாளுமையைத் தீர்மானிக்கும் உறுதியான கொள்கைகளாகச் சாதி எதிர்ப்பு, அனைவருக்கும் கல்வி, இட ஒதுக்கீடு, பெண்ணுரிமை, பௌத்த நெறி ஆகியவை அமைந்தன.






வேஷ பிராமண எதிர்ப்பும் அதன் விளைவான இந்து மத எதிர்ப்பும் இவற்றின் வழி அவர் அடையப்போகும் இலட்சியமாகக் கனவு கண்ட தமிழ் பௌத்தமும் அவருடைய கருத்தாளுமையின் அரண்களாக அமைந்திருந்தன. இந்த அடிப்படையில் அவர் இதழ்களில் எழுதிய பல தொடர் கட்டுரைகளும், ஆய்வுகளும் நூல்களாகவும் வெளிவந்தன. ஏழாண்டுக் காலம் 'தமிழன்' வார இதழைத் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும், ஆதித் தமிழர்களின் வளர்ச்சிக்கும் பயன்படுத்தினார் அயோத்திதாசர். அவரது மறைவிற்குப் பிறகு அவருடைய புதல்வர் பட்டாபிராமன் 17. 6. 1914 முதல் 26. 8. 1915 வரை தமிழன் இதழை நடத்தினார். பிறகு கோலார் தங்கவயல் பண்டிதமணி க. அப்பாதுரையார் ஆசிரியர் பொறுப்பேற்று 7.7.1926 முதல் 27.6.1934 வரையில் தமிழன் இதழை நடத்தி வந்தார்.

**எழுத்துகளும், படைப்புகளும்:**

வேத எதிர்ப்பு, பார்ப்பனிய ஆதிக்க எதிர்ப்பு, இந்து மத எதிர்ப்பு ஆகியவற்றின் வழி தாழ்த்தப்பட்டோரின் மனக்குமுறல்களைத் தன்னுடைய எழுத்துக்களில் வெளிப்படுத்தி வந்தார் அயோத்திதாசர். தலித் இலக்கியம், பகுத்தறிவு இலக்கியம் ஆகியவற்றுக்கான வித்துகள் அவரது படைப்புகளில் பரவலாகக் கிடைக்கின்றன. அவர் இதழ்களில் எழுதிய பல தொடர் கட்டுரைகளும், ஆய்வுகளும் நூல்களாகவும் வெளிவந்தன. "வேஷ பிராமண வேதாந்த விவரம்" தொடங்கிப் பல்வேறு மூடநம்பிக்கைகளின் உண்மை வரலாற்றையும், இலக்கிய ஆராய்ச்சிகளையும் "சாக்கைய முனிவர்" வரை அவர் சுமார் இருபத்தி ஐந்து நூல்களையும், பல நூறு ஆய்வுக் கட்டுரைகளையும் எழுதி வெளியிட்டுள்ளார்.

'ஒரு பைசாத் தமிழன்', 'தமிழன்' ஆகிய இதழ்களில் வெளிவந்த 'பூர்வத் தமிழொளி' என்னும் கட்டுரைத் தொடர் அயோத்திதாசர் காலத்திலேயே 1912 இல் அவரது முதல் நூலாக வெளிவந்தது. இந்நூலுக்குப் "பூர்வத் தமிழொளியாம் புத்தரது ஆதிவேதம்" என்னும் பெயரிடப்பட்டது. இந்த நூலுக்கு எட்டுப் பக்கங்களில் பாயிரம் எழுதியுள்ளார் அயோத்திதாசர். அதில் பௌத்தத் தன்ம ஆய்வில் ஆழ்ந்தகன்ற தமிழிலக்கியப் பரப்பை அயோத்திதாசர் தனது நோக்கத்திற்கு ஏற்பப் பயன்படுத்தியதைக் குறிப்பிட்டுள்ளார். அயோத்திதாசர் காலத்திலேயே வெளிவந்த மற்றொரு நூல் "புத்த மார்க்க வினா விடை". 1912 இல் இந்நூலின் முதல் பதிப்பு வெளிவந்தது. 'தமிழன்' இதழில் திருக்குறளின் 55 அத்தியாயங்களுக்கு உரை எழுதியுள்ளார் அயோத்திதாசர். முழுவதுமாக எழுதியிருந்தால் அதுவும் அவர் காலத்திலேயே நூலாக்கம் பெற்றிருக்கக்கூடும்.

"சாக்கைய புத்த சங்கத்தார் விளக்கம்" என்னும் நூலையும் அயோத்திதாசர் எழுதியுள்ளார். அயோத்திதாசர் காலஞ்சென்ற பிறகு அவருடைய கட்டுரைகள் பல நூல்களாக வெளிவந்தன. 'தென்னிந்தியர் தேச புத்த தர்ம சாக்ஷியக்காரர்களில் ஒருவராகிய ஸ்ரீ அம்பிகை அம்மன் அருளிய திரிவாசகம் ஆத்திசுவடி, குன்றை வேந்தன், வெற்றி ஞானம்' (உரைகளுடன்); 'தென்னிந்திய தேச புத்த தர்ம சாக்ஷியக்காரர்களில் ஒருவராகிய பாரதமாதா ஔவையார் என்னும் ஸ்ரீ

அம்பிகையம்மன் வரலாறு'; 'வஜ்ஜிரசூசி'; 'தென்னிந்திய தேச புத்த தரும சாக்ஷியக்காரர்களில் ஒருவராகிய ஸ்ரீ முருகக் கடவுள் வரலாறு'; 'யதார்த்த பிராமண, வேஷ பிராமண வேதாந்த விவரம்'; 'அரிச்சந்திரன் பொய்கள்'; 'திருவள்ளுவர் வரலாறு'; 'இந்திரர் தேச சரித்திரம்'; 'விசேஷ சங்கைத் தெளிவு' உட்படப் பல நூல்கள் பின்னாட்களில் வெளிவந்தன.

அயோத்திதாசரின் சொற்பொழிவுகளும் நூல்களாக வெளி வந்தன. கபாலீசர் சரித்திர ஆராய்ச்சி, விபூதி ஆராய்ச்சி என்னும் அவரது உரை நூல்களில் பகுத்தறிவுப் பிரச்சாரத்தின் வேகம் உச்சத்தை எட்டியுள்ளது. அவருடைய பெண்ணியச் சிந்தனைகள் தொகுப்பும், திருக்குறள் 55 அதிகாரங்களின் உரைத் தொகுப்பும், அவருடைய கடிதங்கள் தொகுப்பும், அவருடைய சொற்பொழிவுகள் தொகுப்பும் அண்மையில் நூல்களாக வெளிவந்துள்ளன.

**இறுதிக்காலம்:**

எழுத்துப் பணிகளிலும், இயக்கப் பணிகளிலும் தீவிரமாகவும், கடும் உழைப்போடும் ஈடுபட்டிருந்த வேளையிலேயே தன் இறுதிக் காலம் நெருங்கிவிட்டதை உணர்ந்த அயோத்திதாசர், தம் குடும்பத்தினரையும், உறவினர்களையும் அழைத்துத் தன் இறுதியைச் சொல்லி விடைபெற்றார். ஆம். 5.5.1914 அன்று அவர் இறப்பெய்தினார். "உங்களுடைய தருமமும், கருமமுமே உங்களைக் காக்கும்" என்பதே அவரது இறுதியான வாக்கு.

அயோத்திதாசர் மறைந்த பொழுது சுடுகாடு வரை சென்று தமது இறுதி அஞ்சலியைச் செலுத்தினார் திரு வி. கல்யாண சுந்தரனார். அயோத்திதாசரின் பண்பு நலன்களை விளக்கி ஓர் இரங்கற்பாவையும் திரு.வி.க. இயற்றினார். திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புகள் நூலில் அயோத்திதாசப் பண்டிதரின் மிகத் தேர்ந்த மருத்துவப் புலமை குறித்து மதிப்பீடு உள்ளது. திரு. வி. க. வின் ஒன்பதாவது வயதில் அவர் பத்தியம் தவறவிட்டதால் கை, கால்கள் இயங்கா நோயால் மிகவும் துன்பமுற்றார். இரண்டு ஆண்டுகள் முயன்று அவருக்கு வைத்தியம் செய்து அயோத்திதாசர் குணமாக்கினார். இவ்வரலாற்றைத் திரு.வி.க. இரங்கற்பாவில் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார். மேலும், அயோத்திதாசரின் நூலறிவு, சொல்லாற்றல், மனிதநேயம் போன்றவையும் அந்த இரங்கற்பாவில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.

அயோத்திதாசரின் சிந்தனைத் தெளிவையும், அவரது முடிந்த முடிபான வரலாற்று உண்மை அடிப்படையில் அமைந்த எதிர்காலப் பேரொளி பற்றியும் சுருக்கமாகக் கூற வேண்டுமானால், அவருக்கு மாபெரும் எதிர் காலக் கனவொன்று இருந்தது. அது ஒரு புது உலகமாக இருந்தது. அந்த உலகம் சமத்துவ உலகமாக இருந்தது. அங்குச் சாதிய வேறுபாடுகள் இல்லை. ஆதிக்கச் சக்திகள் எதுவும் இல்லை. எல்லோருக்கும் சரிசமமான வாய்ப்பு உள்ளதாகக் கட்டமைக்கப்பட்ட உலகம் அது. அதேநேரம், அந்த மாறுபட்ட உலகம் தமிழ் பௌத்த அடையாளம் கொண்டதாக இருந்தது.

**நிறைவுரை:**
அயோத்திதாசப் பண்டிதரின் படைப்புலகத்தின் அடிப்படை வேத எதிர்ப்பு, பார்ப்பனிய எதிர்ப்பு, ஆதிக்க எதிர்ப்பு ஆகியவனாக இருந்தது. வேதம், சாஸ்திரம், ஆரண்யகம், உபநிடதம் இன்னும் இந்தியத் தத்துவங்களாகச் சொல்லப்படுபவை அனைத்தும் பௌத்தத்தில் இருந்து கைப்பற்றப்பட்டவையே என்றும், இன்னும் வெளிப்படையாகச் சொல்லப் போனால் திருடப் பெற்றவையே என்றும் அயோத்திதாசர் ஆணித்தரமாக எடுத்துரைத்தார். பல்வேறு இலக்கிய, இலக்கண ஆவணங்களில் இருந்து இதற்கான சான்றுகளை மேற்கோள்காட்டி அவர் நிறுவினார். அந்தச் சான்றுகள் மறுக்கப்பட முடியாதவைகளாக பழந்தமிழ் மற்றும் சங்க இலக்கியங்களில் நிறைந்துள்ளன.

தமிழ் இலக்கியங்களில் பெரும்பான்மையாக உள்ள சமண, பௌத்தக் காப்பியங்கள் பல வரலாற்று உண்மைகளைத் தன்னகத்தே பொதிந்து வைத்துள்ளன. அதன் முழுமையான வரலாற்றை விளக்குவதில், உரையாசிரியர்கள் உண்மையாக இருந்திருக்க வில்லை என்னும் அவல நிலை சமண, பௌத்த, ஆசீவகச் சமயங்கள் வெளியேற்றப்பட்ட காலகட்டத்தை நம் கண்முன்னே கொண்டு வருவதில் ஆச்சரியம் ஏதும் இல்லை. பின்னாட்களில் ஓலைச் சுவடிகளைத் தேடிப் பதிப்பித்தவர்களில் பண்டிதரைத் தவிர அனைவருக்குள்ளும் இருந்த பார்ப்பனியமும், பக்தி இலக்கியக் காலத்துச் செல்வாக்கின் நீட்சியும், தெரிந்த, தெரியவேண்டிய மீதி உண்மைகளையும் மறைக்கும் அளவிற்குக் கொண்டு சென்று விட்டன.

இப்படியாக அழித்தொழிக்கப்பட்ட ஓர் இனத்தின் உண்மையான வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்து கட்டமைக்கும் முயற்சியைச் செய்தவர் அயோத்திதாசர் ஒருவரே. பக்தி இலக்கியங்களைத் தவிர்த்து தமிழின் அத்தனை இலக்கிய, இலக்கண நூல்களும் தமிழர்களின் வாழ்வியல் நெறிகளைத் தன்னகத்தே கொண்டிருப்பதும், இந்தியச் சிந்தனை மரபுகள் முழுமையும் தமிழ் இலக்கியங்களில் மட்டுமே ஆதிக்கக் கலப்பற்றும், வைதீகக் கலப்பற்றும் (இடைச்செருகல்கள் தவிர்த்து) இருப்பதை அயோத்திதாசர் ஆய்ந்துரைத்தார். அதனடிப்படையில் சமணமும், பௌத்தமும் தமிழர் சமயங்களாகவும், குறிப்பாகப் பௌத்தம் என்பதே தமிழ் பௌத்தம் தான் என்றும் முதன்முதலாக அடையாளப்படுத்திய வரும் அயோத்திதாசரே.

புத்தரின் திரிபிடகங்களின் தோற்றம் தொடங்கி அவை திரிபேதமாக, திரிவேதமாக உருமாறிய வரலாறு, திரிபிடகம் மற்றும் திரிக்குறள் கருத்துக்களே வேதங்களாக மாற்றுவிக்கப்பட்ட வரலாறு, திராவிடர்களின் தனித் தன்மையும், அவர்களது மொழியும் மாற்றிக் கட்டமைக்கப்பட்ட வரலாறு என்று ஓர் அகழ்வாராய்ச்சியைப் போல் தோண்டித் துருவி வரலாற்று உண்மைகளைத் தேடி எடுத்துத் தமிழர்களுக்குத் தந்தவர் அயோத்திதாசர்.இருபதாம் நூற்றாண்டில் திராவிட இயக்கங்கள் முன்வைத்த ஆரியம், வைதிகம், பார்ப்பனிய எதிர்ப்பு, திராவிட இனத்தின் மேம்படுத்தப்பட்ட வரலாறு, உலக நாகரிகங்களில் திராவிட நாகரிகத்தின்

தொன்மை, மேன்மை, தமிழ் மொழியின் தொன்மை மற்றும் இலக்கிய ஆளுமை இவை அனைத்தையுமே பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே ஆழமாக ஆய்வு செய்துத் தமிழர்களுக்குக் கொடையாகத் தந்தவர் அயோத்திதாசர்.

மேற்சொன்ன கூறுகளில் திராவிட இயக்கத்தின் நோக்கம் பண்டிதர் அயோத்திதாசரின் ஆய்வுகளோடு ஒத்திசைவாகப் போனாலும், தந்தை பெரியாரின் பகுத்தறிவு, கடவுள் மறுப்பு, மத மதிப்பீடுகள் ஆகியவற்றோடு அயோத்திதாசரின் இவை பற்றிய கருத்துக்களோடும், இவற்றிற்காக அவர் முன்வைக்கும் தீர்வுகளோடும் குறிப்பிடும்படியான முரண்கள் இருப்பதை முன்னரே ஒரு சில ஆய்வாளர்கள் சுட்டிக் காட்டியுள்ளனர். அதேநேரம் திராவிட இயக்கம் முன்வைத்த ஆரிய எதிர்ப்பு, முற்றான வடமொழி எதிர்ப்பு ஆகியவை தமிழர்களின் இலக்கியச் செல்வங்களை வளர்த்தெடுத்த பூர்வகுடிச் சமயங்களையும் சேர்த்தே எதிர்ப்பின் வரை முறைக்குள் கொண்டு வந்துவிட்ட மிகவும் நுட்பமான சேதியைத் திராவிட ஆய்வாளர்களோ, தமிழறிஞர்களோ சரிவர உணரவில்லையோ என்ற ஐயம் எழுகிறது.

இந்நிலையில் திராவிட இயக்கம், இருபதாம் நூற்றாண்டில் மக்கள் இயக்கமாகப் பெரிதும் பரவிய போதிலும், தமிழரின் பண்பாட்டு மீட்டுருவாக்கத் தளத்தில் திராவிட இயக்கத்தின் கருத்தியல் பின்னடைவு இந்த நூற்றாண்டில் வெளிப்படையான விமர்சனத்துக்கு உள்ளாகி வருகிறது. இந்தத் தவறு அயோத்திதாசர் காலம் தொடங்கி இந்த இரண்டு நூற்றாண்டுகளாக மட்டும் நடைபெற்று வரவில்லை. புத்தரின் மறைவிற்குப் பிறகான 2500 ஆண்டுகளாகத் தொடர்ந்து சிறிது சிறிதாக நடைபெற்று வந்த இன, மொழி, பண்பாட்டு அழிப்பு வரலாறுகளைத் தான் அயோத்திதாசர் சுட்டிக்காட்டி, அதற்கும் தீர்வாகத் தமிழ் பௌத்தம் என்ற மாற்று வழியை அடையாளம் காட்டிச் சென்றார்.

அது ஒன்றுதான் தீர்வா என்றும், அவர் சொன்னதை அவருக்குப் பின் வந்த திராவிட இயக்கங்கள் ஏற்கவேண்டும் என்றும் விவாதித்துக் கொண்டிருப்பதை விட, அயோத்திதாசர் சுட்டிக்காட்டிய பண்பாட்டு அழிவுகளை, புறச் சமயங்கள் என்று பார்க்காமல் பூர்வகுடி மக்களின், ஆதித் தமிழ் மக்களின், சிந்துவெளி மக்களின் தொடக்கக் காலச் சிந்தனை மரபின் மீட்டெடுப்பு இயக்கமாகத் தமிழர்களால் உணரப்பட்டால், அயோத்திதாசர் முன்வைத்த தீர்வுகளும், திராவிட இயக்கக் கருதுகோள்களும் ஒரு புள்ளியில் சந்தித்து, ஒரே அலைவரிசையில் பயணிக்கும். அந்நிலையில் தமிழின, மொழி, பண்பாட்டின் உண்மையான படிவங்கள் வெளிவரும். அதன் வழியே தமிழினத்தின் அடையாளமும், பெருமைகளும் உலகளவில் பேசப்படுவதும், ஏற்கப் படுவதும் நிகழும்.

**பண்டிதர் அயோத்திதாசர் குறித்த கட்டுரைக்கு உதவியவை:**
பண்டிதர் அயோத்திதாசர் பற்றிய நூல்கள்-
1. பண்டிதர் அயோத்திதாசர், கௌதம சன்னா, சாகித்திய அகாடமி வெளியீடு

2. அயோத்திதாச பண்டிதர் நினைவு நூற்றாண்டு மலர். தொகுப்பு கௌதம சன்னா. விடுதலை சிறுத்தைகள் கட்சி வெளியீட்டுப் பிரிவு

3. சாகித்திய அகாடமி, தலித் சாகித்திய அகாடமி ஆகியவை பண்டிதர் அயோத்திதாசர் குறித்து வெளியிட்ட நூல்கள்.

ஆய்வாளர்கள் - பெ.சு. மணி, ம.மதிவண்ணன், கௌதம் சன்னா, ஸ்டாலின் ராஜாங்கம், பெ. விஜயகுமார் ஆகியோரின் நூல்களும், ஆய்வுக் கட்டுரைகளும்.

அயோத்திதாசர் குறித்துப் பல்வேறு இதழ்களில் நான் எழுதிய கட்டுரைகள்.

மதுரை மன்னன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் புலவர் மாங்குடி மருதனார் பாடியது மதுரைக்காஞ்சி என்னும் பாடல். பத்துப்பாட்டு நூல்களுள் ஆறாவதாக அமைந்த இப்பாடல், 782 அடிகளைக் கொண்டு பத்துப்பாட்டின் பாடல்களுள் மிகப் பெரிய பாடலாக அமைந்துள்ளது. இதன் பெயருக்கேற்றவாறு, இப்பாடல் 202 அடிகளில் அன்றைய மதுரை நகரின் அமைப்பை மிக விரிவாக எடுத்தியம்புகிறது. இதிலிருந்து மதுரை நகரின் உட்பகுதி ஏறக்குறைய 2000 ஆண்டுகாலமாக, மிகப்பெரும் மாற்றங்களுக்கு உட்படாமல் இருந்து வந்திருக்கிறது என அறிகிறோம்.




1.இன்றைய மதுரை

இந்த வீதிகளின் அமைப்பைக் காட்டும் படம் இங்கே கொடுக்கப்பட்டுள்ளது.

மதுரைக்காஞ்சி காட்டும் மதுரையைப் பார்ப்பதற்கு முன்னர், இன்றைய மதுரையின் உட்பகுதியை ஓரளவு உற்று நோக்குவோம். மதுரையின் மையப்பகுதியாக இருப்பது மீனாட்சியம்மன் கோவிலாகும். இது 15 ஏக்கர்

பரப்பளவில் அமைந்துள்ளது. கிழக்கு மேற்காக 847 அடியும், தெற்கு வடக்காக 792 அடியும் கொண்டு ஏறக்குறைய ஒரு சதுர வடிவில் சுற்றுச்சுவருடன் அமைந்துள்ளது. இந்தச் சுற்றுச் சுவருக்கு உட்புறமான நான்குபக்கங்களிலும் தெருக்கள் உள்ளன. இவை ஆடி வீதிகள் எனப்படும். இவை அமைந்திருக்கும் திசையினைப் பொருத்து, இவை (கிழக்கு ஆடி வீதி) கிழக்காடிவீதி, தெற்காடிவீதி, மேற்காடிவீதி, வடக்காடி வீதி என்று அழைக்கப்படும். இந்தச் சுற்றுச்சுவருக்கு நான்கு திசைகளிலும் வாசல்களுண்டு. மேலும் இந்தச் சுற்றுச்சுவர்களுக்கு வெளிப்பக்கமாக நான்கு திசைகளிலும் தெருக்கள் உள்ளன. இவை சித்திரை வீதிகள் எனப்படும். இவையும் கிழக்குச் சித்திரைவீதி, தெற்குச் சித்திரை வீதி எனத் தாம் இருக்கும் திசைகளைப் பொருத்துப் பெயர்களைப் பெறும். இந்தச் சித்திரை வீதிகளுக்குச் சற்றுத் தள்ளி நான்கு பக்கங்களிலும் தெருக்கள் உண்டு. அவை ஆவணிமூல வீதிகள். இந்த ஆவணிமூல வீதிகளுக்குச் சற்றுத்தள்ளி நான்கு பக்கங்களிலும் மாசி வீதிகள் உள்ளன. இந்த மாசிவீதிகளுக்குச் சற்றுத்தள்ளி நான்கு பக்கங்களிலும் வெளிவீதிகள் உள்ளன.

சங்ககால மதுரையில் நகரின் மையப்பகுதியாக அரசனின் அரண்மனை இருந்ததாக அறிஞர்கள் கருதுகின்றனர். இதைப் பரிபாடல் அடிகளால் அறிகிறோம். அரண்மனையைச் சுற்றி ஆடி வீதிகள், சித்திரை வீதிகள், ஆவணிமூல வீதிகள் இருந்திருக்கின்றன. ஆவணிவீதிகளுக்குச் சற்றுத் தள்ளி வெளியே நகரின் கோட்டை அமைந்திருக்கிறது. கோட்டையைச் சுற்றி அகழி இருந்திருக்கிறது. அகழியை ஒட்டி நான்கு பக்கங்களிலும் வெளிவீதிகள் இருந்திருக்கின்றன. அதாவது இன்றைய மாசி வீதிகள்தான் பாண்டியர் காலத்து வெளிவீதிகள். இதற்குச் சான்றுகள் இன்றும் இருக்கின்றன.

முதலாவதாக, மேல ஆவணிமூல வீதிக்கும், இன்றைய மேல மாசி வீதிக்கும் இடையில் ஒரு சிறிய வீதி மேலப் பாண்டியன் அகில் தெரு என்ற ஒரு பெயரில் இருக்கிறது. அகழி என்பது அகழ் ஆகிப் பின்னர் அது அகில் ஆகிவிட்டது. அகழி என்பது கோட்டைக்கு வெளியில் இருப்பது. எனவே பாண்டியர் காலத்தில் மேல ஆவணி மூல வீதிக்கும், மேல மாசி வீதிக்கும் இடையில் கோட்டையும், கோட்டைக்கு வெளிப்புறமாக, மேல மாசி வீதியைத் தொட்டுக்கொண்டு அகழியும் இருந்திருக்கவேண்டும். எனவே இன்றைய மேலமாசிவீதி அன்றைய வெளிவீதி என அழைக்கப்பட்டிருக்க வேண்டும். சங்க கால மதுரையின் மேற்கு எல்லை இதுவே. இதேபோல் மற்ற மூன்று பக்கங்களிலும் கோட்டையும் அகழியும் இருந்து, கோட்டை இடிக்கப்பட்டு அகழி தூர்க்கப்பட்டதற்குச் சான்றுகள் உள்ளன. இப்போது அந்தத் தெருக்கள் பெயர் மாற்றம் பெற்று அடையாளம் அற்றுப்போய்விட்டன. வடக்கே சங்கீத விநாயகர் கோவில் தெரு, வித்துவான் பொன்னுசாமி பிள்ளை தெரு எனப் பெயர் மாற்றம் பெற்ற இந்த வடக்குப் பாண்டியன் அகிழ்தெரு, முதலில் பள்ளத்தெரு என்று அழைக்கப்பட்டிருக்கிறது. அகழியைச் சரியாக மூடாததால் தெரு பள்ளமாக இருந்தபோது இந்தப் பெயர் பெற்றது எனலாம். தெற்குப் பக்கத்தில் இதன் பகுதி ஜடாமுனிகோவில் சந்து எனப் பெயர்பெற்றிருக்கிறது.

கிழக்குப்பக்கம் பாண்டியர் கோட்டை இருந்ததற்கான இரண்டு அடையாளங்கள் இன்றும் உள்ளன. கீழஆவணி மூலவீதியிலிருந்து கீழமாசிவீதிக்குச் செல்லும் தெரு இப்போது அம்மன் சன்னதித் தெரு எனப்படுகிறது. இந்தப் பகுதியின் நடுவில் ஓர் உயரமான வாயில் இருக்கிறது. இதற்கு விட்டவாசல் என்று பெயர். அதாவது, நாயக்கர்கள் பாண்டியன் கோட்டையைத் தகர்த்தபோது இடிக்காமல் விட்டுவிட்ட வாசல்பகுதி இது. வரலாற்றுப் புகழ் மிக்க இந்த அமைப்பு இன்று ஆக்கிரமிப்பாளர்களால் பொலிவிழந்து பார்ப்போரின் கண்களிலிருந்து நீரை வரவழைக்கும் நிலையில் உள்ளது. இந்த வாசலின் உயரே ஒரு கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. 1935-ஆம் ஆண்டு பெப்ருவரி மாதம் முதலாம் நாள் அன்றைய நகர் நிர்வாகப் பொறியாளராக இருந்த ஜி.எம்.பிலிப் என்பவரால் பொறிக்கப்பட்ட கல்வெட்டு Ancient Monument என்ற தலைப்பில் இவ்வாறு கூறுகிறது.



Madurai - Pandiyan Fort Gate - விட்டவாசல் - Engineer G.M.Philip

**2.விட்டவாசல்-1**

THIS STRUCTURE WAS FORMERLY THE EASTERN GATE WAY OF THE OLD PANDIAN FORT. ANY PERSON DESTROYING, DEFACING, REMOVING, ALTERING OR IN ANY WAY INJURING ANY PART OF IT OR CAUSING IT TO BE SO DAMAGED WILL BE PROSECUTED. (S.D) G.M.PHILIP. 1-2-35. EXECUTIVE ENGINEER

“இந்தக் கட்டிடம் முன்னர் பண்டைய பாண்டியன் கோட்டையின் கிழக்கு வாயிலாக இருந்துள்ளது. இதை அழிக்கவோ, சிதைக்கவோ, உருமாற்றம் செய்யவோ அல்லது எவ்விதத்திலேனும் இதற்கு ஊறு விளைவிக்கவோ செய்பவர்கள் தண்டிக்கப்படுவார்கள்” என்பதே அச் செய்தி. குறைந்தது 700 ஆண்டுக்காலப் பழமையைக் கொண்ட இந்த ஒப்பற்ற வரலாற்றுச் சின்னம் நம்மவர்களாலேயே இப்போது பாழ்படுத்தப்பட்டிருப்பதைப் பாருங்கள்.



View from East Avani Moola Street towards East Masi Street - away from temple

3. விட்டவாசல் -2



View from East Masi Street towards East Avani Moola Street - towards Temple

4. விட்டவாசல் -3

இந்த வாயில் ஒரு மன்னனின் கோட்டை வாயிலாக இருந்தது என்னும் அளவுக்கு அழகும் பொலிவும் உள்ளதாகத் தோன்றவில்லை என்பது உண்மையே. ஆனால் இது பல அழிவுகளைச் சந்தித்திருக்கிறது என்பதை நினவிற்கொள்ளவேண்டும். இதற்கு இன்னொரு காரணமும் உண்டு. இப்போது கிழக்குக்கோபுரம் என்று அழைக்கப்படும் வாயிலே சங்ககாலப் பாண்டியர் காலத்தில் பாண்டியர் அரண்மனைக்கு முதன்மை நுழைவாயிலாக இருந்தது. இதனுள் நுழைந்து நேரே சென்றால் மன்னனின் அரசவை இருந்திருக்கும். களப்பிரர்க்குப் பின்னர் வந்த இடைக்காலப் பாண்டியர் காலமான 7-ஆம் நூற்றாண்டில் இதுவே சிவன் கோவில் சன்னதியாக இருந்தது. இந்தக் கிழக்குக் கோபுர வாயிலே அன்றைய கோயில் வளாகத்துக்கு ஒரே நுழைவாயிலாக இருந்திருக்கும். எனவே அதற்கு நேரே செல்லும் தெரு கோட்டை மதிலை அடையும் இடத்திலேயே கோட்டைக்குரிய முதன்மை வாசல் இருந்திருக்கும். அதன் பின்னர் பிற்காலப்பாண்டியர் காலமான கி.பி.12-ஆம் நூற்றாண்டில்தான் அம்மன் சன்னதி உருவாக்கப்படுகிறது அதற்கும் பின்னர் பிற்காலப்பாண்டியர் ஆட்சியின் இறுதிக்காலத்தில்தான் இந்த அம்மன் சன்னதி விரிவாக்கம் செய்யப்படுகிறது.




5. மதுரை - மீனாட்சி கோவில் - கிழக்கு வாசல் - புதுமண்டபம் - ராயர் கோபுரம்

எனவே கோட்டைக்குரிய முதன்மை வாயில் இந்த அம்மன் சன்னதிக்கு நேரே இருக்கும் பண்டைய பாண்டியர் கோட்டை வாயில் அல்ல என்பது புரியும். அந்த முதன்மை வாயில் இன்றைய புதுமண்டபத்துக்கு நேர் கிழக்கே இருக்கும் ராயர்கோபுரமே என்பது தெளிவு. அதனை இப் படம் தெளிவுபடுத்தும். படத்தில் வலக்கோடியில் unfinished Gopuram என்று காட்டப்பட்டிருக்கும் பகுதியே சங்க கால மதுரை நகரின் முதன்மை வாயிலாக இருந்திருக்கும். இங்கே இருந்த அந்த அழகும் பொலிவும் மிக்க முதன்மை வாயிலை திருமலை நாயக்கர் இடித்துவிட்டு அதைவிட மேலும் பொலிவுள்ள கோபுரமாகக் கட்ட எண்ணியுள்ளார். மிகவும் அருமையான வேலைப்பாடுகளுடன் கூடிய பக்க மதில்களைக் கொண்ட இரு பெரும் தூண்களை அவர் நிறுவினார். இது இன்றும் 50 அடி உயரத்துக்குக் கம்பீரமாகக் காட்சியளிக்கிறது. ஏதோ ஒரு காரணத்தால் இந்தக் கோபுரம் முற்றுப்பெறவில்லை. சங்கப் பாண்டியரின் முதன்மை வாயில் இருந்த இடம் இன்று மிகவும் பொலிவிழந்து நிற்கிறதைப் பாருங்கள்.



unfinished Raya Gopura - 'Photographic Views in Madurai' - Linnaeus Tripe - 1858 - Tirumala Nayak began the construction of a new gopuram which was never completed. The most remarkable features are the 4 monolithic pillars measuring over 50 feet high. View from East

**6.ராயர் கோபுரம் -1**

பாண்டியர் மதுரையின் நுழைவாயிலாக இருந்த இடம் – பின்னர் முடிவுறா ராய கோபுரம் –

ஆங்கிலேயர் காலத்திலும் இன்றும் – கீழமாசிவீதியிலிருந்து கிழக்குக் கோபுரம் நோக்கி -



Raya Gopuram from the west of the Meenakshi temple with the 4 monolithic pillars measuring over 50 feet high - 'Photographic Views in Madurai ' (Madras, 1858) - by Linnaeus Tripe - 1858.

**7.ராயர் கோபுரம் -2**

பாண்டியர் மதுரையின் நுழைவாயிலாக இருந்த இடம் – பின்னர் முடிவுறா ராய கோபுரம் –
ஆங்கிலேயர் காலத்திலும் இன்றும் – கீழ ஆவணிமூலவீதியிலிருந்து கீழமாசி வீதி நோக்கி -
மாசி வீதிகளுக்கும் உட்புறத்தில் பாண்டியன் அகழியும் அதனை அடுத்துக் கோட்டையும் இருந்ததற்கான சான்று இன்னொன்றும் உள்ளது. கீழேயுள்ள படத்தில் நீங்கள் காண்பது இன்றைய கீழமாசிவீதியின் ஒரு பகுதி.




*மதுரை – 1793*
*கீழமாசி வீதி - எதிரில் : மகால் கோட்டை மதில் - கீழ் வெளி பக்கம் – பழைய அகழி (தூர்ந்துபோனது)*

**8. கீழமாசி வீதி - காவல் கோபுரம் - 1793**

இங்கிருக்கும் கட்டடத்தின் ஒரு பகுதியை நீங்கள் இன்றும் பார்க்கலாம். இங்குக் காணப்படும் வீதியே கீழமாசிவீதி. அதனை அடுத்து வலப்புறம் கருப்பாக இருப்பது அங்கிருந்த அகழியை மூடியதால் ஏற்பட்ட பள்ளம். இதன்மேல்தான் இன்றை கீழமாசிவீதிக் கடைகள் கட்டப்பட்டுள்ளன. இதே கட்டிடம் மீண்டும் 1880-களில் எடுக்கப்பட்டுள்ளது. கீழமாசிவீதியில் 1990-களில் எடுக்கப்பட்ட அதே இடத்துடன் ஒப்பிட்டுக்காட்டப்பட்டுள்ளது.




9.கீழமாசி வீதி - காவல் கோபுரம் - 1880 - 1990

எனவே, சங்ககால மதுரை இன்றைய மதுரையின் நான்கு மாசிவீதிகளுக்கும் உட்பட்ட பகுதிதான் என்பது மிகத்தெளிவாகத் தெரிகிறது. கீழேயுள்ள படத்தில் இது சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.




10.இன்றைய மதுரைப் படத்தில் அன்றைய மதுரை

சிவப்புக்கோடுகள் மதுரையின் கோட்டை மதில்கள். நீலநிறக்கோடுகள் கோட்டைக்கு வெளியே அமைந்த அகழி. இடைக்காலப் பாண்டியர் காலத்துக்கும் முற்பட்ட களப்பிரர் காலத்துக்கு முந்தைய சங்ககாலப் பாண்டியர் மதுரை இதுவேதான். ஆம், இந்தச் சிவப்புக் கோட்டுப் பகுதிதான் 2000 ஆண்டுளுக்கு மேலாய் வாழ்ந்துகொண்டிருக்கும் என்றுமுள தென்மதுரையாய் விளங்கும் மதுரை மூதூர். ஒரே ஒரு வித்தியாசம். சங்ககாலப் பாண்டியர் காலத்தில் நீலக்கோடுகளுக்கு நடுவில் இருந்தது மீனாட்சி கோவில் அல்ல. அது பாண்டியன் கோயிலாக இருந்தது. கோ என்றால் அரசன். இல் என்பது இல்லம். இதுவே சங்ககாலப் பாண்டியர் அரண்மனை.

**மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்**
**பூவொடு புரையும் சீரூர்; பூவின்**
**இதழகத்து அனைய தெருவம்; இதழகத்து**
**அரும்பொகுட்டு அனைத்தே அண்ணல் கோயில்**
**– பரிபாடல் திரட்டு 7/1-4**

என்ற பரிபாடல் அடிகளில் காணப்படுவது போல, தாமரையின் இதழ்களாய் நான்கு பக்கங்களிலும் விரிந்து கிடக்கும் தெருக்களுக்கு மத்தியில் அதன் பொகுட்டைப்போலப் பொலிவுடன் இருந்தது மன்னனின் அரண்மனை. இங்குக் குறிப்பிடும் அண்ணல் என்ற சொல் பாண்டிய மன்னனைக் குறிப்பதாக அனைத்து உரைகாரர்களும் கூறுகின்றனர்.

இதுதான் சங்ககால மதுரை. இது சங்க காலத்தில் எப்படி அமைந்திருந்தது என்பதை மதுரைக்காஞ்சிப் புலவர் கூறுகின்ற வழியே பார்க்கலாம். அன்றைய மதுரையின் முதன்மையான நுழைவாயில் இன்றைய எழுகடல் தெருவில் இருக்கும் ராய கோபுரம் ஆகும். இந்த வாயிலை ஒட்டித் தென் வடலாக அமைந்திருக்கும் அகழி நீண்டு படுத்திருக்கும். பூமியின் அடிப்பகுதி வரை ஆழமாக அமைந்திருந்த தெளிவான நீரைக்கொண்ட பெரும் பள்ளம் - மண்ணுற வாழ்ந்த மணி நீர்க் கிடங்கு (மது 351) என்கிறார் புலவர்.

இந்த அகழியை அடுத்து கோட்டையும் வாயிலும் அமைந்திருக்கின்றன. விண்ணுற ஓங்கிய பல்படைப் புரிசை - (352) வானளவு உயர்ந்து, அதில் பலவிதப் படைகலங்களைக் கொண்ட மதில் என்கிறார் புலவர். அகழியைத் தாண்டி உள்ளே செல்வதற்குரிய பாலத்தை அடுத்து நகருக்குள் நுழையும் வாயில் இருக்கிறது. வையை அன்ன வழக்குடை வாயில் என்கிறார் புலவர். அன்றைய வைகையில் ஓயாமல் தண்ணீரோடிக்கொண்டே இருந்தது. அதைப்போல மக்கள் ஓயாமல் நகருக்குள் செல்வதும், நகரைவிட்டு வெளியே வருவதுமாக ஓயாமல் நடமாடிக்கொண்டிருக்கிறார்கள். உள்ளே நுழைந்தவர்கள் முதலில் பார்ப்பது - ஆறு கிடந்தன்ன அகல் நெடும்தெரு - (359) அந்தக் கீழ ஆவணி மூலவீதி தென் வடலாக ஒரு பெரிய ஆற்றினைப் போல அகன்று நீண்டு கிடக்கின்றது. அதன் இரு பக்கங்களிலும் வான் வரை உயர்ந்த, பல சாளரங்களையுடைய நல்ல வீடுகள் இருக்கின்றன. முரசறைவோர் பேரொலியுடன் முரசறைந்து மக்களுக்கு செய்திகளை அறிவித்துக்கொண்டிருக்கின்றனர். மதுரையில் நுழைந்தவுடன் புலவர் நமக்குக்

காட்டுவது - ஓவுக் கண்டன்ன இரு பெரு நியமம் (365)- ஓவியத்தில் பார்ப்பதைப் போன்ற இரண்டு பெரிய கடைத்தெருக்கள். இவை என்னவாய் இருக்கும்?. நியமம் என்பது அங்காடி. எனவே இவை நாளங்காடி, அல்லங்காடி என்ற பகல் கடைத்தெரு, இரவுக்கடைத்தெரு ஆகிய இரண்டு கடைத்தெருக்கள். இவற்றில் முதலில் நாளங்காடியைப் புலவர் முதலில் குறிக்கிறார் (430). அடுத்து வடக்கு, மேற்கு, தெற்கு ஆவணிமூல வீதிகளைச் சுற்றிவிட்டு மீண்டும் இறுதியில் அல்லங்காடியைக் காட்டுகிறார் (544) எனவே நகரில் நுழைந்து வலப்பக்கம் திரும்பினால் கீழாவணிமூல வீதியின் வடக்குப்பக்கம் இருப்பது நாளங்காடி. அப்படியே ஆவணிமூல வீதியைச் சுற்றி மீண்டும் கீழாவணிமூலவீதிக்கு வந்தால் கீழாவணிமூலவீதியின் தெற்குப்பக்கம் இருப்பது அல்லங்காடி.

இன்று பெருநகரங்களில் கூட்டமான நேரங்களில் காவல் ஊர்திகள் (Police Van) பெரும் வீதிகளில் சுற்றிவருவதுபோல, அன்றைய மதுரையில் கூட்டமான ஆவணிமூல வீதிகளில் யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை, காலாட்படை ஆகியவற்றின் நடமாட்டம் எப்போதும் இருந்துகொண்டே இருந்தது. இனிப்புகள், பூக்கள், பூமாலைகள், இடித்த சுண்ணாம்பு, வெற்றிலை, பாக்கு, சங்கைச் சுட்ட சுண்ணாம்புத்தூள் ஆகியவற்றைத் தட்டுகளில் வைத்துக்கொண்டு தலைச்சுமையாக விற்போர் திரிந்துகொண்டிருப்பர்.

அடுத்து, நரைத்த கூந்தலையுடைய முதுபெண்டிர் வீடுவீடாகச் சென்று பூவிற்றுத் திரிகின்றனர். தம்மை நன்கு அலங்கரித்துக்கொண்ட இளம்பெண்கள் இளைஞருடன் சிரித்துப்பேசிக்கொண்டிருக்கின்றனர், அந்த நாளங்காடி கடைத்தெருவானது மிகுந்த ஆரவாரம் உடையதாக விழாக்கொண்டாடும் ஊர் போலக் காட்சியளிக்கின்றது. செல்வர்கள் தேர்களில் அங்குமிங்கும் விரைந்துகொண்டிருக்கிறார்கள். செல்வப் பெண்டிர் தம் வீட்டு மாடங்களில் இருந்தவாறு நகர்க் காட்சிகளை வேடிக்கைபார்த்துக்கொண்டிருக்கின்றனர்.

இவ்வாறாக, வடக்காவணிமூல வீதியைக் கடந்து மேலாவணிமூல வீதிக்கு வருகிறோம். அங்கு சிவன் கோயில், பௌத்த, அந்தணர், அமண் பள்ளிகள் வரிசையாக அடுத்தடுத்து இருக்கின்றன. அவற்றை அடுத்து மன்னனின் அறங்கூறவையமும், காவிதிப் பட்டம் பெற்றோரின் மனைகளும் இருக்கின்றன. அதையடுத்து வாணிகர் பகுதி தொடங்குகிறது. மலையிலும்,நிலத்திலும், நீரிலும் விளையும் பல்வேறு பண்டங்களாகிய மணிகள், முத்துக்கள், பொன் ஆகியவற்றை வாங்கிக்கொண்டு, அயல்நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பண்டங்களை அங்கே விற்கிறார்கள். அதையடுத்து நாற்பெருங்குழுவினர் கூடுமிடம் இருக்கிறது.

அதையடுத்து, மேலாவணிமூல வீதி முடிந்து, தெற்காவணிமூல வீதி தொடங்குகிறது. இதைக் காட்டும் புலவர் கோடு போழ் கடைநரும் - மது-511 என்று கூறுகிறார். கோடு என்பது சங்கு. அந்தக் காலத்தில் சங்கை அறுத்து வளையல்கள் செய்வார்கள்.

இன்றைக்கும் மேலாவணிமூலவீதியில் தெற்கு ஓரத்தில் வளையல்காரத்தெரு இருப்பதைப்பார்க்கலாம். அதையடுத்து தெற்காவணிமூல வீதி தொடங்குகிறது. இன்றைக்கும் அந்தத் தெருவுக்கு நகைக்கடைத் தெரு என்று பெயர். அங்கு நடைபெறும் தொழில்களைப் புலவர் குறிப்பிடுகிறார் பாருங்கள்.

**---------- ------------ திருமணி குயினரும்,**
**சூடுறு நன் பொன் சுடர் இழை புனைநரும்,**
**பொன் உரை காண்மரும், --- மது 511-513.**
**---------------- ------------- அழகிய மணிகளைத் துளையிடுவாரும்,**
**சுடுதலுற்ற நல்ல பொன்னால் விளங்கும் அணிகலன் செய்வாரும்,**
**பொன்னை (உரைத்து அதன்)மாற்றைக் காண்பாரும்,**

அண்மைக் காலம்வரை தெற்காவணி மூல வீதியின் இறுதிப்பகுதியில் மத்தியஸ்தர் கடை உண்டு. ஏதேனும் நகைக்கடையில் வாங்கின தங்கத்தின் மாற்றின் மீது ஐயம் கொண்டால் இந்த மத்தியஸ்தர் கடையில் சரிபார்த்துக் கொள்ளலாம். இதைத்தான் அன்றைய பொன் உரை காண்மர் என்று புலவர் கூறுகிறார். இந்த மத்தியஸ்தர் கடையுடன் நகைக்கடைப் பகுதி முடியும், இன்றைக்கு இது நீட்டிக்கப்பட்டிருக்கிறது. அன்றைக்கு அங்குத் துணிக்கடைகள், செப்புப்பாத்திரக் கடைகள், பூக்கடைகள், வாசனைப் பொருள்கடைகள் ஆகியவை இருந்திருக்கின்றன. இந்தப் பகுதியை ஒட்டி அண்மைக்காலம்வரை உணவு விற்பனைசெய்யப்பட்டு வந்துள்ளது. அதற்குச் சோற்றுக்கடைத் தெரு என்று பெயர் இருந்தது. பிரபல நாடக நடிகரான தி.க.சண்முகம் அவர்களின் வாழ்க்கையைப் பற்றிய கட்டுரையில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது. “இருபதாம் நூற்றாண்டில் தொடக்கத்தில் நாடகக்கலையின் தலைமையிடமாக மதுரை திகழ்ந்தது. எனவே நாடக நடிகரான கண்ணுசாமிபிள்ளையின் குடும்பம் மதுரை சோற்றுக்கடைத் தெருவில் குடியிருந்தது. எனவே தி. க. சண்முகம் தெற்குச் சித்திரை வீதியில் உள்ள வெள்ளியம்பலம் என்னும் ஆரியவைசிய பள்ளியில் இரண்டாம் வகுப்பு வரை படித்தனர்” இந்தச் சோற்றுக்கடைகள் சங்ககால மதுரையிலேயே , அதுவும் இதே பகுதியில், இருந்ததாகப் புலவர் குறிப்பிடுகிறார் (மது. 527 - 535). அதன் ஒரு பகுதி இது.
.

**புகழ்படப்பண்ணிய பேரூன் சோறும்**
**கீழ் செல வீழ்ந்த கிழங்கொடு பிறவும்**
**இன் சோறு தருநர் பல்வயின் நுகர - மது. 533-535**

இதையடுத்து அல்லங்காடி இருப்பதாகப் புலவர் குறிப்பிடுகிறார். நாம் ஏற்கனவே குறிப்பிட்டபடி, இது கீழாவணிமூலவீதியின் தெற்குப் பகுதி.
இவ்வாறாக இந்த நான்கு ஆவணிமூல வீதிகளிலும் எப்போதும் ஆட்கள் நடமாட்டம் மிகுந்திருப்பதால், அவர்கள் தங்கள் கால்களை உரசிக்கொண்டு நெருக்கியடித்துத் திரிந்துகொண்டிருந்ததாகப் புலவர் குறிப்பிடுகிறார்.

நால் வேறு தெருவினும் கால் உற நிற்றர - மது. 522.ஆக, ஈராயிரம் ஆண்டுகட்கு மேலாக, மதுரை நகரத்தின் மையப்பகுதியான மாசிவீதிகளுக்குட்ட பகுதி சீருடனும் சிறப்புடனும் பெரிதான மாற்றங்களின்றி, நாயக்கர் கால விரிவாக்கத்திற்கு முன்னர் வரை, பொலிவுடன் திகழ்ந்தது என மதுரைக்காஞ்சி மூலம் அறிகிறோம்.

# 35 • வறல் குழல் சூட்டின், வயின் வயின் பெறுகுவிர்

• • • முனைவர் தேமொழி

ஒய்மா நாட்டை ஆண்ட தலைவன் நல்லியக்கோடன் என்ற வள்ளல். நல்லியக்கோடனைப் பாடிப் பரிசில் பெற்று அவனது தலைநகரான கிடங்கில் என்ற ஊரிலிருந்து திரும்புகிறான் பாணன் ஒருவன். வழியில் வறுமையில் வாடிய பாணன் ஒருவனைப் பார்த்து வருந்தி, அவனுக்கு உதவுவதற்காக நல்லியக்கோடனைச் சென்று பார்த்து உதவி பெறுவாயாக என்று வழி கூறி ஆற்றுப்படுத்துகிறான்.

ஒய்மா நாட்டின் தலைநகருக்குப் போகும் வழியில் நல்லியக்கோடனின் ஆட்சிக்கு உட்பட்ட எயிற்பட்டினம், வேலூர், ஆமூர் ஆகிய நகரங்கள் உள்ளன என்று வழி கூறும் பாணன் வறிய பாணனிடம் கூறுகிறான். வழியில் உள்ள நகரங்களின் அமைப்பையும், நெய்தல் நில மக்களின் வாழ்க்கை முறையையும் இப்பாடலின் மூலம் விளக்குகிறார் புலவர் நத்தத்தனார் தாம் இயற்றிய சிறுபாணாற்றுப்படை நூலில்.



ஆற்றுப்படுத்தும் பாணன், குடும்பத்தோடு எதிர்ப்பட்ட வறிய பாணனிடம் பின்வருமாறு கூறுகிறான்: வழியில் கடற்கரையை ஒட்டி அமைந்துள்ள எயிற்பட்டினம் என்ற ஊரில் கடல் அலைகள் கொண்டு வந்து ஒதுக்கிய அகில் மரக் கட்டைகள் பார்ப்பதற்கு உறங்குகின்ற ஒட்டகங்கள் போன்று கிடக்கும். அத்தகைய அகில் மர விறகினால் தீ மூட்டிக் காய்ச்சி வடிகட்டிய கள்ளை மீனவப் பெண்கள் மீனவர்களுக்கு உணவாகக் கொடுப்பர். விறலியரோடு செல்லும் நீங்கள் கிடங்கில் கோமான் நல்லியக்கோடனைப் பாடியும் குழல் ஓசைக்கு ஏற்ப ஆடியும் செல்லும் பொழுது அதைக்கேட்டு மகிழும் மீனவர்களின் வீடுகள் தோறும், அவர்கள் மகிழ்ந்து கொடுக்கும் குழல் மீன் சூட்டைப் (நெருப்பில் சுடப்பட்ட குழல் மீன் கருவாடு) பெற்று உண்டு மகிழலாம் என்று கூறுகிறான். இச்செய்திகள் சிறுபாணாற்றுப்படை நூலின் 146 முதல் 163 வரையில் உள்ள அடிகளில் இடம் பெறுகின்றன.

சிறுபாண் ஆற்றுப்படை:

**பழம் படு தேறல் பரதவர் மடுப்பக்**
**கிளை மலர்ப் படப்பைக் கிடங்கில் கோமான்,**
**தளை அவிழ் தெரியல் தகையோன் பாடி,**
**அறல் குழல் பாணி தூங்கியவரொடு,**
**வறல் 'குழல் சூட்டின், வயின் வயின் பெறுகுவிர்'**

சிறுபாணாற்றுப்படையில் நெய்தல் நில மக்களின் உணவாக 'குழல் மீன்' குறிப்பிடப்படுகிறது.

"வறல் குழல் வயின் வயின் பெறுகுவிர்" (வரி: 163)

என்று சுடப்பட்ட குழல் மீனை விருந்தினர்க்கு அளித்து மகிழ்வர் நெய்தல் நில மக்கள் என்று குறிப்பிடும் வரி தமிழ் இணையக் கல்விக்கழகம் சேமிப்பில் உள்ள சிறுபாண் ஆற்றுப்படை ஓலைச் சுவடியில் அடிக்கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது.



நெய்தல் நிலத்தவர் பாணர்களை வரவேற்றுக் கொடுத்தவையாகச் சிறுபாணாற்றுப்படை குறிப்பிடும் குழல் மீன் என்பதன் விலங்கியல் பெயர் 'சின்காதாய்ட்ஸ் பைகுலேட்டஸ்' (Syngnathoides biaculeatus). இது ஆங்கிலத்தில் Alligator pipefish என்று குறிப்பிடப்படுகிறது. குழல் மீன் என்பது கடல் கொவிஞ்சி என்று வழங்கப்படுவதாகவும் தெரிகிறது.



தமிழகத்தின் கிழக்குக் கரையோரமாக (மன்னார் வளைகுடா மற்றும் பால்க் வளைகுடா பகுதிகளில்) 7 இனங்களைச் சேர்ந்த குழல் மீன்கள் கிடைப்பதாக அறிவியல் ஆய்வுக் கட்டுரை ஒன்று கூறுகிறது. அதில் அதிக அளவில் கிடைப்பது 'சின்காதாய்ட்ஸ் பைகுலேட்டஸ்' என்ற குழல் மீன் வகையாகும். இங்கு ஆழமற்ற கடற்பகுதியில் கடற்செடிகள், கடற்பாசிகள் மற்றும் இறந்த பவளப்பாறைகள் நிறைந்த பகுதியில் குழல் மீன்கள் வாழ்கின்றன.

மீன்களின் உருளையான, சுமார் முக்கால் அடி வரை வளரும் உருவ அமைப்பை ஒட்டியே தமிழ்ப் பெயரும் ஆங்கிலப் பெயரும் கொடுக்கப்பட்டுள்ளது. இது தனது உருவத்தையும் நிறத்தையும் ஒட்டிய கடற்தாவரங்களுக்கு இடையே தலைகீழாக மிதந்த வண்ணம் உள்ள, மெக மெதுவாக நீந்தும் மீன். அதன் வேகம் குறைவு என்பதால் எதிரிகளுக்கு உணவாகாமல் தப்பிக்கும் பொருட்டு அதன் உடல் அமைப்பு சூழலுக்கு ஏற்ப தகவமைந்த நிலையில் உள்ளது. தனது வளையக்கூடிய உடலால் செடிகளையும் பவழப்பறைகளையும் பற்றிக்கொள்ளும். (காணொளி காண்க: https://youtu.be/r5fWUPQOnSA)

**உதவிய தளங்கள்:**


[1] சிறுபாண் ஆற்றுப்படை ஓலைச் சுவடி, தமிழ் இணையக் கல்விக்கழகம்

- http://tamilvu.org/slet/suvadi/s1130/s1130sds.jsp?n=48
- http://www.tamilvu.org/courses/degree/d011/d0113/html/d0113443.htm

[2] Seahorses and pipefishes of the Tamil Nadu coast, Murugan A., Dhanya S., Rajagopal S., and Balasubramanian T.; Current Science 95(2): 253-260, 2008

- https://eurekamag.com/research/023/566/023566757.php

[3] Alligator pipefish - From Wikipedia:

- https://en.wikipedia.org/wiki/Alligator_pipefish

[4] காணொளி:

Alligator pipefish (Syngnathoides biaculeatus) #shorts

- https://youtu.be/r5fWUPQOnSA


-----

• • • சொ.வினைதீர்த்தான்

**பாடல்:-**

**அழித்துப் பிறக்கவொட்டா அயில் வேலன் கவியை அன்பால்**
**எழுத்துப்பிழை அறக் கற்கின்றிலீர் எரி மூண்டது என்ன**
**விழித்துப் புகை எழப் பொங்கு வெம் கூற்றன் விடும் கயிற்றால்**
**கழுத்தில் சுருக்கிட்டு இழுக்கும் அன்றோ கவி கற்கின்றதே.**
**(திரு அருணகிரிநாதர் அருளிய கந்தர் அலங்காரம், பாடல் - 2**

**பொருள்:-**

தன்னால் அழிந்தவர்களுக்குப் பிறப்பின்மையை வழங்கும் முருகனின் பெருமைகளைக் கூறும் பாடல்களை எழுத்துப் பிழை இல்லாமல் இன்று கற்பதை விடுத்துக் கொடியவனாகிய எமன் வீசுகின்ற பாசக் கயிறு நம் கழுத்தைச் சுருக்குப் போட்டு இழுக்கின்ற அன்று கற்பதால் என்ன பயன்?

நான் பக்திப் பாடல்களை இன்றைய வாழ்வியல் நெறிகளுடன் பொருத்திப் (Correlate) பார்த்து எண்ணிப்பார்ப்பதுண்டு.

பாடலில் எழுத்துப் பிழையின்றிக் கற்க வேண்டும் அதுவும் இன்றே கற்க வேண்டும் என்று அருணகிரிநாதர் வலியுறுத்துகிறார். ஏன் எழுத்துப் பிழையின்றிக் கற்க வேண்டும்? ஒலிப் பிழை, சொற்பிழை, எழுத்துப் பிழை இம்மூன்றும் பொருட் பிழைக்கு வழிவகுக்கும் பொருள் புரியாமல் படித்தால் தெளிவு பிறக்குமா? கற்றதானால் ஆய பயன் விளையுமா? சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவாரே உய்தி அடைவார்!

அடுத்துக் "கண் கெட்ட பிறகு சூரிய வணக்கமா?" "சாகப் போறபோது சங்கரா சங்கரா என்றால் என்ன பயன்?" "அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன்" என்றெல்லாம் கூறுவார்கள். எதனையும் உரிய காலத்தில் செயலாற்றினாலே தகுந்த பயன் விளையும்.

"ஒன்றே செய்; நன்றே செய்; இன்றே செய் என்கிறது தமிழ். தாமதிக்கப்பட்ட நீதி மறுக்கப்பட்ட நீதி என்பார்கள். "பருவத்தே பயிர் செய்" என்பதும் ஆன்றோர் வாக்கு.

**அன்றறிவாம் என்னாது அறம்செய்க மற்றது**
**பொன்றுங்கால் பொன்றாத் துணை**
**(குறள் எண்:36)**

பிற்காலத்தில் பார்த்துக் கொள்ளலாம் என்று எண்ணாமல் அறத்தினை உடனடியாகச் செய்யவேண்டும் என்கிறது வள்ளுவம். நாளை, நாளையென்றால் நாளை நம்முடையதா அல்லது நமனுடையதா என்று தெரியாத வாழ்வு இது. எனவே கற்கவேண்டியதை உரிய காலத்தில் கற்க வேண்டும். முருகன் ஞானம், செல்வம், அறிவு, மகிழ்ச்சி, மன நிம்மதி, இக பர சௌபாக்கியம் ஆகியவற்றின் குறியீடு என்பார்கள். எனவேஎழுத்துப் பிழையின்றிக் கற்பதும் உரிய காலத்தில் கற்பதும் அளவில்லா ஞானத்தையும் செல்வத்தையும் அனைத்தையும் அடைகிற வழி!

## 37 • பாடலுக்குச் சுவைகூட்டும் எதுகையும் மோனையும்

• • • இரா.மகேஸ்வரன்

நல்லா எகனை மொகனையா பேசறாண்டா! ஆனா செயல்ல ஒண்ணும் கிடையாது! என்று சொல்வார்கள்! நமது அரசியல்வாதிகளும் இப்படித்தான் எகனை மொகனையா பேசி நம்மை ஏமாளிகள் ஆக்கி வந்துகொண்டிருக்கிறார்கள்.

கவிதை படைப்பதில் இந்த எகனை மொகனை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. இது கவிதைக்குச் சுவை கூட்டும்.

அத்தகைய எதுகை மோனை பற்றி:
மோனை:
செய்யுளில் அடிதோறும் முதல் எழுத்து ஒன்றி வரத் தொடுப்பது மோனை எனப்படும். இதை அடி மோனை என்றும் சொல்வார்கள்.
எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு.
முதல் அடியின் முதல் எழுத்தும் இரண்டாம் அடியின் முதல் எழுத்தும் ஒன்றி வந்துள்ளதால் மோனை என்பார்கள்.

எதுகை:
அடி தோறும் முதலெழுத்து அளவொத்து (ஓசையில்) நிற்க இரண்டாம் எழுத்து ஒன்றி வர தொடுப்பது அடி எதுகை என்று அழைக்கப்படும்.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.
இந்த குறட்பாவில் முதல் அடியில் இரண்டாம் எழுத்தும் இரண்டாம் அடியில் இரண்டாம் எழுத்தும் ஒத்து வந்துள்ளது இதனால் இது எதுகை தொடை ஆகும்.

நாலடி கொண்ட சீருள் முதல் இரு சீர்களில் முதலெழுத்து ஒன்றி வர தொடுப்பது இணைமோனை எனப்படும்.
இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது

ஓர் அடியில் முதற்சீரிலும் மூன்றாம் சீரிலும் முதலெழுத்து ஒன்றி வருவது பொழிப்பு மோனை எனப்படும்.
துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை எண்ணிக்கொண் டற்று.

ஓர் அடியுள் முதல் சீரிலும் நான்காம் சீரிலும் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது ஒரூஉ மோனை எனப்படும்.
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்

ஓர் அடியுள் முதல் இரண்டு மூன்றாம் சீர்களில் முதலெழுத்து ஒன்றி வரத்தொடுப்பது கூழை மோனை ஆகும்.
தானம் தவமிரண்டும் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

ஓர் அடியுள் முதல் மூன்று நான்காம் சீர்களில் முதலெழுத்து ஒன்றிவரத்தொடுப்பது மேற்கதுவாய் மோனை எனப்படும்.
விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துள்நின்று டற்றும் பசி

ஓரடியுள் முதல் இரண்டு நான்காம் சீர்களில் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது கீழ்க்கதுவாய் மோனை எனப்படும்.
இருள் சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு

ஓர் அடியின் நான்கு சீர்களிலும் முதலெழுத்து ஒன்றி வரத் தொடுப்பது முற்று மோனை எனப்படும்
கற்க கசடற கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக

இதே போல் எதுகையும் 7 வகைப்படும் மோனையில் முதல் எழுத்து ஒன்றி வந்ததை போல இதில் இரண்டாம் எழுத்து ஒன்றி வரும். அந்த வகையில் இணை எதுகை, பொழிப்பு எதுகை, ஒரூஉஎதுகை, கூழை எதுகை, மேற்கதுவாய் எதுகை, கீழ்க்கதுவாய் எதுகை, முற்றெதுகை என ஏழு வகைப்படும்.

திரு. இரா.மகேஸ்வரன்,
கல்வி சார் நூலகர்,
பேராதனைப் பல்கலைக்கழகம்,
கண்டி, இலங்கை.

### காண்பன யாதும் தமிழே

காண்பன யாதும்
தமிழே
கற்பனவும் தமிழே
பாராளும் ஆங்கிலத்திற்கும்
பண்டைய கிரேக்கத்திற்கும்
இலத்தீனுக்கும்
செம்மை செய்த வடமொழிக்கும்
முந்தையது
யாதுமாகி நின்ற தமிழ்

பரவிக்கிடக்கும்
பாறைகளில்
அறுபதாயிரம்
கல்வெட்டாக
ஆயிரம் செப்பேடுகள்
பல்லாயிர
பனை ஓலைகளில்
விரவி யாதுமாகி
நிற்பது தமிழ்

தேமதுர
கொங்கு தமிழாய்
பாசக்கார
மதுரை தமிழாய்
எலெ என விளிக்கும்
நெல்லை தமிழாய்
மக்கா என
செப்பும்
குமரி தமிழாய்
யாதுமாகி
முக்காலமும் ஆகி
நின்ற நிற்கும் தமிழ்

### இனி(ய) தமிழ் மொழியே!

கீழடிப் பானையோட்டில்
கிறுக்கலாய் தமிழ்
பாறை சுவர்களிலும்
பரவி அறுபதாயிரம்
கல்வெட்டாக
ஆயிரம் செப்பேடுகளாக
பல்லாயிரம் பனையோலையாக
நின்றதும் தமிழ்

நான்கு - ஐந்து நூற்றாண்டில்
பாண்டி நாட்டில்
வட்டெழுத்தாக
சோழ நாட்டில் தமிழாக
சோபித்து நின்றதும் தமிழ்

கலைக்கோயில்
பல்லவர் கோன்
காலத்தே
அழகு தொங்கலுடன்
கிரந்த எழுத்தாகி
இராஜராஜன் காலத்தே
எங்கும் ஓர் எழுத்தாகி
கடல் கடந்தும்
கல்லெழுத்தாகி
ஈராசு, எல்லீசு
போப் துரைகளை
ஈர்த்து
கணிப்பொறி காலத்தே
கனிந்த எழுத்தாகி நின்ற
இனி(ய) தமிழ் மொழியே!

### 39 • காதலுக்குமுன்

• • • தீனதயாளன்

காதலுக்குமுன்
எதுவும் பெரிதல்ல
எதுவும் ஒரு பொருட்டல்ல

அன்பு சுகம்  வேண்டி
தானேயே  ஒழியும்
கண்ணீரைப் பொழியும் - ஏன்
செந்நீரையும் சொரியும்.

துணைநலம் ஏங்கி
உடலைத் துடிக்கவிடும்
உயிரைத் தவிக்கவிடும் - ஏன்
வாழ்வையும் தொலைத்துவிடும்.

காதலின் உயர்வுக்கு - பிற
எல்லாம் சிறிதே!
எல்லாம் குறுந்துகளே!

### 40 • கடந்த கால நினைவுகளின் அணிவகுப்பு

• • • தமிழ்மைந்தன் சரவணன்

யாரோ எழுதிய பாடல் அல்ல
இது நானே எழுதிய கவிதையம்மா
விதைபோல் மனதிலே விழுந்ததம்மா
ஒரு கதையாய் இதயத்தில்
வளர்ந்ததம்மா

கடந்த கால நினைவுகளின்
அணிவகுப்பு
எதிர்காலக் கனவுகளின் படப்பிடிப்பு
குழந்தைப் பருவத்தின் ஒரு நினைப்பு
குதித்தோடும் முயல் போல்
துறுதுறுப்பு

நடக்கும் நாட்களின் சிறகசைப்பு
எதிர்வரும் நாட்களின் கையசைப்பு
எதிர்வரும் நாட்களின் கையசைப்பு

யாரோ எழுதிய பாடல் அல்ல
இது நானே எழுதிய கவிதையம்மா
விதைபோல் மனதிலே விழுந்ததம்மா
ஒரு கதையாய் இதயத்தில்
வளர்ந்ததம்மா
யாரோ எழுதிய பாடல் அல்ல

